உ

சிவமயம்.

# சகுந்தலைவிலாசம்.

முத்தமிழ்வல்லவராகிய

ம-ா-ஸ்ரீ-இராயநல்லூர்

## இராமசந்திரகவிராயர்

அவர்கள்

இயற்றியது

இஃது

கையெழுத்துப்பிரதிகளில்

பாடந்தோறும்வேறுபட்டிருத்தலைநோக்கி

இயற்றமிழாசிரியராகிய

முகவை

## இராமாநுசகவிராயர்

அவர்கள்-மாணுக்கருளொருவராகிய-நரசிங்கபுரம்.

வீராசாமிமுதலியாரால்-பரிசோதிப்பித்து

தவிசெட்டி

## இரங்கபாஷியகாரநாய்க்கர்

சாமல

## நரசூநாய்க்கர்

இவர்களால்

பாரதி-அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

இதன் விலை - ரூ. ௨

சாலிவாகனசகாப்தம்-௲௭௱௬௰௭-நிகழாநின்ற

விசுவாவசு௵-கார்த்திகைமீ.

த-சிதம்பரமுதலியாரால் அச்சடுக்கப்பட்டது.

1845

| பக்கம் | வரி | பிழை | திருத்தல் |
|---|---|---|---|



| | | | |
|---|---|---|---|
| ௨ | ௰௭ | பூறில்லா | பீறில்லா |
| ௩ | ௨௰ | மாய்க்குந் | மாக்குந் |
| ௫ | ௨௫ | பதகளை | பதங்களை |
| ௬ | ௰௬ | சொற்றிட | கொத்திட |
| ௰ | ௨௫ | செல்லிய | சொல்லிய |
| ௨௫ | ௩௰ | முழுதந் | முழுதுந் |
| ௨௬ | ௯ | நுடங்கு | நுடங்கு |
| ௩௰ | ௰௩ | ஒருமோ | ஒருமே |
| ௩௧ | ௭ | என்னேரம் | எந்நேரம் |
| ௩௩ | ௨௮ | போருர் | பொருர் |
| ௩௪ | ௮ | செருக்கி | இறுக்கி |
| ௩௬ | ௰௮ | மிரந்த | பிறந்த |
| ௩௮ | ௫ | முடியைதரி | முடியைத்தரி |
| ௪௭ | ௩௪ | அரசில் | அரசியல் |
| ௪௮ | ௩௩ | மாத்தாண்ட | மார்த்தாண்ட |
| ௫௩ | ௨௪ | புறப்பிடும் | புறப்படும் |
| ௫௫ | ௰௭ | கற்றித் | கத்தித் |
| ௬௧ | ௬ | கித்திர | சித்திர |
| ௬௨ | ௨௧ | மந்திரன் | மந்தரன் |
| ௬௪ | ௰௧ | ஒங்கெ | ஒங்கே |
| ஷ | ௰௮ | மோன்னூர் | மொன்னூர் |
| ௬௬ | ௩௩ | முற்றிட | முத்திட |
| ௯௮ | ௰௬ | தோகயைர் | தோகையர் |
| ௱௰௩ | ௨௰ | சபாதி | சபாசு |
| ஷ | ௨௧ | பசு | பதி |

பதித்தானபுத்தகம் — வில்வளைத்தல்

சகுந்தலைவிலாசம் — அர்ச்சுனன்றபசு

பதித்துவருகிறபுத்தகங்கள் — அரக்குமாளிகை

பாரதவிலாசமாகிய — இருக்குமணிவிலாசம்

சூதுதுகிலுரிதல் — இருக்குமாங்கதவிலாசம்

தாருகாவிலாசம் — வயித்தீஸ்வரர்குறவஞ்சி

பதிக்கப்படும்புத்தகங்கள் — அப்பர்சுவாமிகள்வாசகப்பா



சிவமயம்.

[illegible]

# சகுந்தலைவிலாசம்

## காப்பு.



வெண்பா.

இராகம் - சங்கராபரணம்.

சீரார்மயிலைவளர்சின்னதுவேளின்றமணித்..... ......... *
தாரார்புயவணிகதானப்பன் - பேரால் .... .... ...... .... *
விருதுசகுந்தலைவிலாசமதைப்பாடுதற்கு..... .... .... *
கருதுகெஜமுகன்றருள்காப்பு.......... ..... .......... .... *

விநாயகர் - தோத்திரம்

விருத்தம்

இராகம் - தோடி

தார்சூழல்வனிதையென்னுஞ் சகுந்தலைவிலாசந்தன்னைப் ........ *
பார்புகழ்தமிழினாலே பரிவுடன்பாடுதற்கு.... . .... ........ *
கூர்பெறுமோர்மருப்பிற் குலவடபொருப்பின்முன்னாள் ..... ... *
ஏர்பெறும்பாரதத்தை யெழுதினோன்காப்புத்தானே ..... ..... *

முருகர் - தோத்திரம்

வெண்பா.

இரர்கம் - சங்கராபாணம்

என்று மனத்தி லிருத்தி நினைத்தவர்பாற்.... ... ..... .. *
றுன்று மிடர் நீக்கித் துணையாகும் - கொன்றையொடு *
சுந்தரந்தி கழ்ந்தசங்கை தும்பையிந்த ணிந்தநம்பர் *
தந்தமைந்த ரெந்தைகந்தர் தாள்........ ..... ..... .... *

இதுவுமது - விருத்தம்

இம் - சாவேரி

நன்னாலுவேதத்தாலுநான்குசோடசநூல்கற்றோன் ..... ..... ..... *
தன்னாலுந்தேவராலுஞ் சாற்றரும்பொருளதாகிப் .... ..... .... .. *

பின்னுலுமறிவையன்றிப் பிறிதொன்ருலறியவொண்ணு ..... ..... ❋
முன்னுலுகரத்தோனெங்கள் முருகனைவணக்கஞ்செய்வாம்......... ❋

சரஸ்பதி - தோத்திரம்

விருத்தம் - இம் - கலியாணி

பலகலைகளுமுதவுவளெவளவள் .. ..... ..... ...... .. ❋
பனுவலின்மகளெனுமவளெவளவள் ..... .... ...... ❋
சலசையுண்மகிழ்மருமகளெவளவள் ..... ..... ..... ❋
சதுர்மறைகளுமுதவுவளெவளவள் ..... ..... ...... ❋
புலவர்களுளநிறைபவளெவளவள். ..... ........ ..... ❋
புனிதமுறுபொருளருள்பவளெவளவள் ..... .... ❋
மலரயன்மகிழ்மனையவளெவளவள் .. ..... ......... ❋
மலரடிகளைமலர்கொடுதொழுதனம் ..... ..... ..... ❋

பரமேஸ்பரர் - தோத்திரம்

விருத்தம் - இம் - சாவேரி

தருந்தலைமாலைகொன்றை நதிமதிநயந்தணிந்த. ..... .. .. ...... ... ❋
தருந்தலையிடையூறில்லாத் தனிப்பரஞ்சுடரைப்போற்றி ...... .... ❋
விருந்தலைகொழிக்குந்துய்ய விரிகடற்சூழ்ந்தபாரிற் ..... ..... ..... ❋
சகுந்தலைவிலாசந்தன்னைத் தமிழினுலுரைசெய்தேனே ..... ..... .. ❋

உமையவள் - தோத்திரம்

விருத்தம் - இம். பந்துவராளி

முதிர்சுவையின்சொலிளங்கிளிகோசிக ........ .... ❋
முனிவழிவந்தசகுந்தலைநீள்கதை .......... ..... .... ❋
சதிர்வடமொழியில்விருந்ததையேர்பெறு ..... ..... ❋
தமிழில்விளங்கியதின்செயல்கூறவே ......... ....... ❋
கதிர்மதிகொன்றையணிந்தசடாதரி ...... ..... ..... ❋
கவுணியனுண்டுவளர்ந்தபயோதரி .......... ......... ❋
அதிர்சழல்சம்புவினின்பமனேகரி ..... ...... .... ❋
அரியபதங்கணினைந்தினிவாழ்குவாம் ....... .......... ❋

இதுவுமது - விருத்தம்

இம் - புன்னுகவராளி

அமரிசந்திரசேகரியன்பர்கள் ....... ......... ..... ❋

அநுதினந்தொழுமாமயிலஞ்சலி...... ..... ....... *
நமரிதங்கைமனோன்மணியம்பிகை ..... .......... *
நலனுறைந்தவர்பாலுறையும்பரை....... .......... *
குமரிகுண்டலிகோமளிசங்கரி..... ........ ......... *
குவலயத்தருகோகிலசுந்தரி.... .... .. ........... ..... *
சமரிமென்சிவகாமசவுந்தரி... .... ...... ..... ..... *
சரணபங்கயநாளுமிறைஞ்சுவாம்..... ..... ... ..... *

திருமால்-தோத்திரம்

இம்-தோடி

பஞ்சவர்தூதனீண்ட பாரளந்திட்டமாயன் .. .... .. ..... ....... .... *
வஞ்சிபாஞ்சாலிக்கன்று மாளாதுகிற்கொடுத்தோன் .. ..... ..... *
தஞ்சமென்றுரைத்தயானைத்தன்னிடர்தீர்த்தளித்தோன் ..... ...... *
மஞ்சடர்மேகவண்ணன்மலர்ப்பதம்போற்றிவாழ்வாம்.. ..... ..... *

குரு-தோத்திரம்-விருத்தம்

இம்-காம்போதி

அகத்துளவிருளைப்போக்கியருமறைமுடிவைத்தாக்கி..... ..... ..... *
சகத்துளகவலைதாக்கிச் சங்கற்பவிகற்பநீக்கி .... ..... ..... ..... *
மகத்துளதன்போலாக்கி வரம்பிலாநந்தந்தேக்கி .... ..... ..... *
சுகத்துளசுபாவமாய்க்குந் தூயசற்குருதாள்போற்றி .... ..... .... *

அவையடக்கம்-விருத்தம்

இம்-மோகனம்

கனத்தின்மிகுமதுரிதமுத்தமிழின்வல்ல .... ..... ..... ..... ..... ..... *
கவிப்புலவர்முன்புகலையறிவில்லாத .... ..... ..... ..... ..... *
மனத்தின்மிகுமொருசிறியேனிந்தக்காதை ..... .... .... ..... *
வழுத்துதற்குமிகத்துணிவுவந்ததன்மை ..... ..... ..... .... ..... *
தனத்தின்மிகுமழகியமாணிக்கமாலை .... ..... ..... ..... ..... *
தனைத்தொடுத்துவிற்பவர்சட்டம்மைப்பார்த்து .... ..... ..... *
வனத்தின்மிகுசெவந்தகுருவிந்தங்கோர்த்து ..... .... ..... .... *
மானிலத்தில்விலைபகர்ந்தோன்வாறுதானே..... ..... ..... ..... *

சாற்றுக்கவி - விருத்தம்

இ-ம் - பந்துவராளி

அதிர்கழல்வீரர்போற்றுமணிபெறுமிராயநல்லூர் .... ..... .... *
கதிர்குலத்தரசன்றுய்யகவிராமசந்திரன்றான் ..... ..... .... .... *
முதிர்சுவைவட நூல்கற்றோர்மொழிந்திடுங்காதைதன்னை .... ....*
சதிர்பெறுவிலாசமாகத்தமிழினாலுரைசெய்தானே .... ..... ..... *

நாட்டை

இ-ம் - ஸ்ரீராகம் - தாளம்

ஜம்பை

மயிலைவளம்பதி வணிகதானன் மனது மகிழ்ந்திட மிகுபொற்
பர்ண வியன்மை சகுந்தலைகதைமெய்ப்பாய விலாசமதுசொல்ல
வே.... .... .... ..... ..... ..... ..... .... .... .... .... ஆ-ஆ-ஆ *
சயமிகுசெம்பொனின்மலையிற்பார தமதுமகிழ்ந்தெழுதியமெ
ய்ப்போத கயமுகனைவங்கர னிருபொற்பாத கமலமலர்த்துணை
யே .... .... .... ..... ..... ..... ..... ....ஜெய-ஜெய *
எல்லவரும்புகழ்நீதிசேரும் எள்ளருமங்கல மானமாது மெல்
விசகுந்தலைலீலையாம்வி லாசமதுசொல்லவே..... .... ....ஆ-ஆ-ஆ *
வல்லபெருந்தவஞானதேசர் வள்ளிமகிழ்ந்துறவாடுநேசர் சொ
ல்லருநங்குருவாம்விலாசர் துணைப்பதங்கடுணையே ஜெய-ஜெய *
மதிநுதலாளிளங்கிளிபூவைவருகுயினேர்கரும்பதுபோல - மிரு
துமொழியாள்சகுந்தலையாம்வி லாசமதுசொல்லவே ஆ-ஆ-ஆ *
நதியறுகாரணிநாடுநாதன்நளிர்கடேவ்துயின்றவன்வேதன் - சது
ருண்மையாளிந்திரைமாதுசரஸ்பதியுநதுணையே .... ஜெய - ஜெய *

தோடயம்

இ-ம் - ஆனந்தபைரவி - தாளம் - திரிபுடை

நீதன் - வணிககுலப்பிரக்கியாதன் - அதிசவரப்பிரசாதன் சிவபர
தத்துவபோதன் - தானப்பன்மீது - சகுந்தலை விலாசமதையுலாச
மாச்சொல்லவே .... .... .... ..... .... .... .... ..... .... .... *

சததளமலரினி - லநவரதமும்வளர் - வேதன் - மகிழ்வொடுபணிபா
தன் - அசுரர்கள்குலபேதன - பரசிவகுருநாதன் - துணைசெய்ய - வே

பைந்துளவணியுந்திருமுரகரி - உந்தியின்வழிவந்திடுதேவ முயர் வேதன் - பலகலையைச்சொல - வலநலமுள - சலைமகளைப் புல னெடுமெருவிய - வேதன் ..... .... .... .... ... ..... .... ..... *

பாரப்பனல்காற்ககனஞ்சுடர்சேரப்பலலோகங்களுமிதில் இலகு மசராசரமெனும்வெகுவித உயிர்களபலவுமுதவியசதுர்முக வேதன் மகிழ்வொடுபணிபாதன் - அசுரர்கள்குலபேதன் - பரசிவகுரு நா தன் - துணைசெய்யவே ......... .... .... .... ..... ..... ..... ..... *

தெய்வவணக்கம்

இம் - தோடி - தாளம் - ரூபகம்

தந்திமுகந்திக ழைந்துகரம்பெறு - தொந்திபொருந்திய சீலர் சிவ - சுந்தரிதந்தருள்பாலர் - மிகுசுருப்பொன்றிய - கருப்புஞ்சிறு - பருப்பும்பெறு - விருப்பம்பெற - ருசிக்கும்படி - பசிக்கன்பொ டு - புசிக்குங்கணநாதர் - துங்கப்பதங்களைப்பணிவாம் - பொற்ச - தங்கைப்பதங்களைப்பணிவாம் .... ..... .... ..... .... ..... .... *

அன்றசுராதிகளென்ற - நிசாசரா - வென்றகதிர்வடிவேலர் - என் னுள் - நின்றவுமையருள்பாலர் - இருள் - அகற்றும்பிர - ணவத்தின் பொருள் - மகத்துவந்தனை - நினைத்தன்பொடு - சுருத்தின்றிரு - செ விக்கின்புற - உணர்த்துங் கிருபையாளர் - அம்பொற் பதங்களைத் தொழுவாஞ் - செழுஞ் - செம்பொற்பதங்களைத்தொழுவாம் ..... *

திங்கட்பிறையொடு - கங்கைப்பணியணி - மங்கைபிரசன்னசபா வி - அரி - தங்கைவிற்பன்ன - திரிசூலி - வினை - மறுக்குஞ்ஜெகம் - ஒவ றுக்கும்பல - பிறப்பென்பதை - யறுக்குஞ்சதுர் - மறைத்தன்பொ ருண் - முடிக்கண்சர - ணடிக்குஞ்சிவகாமி - வாமிப்பதங்களைப்பணி வாஞ் - சிவ - நேமிப்பதகளைப்பணிவாம் ..... ..... ..... ............... *

பூவினிலேவேத - நாவினிலேநிதம் - மேவிய நித்திய - சர்வாணி - செழுங் - காவியபுத்தகபாணி - நன்றாய் - விரிக்கும்பல - பொருட்குஞ் சரு - உறைக்குந்திற - மிருக்குந்துறை - தரிக்குங்கலை - தெரிக்கும்படி அருட்கண்புரிமாது - விந்தைப்பதங்களைத்தொழுவாம் - அர - விந் தப்பதங்களைத்தொழுவாம் ..... ..... ..... ..... ..... ..... ....... *

### மங்களம்

இம் - பந்துவராளி - தாளம் - திரிபுடை

மங்களஞ்ஜெயமங்களம் - தங்குங்கலைக்கியானங்கள் - சகலமுந்
தருநான்முகத்தன்சுரர்பரவிய - கங்கைவேணியனுமை - களிக்குஞ் -
சுதகணநாதனுக்குங் - குறுமுனியவர் - கருதித்தமிழ்நாலுனாக்கும்
புகழ் - விருதுற்றிடுவேலவற்குஞ்செய .... .... .... ..... மங்களம்

ஜெகஜாலந்தனிலேசிக்கிப் - பலகோலந்தனிலேசொக்கித் - து
றைபதுவோ - விதுவோநிகரகசிய - மெது வோ - பொதுவோவென
வுழலுமென் - மனதைத்தெளிவுற் றிதுபொருள்வெகு - தனதிற்
களியுற்றிதுசுகமென - வரமிகுநெறிதருமொருகுருபரன் - மருவள
ரிருதிருவடிதனக்கெழில் .... ..... .... .... .... .... மங்களம்

தோகையொருபாகற்குஞ் - சுருதித்தலையினிடமிடுமொரு -
தோகை - தொடர்ந்தெழும்பவங்களைந்துயர் - சுகம்பெறுஞ்சகந்
தரும்பசுந் - தோகை - தொடர்பவவினையெனுமரவைத்தன - தரு
ஸ்ரீபுரியிருபதமொடுபற்றிச் - சுற்றிக்கொற்றித் - துகள்படவெறு -
சத்துச்சித்தெனு - மொருபரசிவ .... .... .... ..... .... தோகை

துலங்குநீலதேகற்குஞ் - சுசமுடனுலகம் - வகுத்தநிர்வாசற்கும் -
மலையரசன்றருமகளுக்கும் - மலருறையுந்திருமகளுக்கும் - வள
மிலகுங்கலைமகளுக்கும் - மகிமைபெறுஞ்சுரர்முனிவர்க்கும் - மதி
கதிர்விண்ணம்புவிக்குந்திகழ் - துதிபெறுமெண்ணெண் கலைக்குஞ்
ஜெய ..... .... .... ..... .... ..... ..... ..... ..... ..... மங்கலம்

### பொது - விருத்தம்

இம் - தோடி

புருந்தலைசொழிக்குமுந்நீர்புடைதிகழ்பூமிதன்னிற்..... ..... ..... ❋
சகுந்தலையெனும்பெண்பாவைச்சரிதைக்குமுன்னதாக..... .... .... ❋
மிகுந்தலைநிகர்த்தகூந்தல்விமலியோர்பாகனென..... .... ..... .... ❋
தகுந்தலைமாலைபூண்டோன்றனையர்மாமுகவர்வந்தார்..... ..... ..... ❋

விநாயகர்வருகின்ற தரு

இம் - தோடி - தாளம் - ஆதி

நல்லசித்திக்கணநாதர்வந்தாரோசபைதனில்நல்லசித்திக்கணநாதர்

வந்தாரோ-செல்வமுத்திபெறுஞ்சென்னைபுரிதனில் வல்லசித்திதரல் வந்துகுடிகொண்ட வல்லபைப்பெண்மணவாளர் நல்ல கல்விதருங் கிருபையாளர் எழில் வானகத்திலுமேவுமுக்கிய தேவருக்குமேயா வருக்குநல் வளமிகும்பல கலைபயின்றிடும் இனிதுடன்றிரு வருள் சுரந்திடும் ..... ..... ..... ..... ......... நல்லசித்திக்கணநாதர்வந்தாரோ ※

மங்கையுமையரு ளங்குசபாசர் கருணைவிலாசர் - மல்விமருக்கு ழல் வல்லபைப் பிராணேசர் - தங்கும்பலகலைத் தந்தருளுநேசர் சூ ரியப்பிரகாசர் - தஞ்சமென்றோர் மலர் நெஞ்சந்தனில்வாசர் - பொ ங்குங்கஜமுக சூரனைவாட்டிய - பூரணவெற்பினிற் பாரத த்திட்டிய ஐங்கரனல்ல அமுதுசெய்தூட்டிய - ஔவைக்குக்கயி லாயத்தைக் காட்டிய - ஆகமச்சதுர் வேதமெய்ப்பொரு - ளாயிருப்பவர் தூய் சிறப்பவர் - ஆனைமுகத்தவர் ஞானமிகுத்தவர் - அங்குமிருப்பவ ரெ ங்குமிருப்பவர் ..... .... .... .... நல்லசித்திக்கணநாதர்வந்தாரோ ※

பொது - வசனம்

அகோதெப்படியென்றால் சந்திரவமிசத்தில் அயாதிமகாராஜன் முதல் பதினைந்தாந் தலைமுறைமைக்குப்பிற்பாடு பதினாறுந்தலைமு றையான் துஷ்டியந்தமகாராஜன் ஏகசக்கிரேஸ்பரனாக இராச்சிய பரிபாலனஞ் செய்யுங்காலத்தில் விசுவாமித்திர மகாரிஷியானவர் இமோர்பர்வதச்சாரலிலே தவஞ்செய்யவருகிற விதங்காண்க..... ※

பொது - விருத்தம்

கதித்தவைம் புலன்களைந்து கருதுநற்றவத்தைச்சார்ந்து ..... ..... ※
துதித்தபல்வேள்விமுற்று தோமறுமிருஷியாகி .... .... .... ..... ※
உதித்தபல்லுலகந்தன்னில் லுயர்சதுர்முகன்போலெல்லாம் ..... ※
விதித்திடற்குரிய விசுவாமித்திரர் தான்வந்தாரோ .... ..... .... ※

விசுவாமித்திரர்வருகிற - தரு

இம் - மோசனம் - தாளம் - ஆதி

மிகுத்த தவமகத்துவ பிரதாப விசுவாமித்திரனேனே..... ..... ..... ※
ஜகத்திலெனக்கிணை உண்டோ உண்டோ வொண்டோசொல் ..... ※
சகல சமர்த்தன் இந்தத்தரணி பிரசித்தன் மிகு..... ..... .... .... ※
சாபா நுக்கிரக சாமர்த்தி யனிது .... ..... ..... ..... ..... ..... ※
தனையெவரறிகுவர் சதுர்முகனறிகுவன் ..... ..... ..... ..... மிகுத்த

———

அண்டரண்டபகிரண்டமெண் டிசையெல்லாம் .... .... .... .... ❋
அரைநொடியி லுண்டாக்குவேன் .... .... .... .... .... .... ❋
அனைத்துலகம் படைத்த சதுர்முகப் பிர்ம்மாவை .... .... .... ❋
அதிரநடுங்கத் தாக்குவேன் .... .... .... .... .... .... .... ❋
விண்டெதிர்த்தாலந்த மும்மூர்த்தி களைச்சுண்டு .... .......... .... ❋
விரலாலெற்றித்தூக்குவேன் .... .... .... .... .... .... .... ❋
விகடம்பேசுவரானா விந்திராதிதேவர்சுவர்க்கம் .... .... .... .... ❋
விட்டோடவு நீக்குவேன் .... .... .... .... .... .... .... ....❋
சொல்லுவேனந்தனாற் றொண்டன் றிரிசங்குக்குச்.... .... ... ❋
சொர்க்கத்தையும் படைத்தேன் .... .... .... .... .... ... ...❋
சுழலுநட்சத்திரமைந்தைத் தூக்கித்தெற்கிலடைத்தேன் .... .... ❋
தண்டும்வசிஷ்டர்மைந்தர்ச் சாம்பலாகச்சபித்தேன் .... .... .... ❋
தாடகையுயிரவித்தேன் .... .... .... .... .... .... .... .... ❋
பண்டரிச்சந்திரனைப் பறையன்கையிலொப்பித்தேன் ......... ....❋
பன்னுஞ்சந்திரமதியைப்பார்ப்பான்வீட்டில்விற்பித்தேன் ...... ❋
பாதலமேழும் உயர் மீதலமேழும் .... .... .... ......... இந்தப்
பதினாலுங்கிருகிரொன்றுசுற்றிச் .... .... .... .... .... .......... ❋
சுழன்றாலும்பொறிசுடந்தவெற்றிப் .... .... .... .... .... ❋
பாரதவத்துக்கேதொருதத்துப்பாருலகத்துக்கியானொருசத்துப் ❋
படியதனிற்கொடு வினைகள்பொடிப்பட .... .... .... .... ....❋
அருள்புரியத் தவமுயலத் திகழ்பெறு .... .... .... .... .... ❋
பரிதியினொடு நிறைமதியுள வளவுமிப் .... .... .... .... .... ❋
படிசெடியுறவெகு வலுமையினதிதிற .... .... .... .... மிகுத்த
❋ ........

விசுவாமித்திரர்சொல்- வசனம்

ஆரடா-சிஷ்ஷியா-காலாக்கினி-சுவாமி-அடாகாலநேமி-ஐயா-அடாபயல்கள்-(சிஷ்ஷியர்சொல்வசனம்)சுவாமிக்குக்-கண்ணேதெரிந்தால்- குடிமிதீய்ந்துப்போகாதா - கண்கெட்டவேழிமகன்-(காலநேமிவசனம்)ஆம்கபோதிஒழிமகன்-(விசு-வச)ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி -சுவாமி-அடாகாலநேமி- ஐயா - அடாஇதுபரியந்தம்- எவ்விடம்போயிருந்தீர்கள் - (சிஷ்-வச) சுவாமிசுவாமி-தேவரீர்காலின்கீழேகிடந்தோம்-காலின்கீழேகிடந்தோமையா-(வி வ)

பாதமலரைவணங்கியிருந்தோமென்று முன்னமேசொல்லப்போ
காதா - ஆ - துஷ்டப்பயல்களே - ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி - சுவாமி
அடாகாலநேமி - ஐயா - நான்தவஞ்செய்யவேண்டும் - தவத்துக்கு -
யோக்கியமானஇடம் - பார்த்துவாருங்கள்பிள்ளாய்(சீஷ - வச) அப்ப
டியேபார்த்துவருகிறேஞ்சுவாமி - அப்பன்மாரே - ஐயன்மாரே -
எங்கள்சுவாமி - தவஞ்செய்து - கொட்டப்போகிறாராம் - எங்கையா
கிலும் - அட்டைக்குழி - அரணைக்குழிப்பார்க்க - இல்லையா(காலநேமி
சொல்வசனம்) அடாஅண்ணன் - அப்படிச்சொல்லாதை - நம்மிட
சுவாமிகேட்டால் - சபிக்கப்போகிறார் (கா - வச) சபித்தார்சபித்தார்
என்புட்டையை - நீர்வற்றிப்போகச்சபிக்கச்சொல் - பார்ப்பம் ஆனை
வின்னம்பெருக்கும் - பெருத்தாலென்மயிர்போச்சுப்போ(விவ)
ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி - சுவாமி - அடாகாலநேமி - ஐயா - இவ்
வளவிடம்பார்த்துவருகிறத்துக்கு - இரண்டுபேர் போகவேண்டுமா
ஒருவன்போனாலாகாதா - வறட்டுத்தாயோழி பிள்ளைகாள் உங்களை
நீறாய்ப்போகச்சபித்துப்போடுகிறேன் (சீஷர் - வசனம்) அடாஅப்
பா - பெட்டிமகன்வெகுதலைகீழாய்விழுந்துதடுமாறிப் போகிறான்
தறிதலைபோழிமகன் - ஆமாம் - தாயோழிமகன் விசு - வச) ஆரடாசிஷ்
ஷியாகாலாக்கினி - சுவாமி - நீயாகிலும்போய் - நல்லஇடம் - பார்த்து
வாரும்பிள்ளாய்(சீஷர் - வச)அப்படியேபார்த்துவருகிறேன் சுவாமி
சுவாமிசுவாமி - அப்படியேபார்த்துவந்தேனையா(விசு - வச)அது எவ்
விடம்பிள்ளாய் (சீஷர் - வச) வெட்டவெளியிலே - சட்டாந்தரையி
லே - அட்டையுங்குட்டையும் - ஆழமுள்ளதாய்ப்பாழடைந்ததாய்ச்
சேறுநீருமாய் - நல்லஇடம்பார்த்துவந்தேன்சுவாமி - அதேதென்பிள்
ளாய் - சுவாமிசுவாமி - தேவரீர்ஜெழ்சவும் - குளிக்கவும் - அப்படியும்
இப்படியுந் - தடுமாறிவிழுந்தான் - அடபோபிள்ளாய் துஷ்டப்பய
லே - எட்டஇரு (சீஷர் - வசனம்) எட்டஇராமல் - தங்களைமுட்டவந்
தேனே - அடாகாலநேமி - நீயாகிலும்போய் - நல்லஇடம்பார்த்து
வாரும்பிள்ளாய் - அப்படியேபார்த்துவருகிறேன்சுவாமி - அடாஅ
ண்ணன் - காவாக்கினி - என்னடாதம்பிகாலநேமி - நம்மிடசுவாமி
தவஞ்செய்து - தடுமாறியுருளப்போகிறாராம் - பள்ளத்தாக்காய் அல்
லது - மேட்டுப்பாங்காயிருக்கவேண்டுமோ - யாதொன்றுந்தெரிய
வில்லையே - அடபோடாபோ - நான்பார்த்துச்சொல்லுகிறேன -

அடா தம்பி காலநேமி - நம்மிட சுவாமித்வம் - பள்ளத்தாக்கிலேதான் நடக்கப்போகிறது - அது உனக்கெப்படி தெரியுமடா - அண்ணன் அது என்னது சோதிட வல்லமையில் - அப்படிக்குத் தோற்றுகின்றது - ஆனால் - சரிதான் - அப்படியுமிருக்கும் (காலநேமி சொல் வசனம்) சுவாமி சுவாமி - என் பிள்ளாய் - நான் பார்த்து வந்த - இடம் - நல்லஜல சௌக்கியமாய் - சோலைகள் சூழ்ந்ததாய் - கமகமென்றிருக்குது சுவாமி (விசு-வச) அதெவ்விடத்திலே பிள்ளாய் - சுவாமி சுவாமி - அந்த - இடத்தை - என்வாக்கினாலே சொல்லமாட்டேனையா சும்மாச் சொல்லும் பிள்ளாய் - சுவாமி அந்த நான் சொன்னால் - தேவரீர் கோபங்கொள்ளுவீர்களென்று பயப்படுகின்றேனையா - பயப்படாமற் சொல்லும்பிள்ளாய் (சிஷ்ர் - வசனம்) அவ்விடத்திலெங்கே பார்த்தாலும் - பெண்கள் வாசமாயிருக்கும் - சுவாமி (விசு-வச) அரகரா சிவசிவா - பெண்களாகப்பட்டவர்களைக் கண்ணினாலும் பார்க்கிறதில்லை கருத்தினு நினைக்கிறதில்லை - கனவிலுங்காண்கிறதில்லை - யென்றது லோகப்பிரசித்தமாச்சுதே - அடா - அது - உங்களுக்குத் தெரியாதா (சிஷ்ர் - வசனம்) சுவாமி சுவாமி - புத்திபுத்தி - ஆமாம் - சரிசரி - மெய்தான் மெய்தான் (விசு-வச) ஆரடா சிஷ்ஷியா காலாக்கினி - சுவாமி அடா காலநேமி - ஐயா - நான் - இந்த - இமோர்பர்வதச்சாரலிலே தவஞ்செய்யவேண்டும் - தவத்துக்கிடஞ்செய்து வையுங்கள் பிள்ளாய் - அப்படியே செய்கிறோம் - சுவாமி .... .... ..... ..... ..... ❊

விசுவாமித்திரர் - சொல்லுகிற - தரு

இம் - தோடி - தாளம் - ஆதி

நல்ல இடமிதுவே தவஞ்செய்ய எனக்கிது நல்ல இடமிதுவே . .❊
செல்விய வேள்விக்கு வல்விய மாகவே .... ..... .... ..... .... (நல்ல)
அந்த மிகுந்துள் சந்தன குங்குமம்... ... ... .. ... ... ❊
விந்தை மரங்களிறைந்து வளர்ந்ததால் ... ... .. ...(நல்ல)
தங்கு மருவிகள் பொங்கிவருதலால் - .. ... ... ... ..... ❊
துங்கமுனிவர்களெங்கு மருவலால் - .. ... ... ...(நல்ல)
சீரிலுயர்ந்தது பேரின்மிகுநதது .. .. ... ... .. ... ❊
பாரிலிமயநற் சாரலென்றுந்தலம் .. .. ... (நல்ல இடமிது)

விசுவாமித்திரர் - சொல் - வசனம்.

ஆரடா சிஷ்ஷியா காலாக்கினி - சுவாமி - அடா காலநேமி - ஐயா -

நானிந்தத்தடவை-அகோர-உக்கிரதவஞ்செய்யப்போகிறேன் - ஆதலால்-இவ்விடத்தில்-காட்டானை-கரடி-சிங்கம்-சர்ப்பம்-சார்த்தூலம்-இவை முதலான-மிருகங்களினுடைய-சத்தமுமாகாது- குருவிகள்-பறக்கப்போகாது-காகங்கள்-கற்றக்கூடாது- நீங்களிருவரும்-பெருமூச்சும்விடப்போகாது- அதிசஜாக்கிரதையாயிருக்கவேண்டும்பிள்ளாய்-சுவாமிசுவாமி-பெருமூச்சும்விடப்போகாதா-விடலாகாதுவிடலாகாது-ஆனால்-கீழுக்கும-மேலுக்கும்-ஆப்பொன்றடித்துப்போடுஞ்சுவாமி ... ... ... ... ... .. ... ✻

விசுவாமித்திரர்-தவஞ்செய்கிற-தரு

இம்-நீலாம்புரி

ஆதியு மந்தமுமில் லாதவரும் பொருளே ... ..... ... ... ✻
தாதவிழ்கொன்றைதும்பைச் சடையிற்றரித்தோனே... .. .. ✻
ஏதுவில்லாம லெனக் கின்பமிகப் பொருந்த ... .. ... .. ✻
மாதுமை யாள்பாகா வரமது தந்தருள் வாய் ... .. ... ...✻
மாரன்றனை யெரித்தாய் மாமதியைத் தரித்தாய் ... .. .. ✻
மேருவில்லாய் வளைத்தாய் விண்ணோர்க் கரசளித்தாய் ... ... ✻
ஆரரவ மணிந்தாய் அத்திதனை யுரித்தாய் ... ... ... ... . ✻
சீர்பெறு மோட்சமதைச் சிந்தைமகிழ்ந் தருள்வாய் .. (ஆதியு)

பொது-வசனம்

அகோதெப்படியென்றால்-இப்படியாக-விசுவாமித்திரமகாரிஷியானவர் - இமோர்பர்வதச்சாரலிலே - தவஞ்செய்துகொண்டிருக்கும்போது-தேவேந்திரன்வாசல் - அலங்காரஞ்செய்யுங்கட்டியக்காரன் வருகிறவிதங் காண்க .. ... .. ... .. .. .. ✻

கட்டியக்காரன்வருகிற- தரு

இம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்

கட்டியக்காரன்வந்தான் விதரணக் கட்டியக்காரன்வந்தான்- மட்டவிழ்கற்பகத்தாரு நன்னிழலின்-மருவியெந்நாளும்வாழ்யோகதேவேந்திரன்வாசல் .. ... ... .. (கட்டியக்காரன்வந்தான்)
முப்பத்து முக்கோடி தேவர்களுநல்ல - மூதறிவுணர் வோரும்-செப்புங்கருடர்கின்னர்சித்தர்வித்தியாதரர் - திரமானமுனிவோர்களெண்வோரும் - எப்பொழுதெந்தநாளிந்திரன்வருகுவ - தெனு

ாதிர்கேட்பவர்க் கிதுததியென்றுசொல்ல - வெப்புலியொப்பண விக்கிரமமுற்றிடும் - அற்புதமத்த கஜத்தினையொத்தே - அதட்டி வெருட்டி யுறுக்கி முறுக்கி - ஆண்மைச் சிங்கக் குட்டிப் - பாண் மைத்தங்கக்கட்டி ... ... .. .. ... (கட்டியக்காரன்வந்தான்)

கட்டியக்காரன்சொல் - வசனம்

அகோதெப்படியென்றால் - முப்பத்துமுக்கோடிதேவர்களும் - நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும - புடைசூழத்தக்கதாக - தேவேந்திரமகாராஜன் கொலுவுக்குவருகிற விதங்காண்க .. .. .... *

பொதுவிருத்தம்

இம் - சாவேரி

வானவர்தொழுதுபோற்ற மாதவமுனிவர்வாழ்த்த ..... ... ... *
தானவர்மனங்கலங்கத் தையலர்கவரிவீச .. ... .. ... .. ... *
மேனலதாதகீதம் வித்தியாதரர்கள்பாட ... .. ... ... ... *
கோனெனுமிந்திரன்றான் கொலுவுக்குவருகின்றானே .. ... ... *

இந்திரன் - வருகிற - தரு

இம் - சாவேரி - தாளம் - திரிபுடை

இந்திரன்வந்தானே கொலுவிருக்க இந்திரன்வந்தானே.. .....*
சுந்தரமிகு பைந்துணரழகிய... ... ... .. ... ... . *
ஐந்தருநிழல் விந்தையின்மருவிய ... ... (இந்திரன்வந்தானே)

சோதிவாத்தவமுனிவர்கள் புடைசூழ - முப்பத்துமுக்... ... ... *
கோடிதேவர்களடிமிசைதாழ ... ... .. .. .. ... *
சோதிபளபளெனவிலகுகாந்தி... ..... ... .. ... ... . *
துலங்குந்திவ்ய வச்சிராயுதமேந்தி . .....(இந்திரன்வந்தானே)

சித்தர்கருடர்களிருபுறம்வருகவே - தேவியிந்திராணி... ..... *
திசமுமிளமுலைபுளகதருகவே - வித்தியாதரர்கீதம்பாட ... .. *
விபுதரிஷுவநல்லமுதெனவுநாட... ... .... (இந்திரன்வந்தானே)

தேவதுந்துமிகுமுகுமுகெனறதிர - அசுராதியர்களிது... ... .. *
செய்தியென்னெனகமிவுமனமதிர - தாவுமலர்மழைமிசவும்பெய்ய
சுவர்க்கலோகத்திலிருந்தப்புசெய்ய ... ... (இந்திரன்வந்தானே)

## பொது-விருத்தம்

### இம்-மத்தியமாவதி

பசிதுயிலிமைப்பிலாமுப் பத்துமுக்கோடிதேவர் .. ... .. ❋
திசையினிற்கருடர்சித்தர் தேவர்காந்தருவர்சிந்தை .. ... .. ❋
இசைதருநாற்பத்தெண்ணா யிரமுனிவரருஞ்சூழ .. .. ... ... ❋
உசிதபொன்னுலகிலிந்திர னுயர்கொலுமேவினனே .. ... .. ❋

### சட்டியக்காரன்-சொல்-கட்டியம்

திடமுகினெடுமுடி பெருகுல்வலாவிரிச் சிறைதுகள்படவாட்டி ❋
அடலமிகுமசுரர்களலறிடவுளறிட அவருயிர்களைமாட்டி......... ❋
கடல்வருதருமணி கரிபரியுளவெரு சனமிகுமரசாட்சி ... ... ... ❋
உடனடர்கொலுவினில் வருமகபதியுன துயர்சரணிணைபோற்றி. ❋

### சட்டியக்காரன்-சொல்-சட்டியம்

சந்தமுற்றதருநீழலிற்றிசழ் சுந்தரத்திறனுடுமேவிய .. ... .. ❋
விநதையிற்பிரபல மாய்விளங்கிவரும் இந்திரவச்சிரதரனேபராக்கு
கறையறுத்தவச் சிராயுதத்தினைக் குறையறுத்தகைப்பற்றியே .:. ❋
நிறையறுத்தபல் கோடிமாமலைச் சிறையறுத்ததிலசாபராக்கு ... ❋
சதமசத்திரு சர்த்தனேயசுரர் அதியபத்தொடுவணங்கியே .. .. ❋
நிதநிதந்துதிசெயும்பர் நாட்டிறையுநெடியதேவர் தேவாபராக்கு

## பொது-விருத்தம்

### இம்-சாவேரி

பஞ்சகற்பகமுஞ்சங்கப் பத்துமநற்காமதேனும் ... .. ... .. ❋
அஞ்சலிபுரிந்துநிற்க அரம்பையர்முதலாயுள்ள .. ... ... ... ❋
வஞ்சியர்நிர்த்தஞ்செய்ய வானவர்துதித்துப்போற்ற... ... ... ❋
கிஞ்ஞையர்கீதம்பாட விளங்கினனிந்திரன்றானே ... ... ... ❋

## பொது-விருத்தம்

### இம்-கல்யாணி

அறங்கிளர்முனிவர்தேவ ராய்ந்தகந்தருவரோத்த ...... ... ... ❋
திறங்கிளர்வடிவேற்கண்ணின் றிவ்வியமாதராட ... ... ... ... ❋
நிறங்கிளர்தருவின்மேவு நெடுமுடிவச்சிரபாணி ... ... ... ❋
பிறங்கிடுகொலுவினுக்குப் பிரகஸ்பதிதான்வந்தாரோ ... ... ... ❋

பிரகஸ்பதி - வருகிற - தரு

இம் - பூரிகலியாணி - தாளம் - ஆதி

சுரர்குருபிரகஸ்பதியிதோவந்தார் மறைநெறிமுழுதுணர்... ...※
சுரர்குருபிரகஸ்பதியிதோவந்தார் ... ... ... ... ... ... ...※
பொருளெதுபோருணிலையெதுவென ... ... ... ... ... ※
அருளெனுந்தருணிலையெதுவென ... ... ... ... ... ...※
பேராற்றுமவர்கண்மனதிற்றேற... ... ... ... ... ...※
ஆற்றலுடனேயருளிற்கூற... . ... ... (சுரர்குருபிரகஸ்பதி)
நாலுவேதப்பொருளையுந்தேர்ந்தோர் - இகபரமெனும்பதி... ...※
நாலுலோகவாழ்வையுஞ்சார்ந்தோர்... ... .... ... ... ...※
மேலுஞ்சுருதிநீதிபோன்ற ... ... ... ... ... ... ... ※
விதியதுவென்றெவர்க்குந்தோன்ற ... ... ... .. ... ※
மிகுத்துவத்தொடரலுத்தொருதுய்ய ... ... ... ... ... ※
மகத்துவத்துடனுரைத்தருள்செய்ய .. .... . (சுரர்குருபிரகஸ்பதி)
புவியுமிமையு மிரண்டுமேகவே அந்நாளில்வந்த .. ... ... .. ※
பவத்தனினல் லமுதுண்டாகவே ... ... ... ... ... ... ※
இசையுமுகூர்த்தநாளைக்குறித்தே... ... ... ... ... ......※
இனிதுடன் புத்தகத்திற்பொறித்தே... ... ... ... ... ...※
விதிதமாகவே தேவர்க்குரைத்தே... ... ... ... ... ... ...※
வேலைத்திரையை யாசீர்வதித்தே ... .. ...(சுரர்குருபிரகஸ்பதி)
புவனவக்கிரகந்தன்னில் யோக்கியர் - சுகந்தரும்பதி... ... ... ... ※
ஞானமிடத்திலதிக பாக்கியர்...... ... ... ... ... ...※
நயகுணமுள்ளவேதியர் - மெய்ஞ்... .. .. ... ... ... ...※
ஞானமுதவுநீதியர் - திகழ்... ... ... ... ... .. ... ... ...※
பவனைநிறுத்துந் - தனுவையுறுத்துஞ் ... .. ... ... .. ※
சினமதறுத்து - மனதைநிறுத்தும் ..... .... .... (சுரர்குருபிரகஸ்பதி)

இந்திரன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

அமரர்கண்முடியேபோற்றி - அமரர்கண்மணியேபோற்றி .... .....※
அமரர்களுயிரேபோற்றி - அமரர்களன்பேபோற்றி ......... ........※
அமரர்கள்வாழ்வேபோற்றி - அமரர்கணிழலேயோற்றி .... .... .....※
அமரர்கள்குருவேபோற்றி - அருள்பிரகஸ்பதியேபோற்றி ..... .. . ※

## பிரகஸ்பதி - சொல் - விருத்தம்

### இம் - தோடி

கற்பகத்தருவும்வாழ்க கனத்தவெள்ளானைவாழ்க ..... ..... ..... ※
அற்புதநிதியும்வாழ்க அருங்காமதேனும்வாழ்க .... ..... ..... ※
அற்புதமமுதம்வாழ்க அரம்பையாதியர்கள்வாழ்க .... ..... ..... ※
பொற்புறுசசியும்வாழ்க புரந்தராவாழ்கவாழ்க ..... ..... ..... ..... ※

## இந்திராணி - சொல் - விருத்தம்

### இம் - ஆனந்தபைரவி

இமையவர்க்கரசனே யென்னிருகண்ணவா கேளாய் ..... ..... ..... ※
அமைவுறுகற்பகத்தி னலர்ந்திடுமலரின் றேன்கள் ..... ..... ..... ※
இமமெனத்துளித்ததர்மேல் எங்கணுங்குளிர்ந்திருக்கும் .... .... ..... ※
கமைபெறுசுவர்க்கந்தன்னிற் கடுங்கனலேதுசொல்வாய் .... .... ※

### வசனம்

கேளும் - முப்பத்துமுக்கோடி - தேவர்களுக்கதிபதியான - என்பிரா
ணநாயகா - நம்முடைய - கற்பகச்சோலையிலே - மலர்ந்தபுஷ்பங்
களிலிருந்து - தேன்கள் - சிந்துகிறதினாலும் - பஞ்சதருக்களின்று - நிழ
லினாலும் - எப்பொழுதுங்குளிர்ந்து - உல்லாசமாயிருக்கப்பட்ட
சொர்க்கலோகமெல்லாம் - அக்கினிச்சுவாலைவீசுகின்றவிதம் - என்னே
அதையெனக்குத்தெரியச்சொல்லவேண்டுஞ்சுவாமி .... ..... ..... ※

## இந்திரன் - சொல் - விருத்தம்

### இம் - காம்போதி

அமிதமெய்த்தாளேந்தன் அழகியசசியேகேளாய் ..... ..... ..... ..... ※
தீமையில் சுவர்க்கமெல்லாந் தீத்திரள் படர்ந்தேமிக்க ..... ..... ※
வெழுந்துசெய்கைகாட்டி மெய்யெல்லாம் புழுங்குதித்தை ..... ..... ※
நாமினியறியவேண்டு தங்கையேபயப்படாதே ..... ..... ..... ※

### வசனம்

கேளாயென்னுடைய - அழகிய - இந்திராணியே - சொர்க்கலோகமெல்
லாம் - அக்கினிச்சுவாலையாயிருக்கின்றது - மெய்யேமெய்யே - அதி
னால் - சரீரமெல்லாம்புழுங்கிவேகின்றது - இதைநிமைக்குள்ளே -
அறிந்துச்சொல்லுகிறேன் - நீபயப்படாதேபெண்ணே .... ..... ..... ※

இந்திரன் - சொல் - விருத்தம்

இம் - கும்பகாம்பூதி

தேவரோமுனிவரோநற் சித்தர்கின்னரரோசெளீர் ..... ..... ..... ..... *
ஏவுமிவ்வதிசயத்தை என்றுநாங்கண்ட தில்லை .... .... .... .... *
தாவுபொன்னுலகையெல்லாந் தகிக்கின்றதனலிதேது..... ... ..... *
மேவியிங்கிருக்கவொண்ணு வெப்பமேதுணைசெய்வீரோ .... .... *

வசனம்

கேளும் - தேவமுனிவ - கருட - காந்தருவ - சித்தர் - வித்தியாதரர்களே ஏதோ - ஆச்சரியமாய் - தம்முடைய - சொர்க்கலோகமெல்லாம்பற்றி - எரியப்பட்ட - அக்கினியேது - இதனாலே - சரீரமெல்லாம் - புழுங்கி - வெந்துபோகின்றது - இந்த - அக்கினியெவ்விடத்திற்பிறந்ததோ தெரியவில்லை - என்னசெய்யலாந்தேவர்களே .. .... ..... .. ..... *

தேவர்கள் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

இறைவனேகேளாய்ப்பாரில் இமயச்சாரலிலேநின்று .... .. .... *
பொறையிலாவிசுவாமித்திரன் பொங்கமாய்த் தவஞ்செய்கின்றான்
நிறைதவந்தனிலெழுந்த நெடுங்கனலெங்கும்பற்றி.... ... ..... *
அறைதரவிசுதிந்த அவதிக்குநாமென்செய்வோம். ... ..... . ....... *

வசனம்

கேளும் - தேவேந்திரமகாராஜனே - இமோர்பர்வதச்சாரலிலே - விசுவாமித்திரமகாரிஷியானவர் - அகோரமார்கியதவஞ்செய்கின்றார் - அவருடையதபாக்கினி - இப்படிக்குவீசுகின்றது - இன்னமென்னவிளையுமோதெரியாது - நாமெந்தலோகத்துக்குப்போகலாம - இதற்கென்னசெய்யலாஞ்சுவாமி ... ..... ..... ..... ... . ..., ..... ..... ..... *

இந்திரன் - சொல் - தரு

இம் - பைரவி - தாளம் - ஆதி

தப்பியெப்படிப்பிழைப்போம்.... .... .... ....... (விசுவாமித்திரன்)
தவத்தையெவ்விதமழிப்போம் ..... ..... ..... ..... ..... ..... ., *
எப்படிச்செல்வோமிந்த இடர்நமக்கினிமேலே.... ..... ..... .. .. *
ஊழில்விசுவாமித்திரன்றவத் தெழுந்தஅக்கினியாலே.... .... (தப்பி)

சத்தமேகங்களை விடுத்தாலு மோட்டுவான் ..... .... .... .... *
தணிவிடியையிட்டாலுந் தலைகாட்டாமல்வாட்டுவான் ..... ......... *
அத்திகளை விட்டாலும் அம்மானூர்ட்டுவான் .... .... ..... ..... *
அலைகடலைவிட்டாலும் அதற்குஞ்சங்கைக்காட்டுவான் .... (தப்பி)
வடவைத்தீயைவிட்டாலும் வாரியள்ளிக்குடிப்பான் .... .... .... *
மலைகண்மீதெறிந்தாலு மணற்பொடியாப்பொடிப்பான் ..... .... *
திடமாம்வெள்ளானைவிட்டாற் சிறுபொடியாப்பொடிப்பான் . *
தேவர்களைவிட்டாலுஞ் சிதையும்படியடிப்பான் (தப்பியெப்படி)
சந்திராதித்தரைக்கொண்டு தடுத்தாலுமடங்கானே .... .... .... *
சதுர்முகஞ்சேர்பிரமன் றன்னாலுமடங்கானே .... .... ......... *
விந்தையண்டமிடிந்து விழுந்தாலுமொடுங்கானே ..... .... ..... *
மேல்கீழ்கீழ்மேலானாலு மேன்மனநடுங்கானே .(தப்பியெப்படி)

இந்திரன்-சொல்-விருத்தம்

இம்- பைரவி

கடலதுபொங்கினாலுங் காசினிமூழ்கினாலு .... ..... ..... .... *
முடிவுறவுயர்பிர்ம்மாண்டமுகடிடிந்ததுவீழ்ந்தாலும் .... .... .... *
அடல்வடவரையாழ்ந்தாலும் அசையாதவிசுவாமித்திரன் ..... .... *
உடைபெருந்தவத்தைவெல்ல உபாயமொன்றுரைசெய்வீரோ ..... *

வசனம்

கேளும் - தேவமுனிவ கருடகாந்தருவ சித்தவித்தியா தரர்களே இந்த-எழுகடலும்பொங்கி ஜலப்பிரளயமானாலும் - பூமியெல்லா மூழ்கிப்போனாலும்-பிர்ம்மாண்டகடாகம்- இடிந்துவீழ்ந்தாலும் மகமேரு - அதோகதியிலழிந்திப்போனாலும்- அசையாத- விசுவா மித்திரனுடைய- அகோரதபசைவெல்லுதற்கு - ஒருபாயஞ்சொல் லுந்தேவர்களே .... ... ..... .... ..... .... ..... ..... ..... ..... *

கருடகாந்தருவர்-சொல்-விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

பெருகியவூழிகாலப் பிரசண்டமாருதமடிக்க .... ..... ..... ..... *
வெருவியவுகாந்தசத்த மேகங்கள் தம்மைவிட்டு ..... ... .... .... *
வருநிமைப்பொழுதுமோயா மழைகளைமிகப்பெய்வித்து .. .... *
கருதருவிசுவாமித்திரன் கடுந்தவமழிக்கலாமே ..... ..... .... *

வசனம்

கேளும் - எம்மையாளுடைய - தேவேந்திரமகாராஜனே - ஒருவிதஞ்செய்யலாம் - அதென்னவென்ருல் - வாய்வுபகவானையும் - வருணதேவனையுமழைப்பித்து - விபரீதமானகாற்றுமழையுங் கலந்தடிக்கச்செய்தால் - அந்தவிசுவாமித்திரர் - திகைத்துத்தவத்தைவிட்டோடிப்போவாரென்று நினைக்கிறேஞ்சுவாமி .... ..... ...... ..... ......*

சித்தர் - வித்தியாதரர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

அண்டமுங்கிடுகிடென்றே அதிர்ந்திடக்கடல்கலங்க .... ..... ..... *
எண்டிசாமுகங்குலுங்க யாவருந்திடுக்கிட்டேங்க........ ...... ......*
மண்டுநல்லிடிகள்சும்மா மாருமல்விழவேசெய்து .... ..... .... *
கண்டிதவிசுவாமித்திரன் கடுந்தவமழிக்கலாமே .... ..... ..... ..... *

வசனம்

கேளுந்தேவேந்திரமகாராஜனே - இன்னமொருவிதஞ் செய்யலாம் - அதென்னவென்ருல் - அண்டகடாகமுங்கிடுகிடென் றதிரும்படியாய் - அலைகடலும்கலங்கும்படியாய் - திக்குகளெல்லாந் திடுக்கிடும்படியாகிய - கற்பாந்தகால - கோடையிடிகள் - ஒன்றின்மேலொன்று - இடைவிடாமல்விழும்படிச்செய்தால் - அந்தவிசுவாமித்திரர் பிரமித்து மனங்கலங்கித் - தவத்தைவிட் டோடிப்போவாரென்று தோன்றுகின்றதுசுவாமி..... .... ..... .... ...... ...... .....*

பிரகஸ்பதி - சொல் - விருத்தம்

இம் - சாவேரி

அசன்படுகுழியைவெட்டி ஆனையைப்பிடிக்கவேண்டும் .... .... *
புகலுமோராட்டைக்காட்டிப் புலிதனைப்பிடிக்கவேண்டும்........*
முகிணகைமாதராலே முனிவனைவெல்லவேண்டும்..... ..... .... *
விகிதமிங்கிதுவேயல்லால் வேறென்ருல்வெல்லொணுதே .... . . *

வசனம்

கேளுந்தேவேந்திரமகாராஜனே - நானொ ருபாயஞ் சொல்லுகிறேன் - மதப்பட்டயானையைப்பிடிக்க - ஒருபடுகுழிவெட்டி அதிலேவிழும்படிச்செய்து - அதைப்பிடித்துக்கொள்ளுகிறது - பெரும்புலியைப்பிடிக்க - அதற்கிரையாக - ஓராட்டைக்காட்டிப் பிடித்

துக்கொள்ளுகிறது - அப்படிப்போல - ரிஷிகளை வெல்லவேண்டுமெ ன்றால் - நல்லஎவ்வனமான ஸ்திரீகளைக்கொண்டு வெல்லவேண்டுமே யல் லாமல் - வேறொருவிதத்திலும் - வெல்லக்கூடாது மகாராஜனே.... ❋

இந்திரன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

தருமிது நன்றாச்சொன்னீர் தாருகாவனத்தின்முன்பு .... .... ....❋
முகமன்மோகினியைக்கண்டு முனிவர்கள்தவம்விடுத்தார் .... .... ❋
வகையுடன்பார்த்தாற்பெண்ணின் மயங்காத ரிஷிகளில்லை .... ....❋
தகைபெறுகுருவேநீர்தான் சபாசுநன்றாகச்சொன்னீர்..... ... ....❋

வசனம்

ஆஆஆ - இதுவேசரியிதுவேசரி - தருந்தகும் - முன்னாலேதாருகா வனத்திற்றவஞ்செய்த - நாற்பத்தெண்ணாயிரம் - ரிஷிகள் - ஒருமோ கினியைக்கண்டமாத்திரத்திலல்லவா - தங்கள் - தங்கள் - தவமழிந்து தடுமாறிப்போனார்கள் - யோசிக்குமளவில் - ஸ்திரீகளைக்கண்டுமயங்கா த - ரிஷிகளில்லை - சபாசு - நன்றாச்சொன்னீர் - அப்படியே செய்கிறெ ன்சுவாமி..... ..... ..... ..... ..... ..... ..... ..... ..... ❋

இந்திரன் - சொல் - வசனம்

கேளுந்தேவர்களே - அரம்பையை - யதிசீக்கிரத்துக்கு வரச்செய்யு ங்கள் - அப்படியேவரச்செய்கிறோம் - சுவாமி -..... .... .... ..... ❋

பொது - வசனம்

அகோதெப்படியென்றால் - தேவேந்திரமகாராஜன் - சபைக்குத் தெய்வரம்பைவருகிறவிதங்காண்க .... ..... ..... ..... ..... .....❋

தெய்வரம்பை - வருகிற - தரு

இம் - பூரிகல்யாணி - தாளம் - ஆதி

பதுமமலர்வதன அதிகசரசகுண பருவரம்பைவந்தாள்............ ❋
மதனிரதிதுதிசெய் யதிசவடிவழகி..... .... ..... .... .... ❋
மான்போலும்விழியாள் ருசியைத்தரு ....................................❋
தேன்போலுமொழியா ளவசித்திர .... ..... ..... .... .... ❋
தோகைபோலுநீள்கலாபநடமிடு..... .. .... ... ..... ..... .... ..❋
தோகைபோலும்வாகுலாவுசததள ..... ..... ..... (பதுமமலர்வதன)

கொங்கைக்குடமிரண்டுங்குலுங்க பரந்து ..... ...... ...... ...... ... *
குவிந்துதிரண்டு நிமிர்ந்து வளர்ந்திடு..... ..... ...... .... (கொங்கை)
குமுகுமென்று சமகமென்று பரிமள ..... .... ..... ..... ..... *
மிகுகதம்பபொடிதிமிர்ந்துபுளகித.. .... ....... .... (கொங்கை)
பந்தமறுத்துச் சிந்தைநிலைத்திடும்முனிவர்கள் .. .. .... ..... ..... *
கண்டுபிரமித்துத் தண்டனிடும பொற்சுணங்கமர் .... ....(கொங்கை)
முப்பதுமுக்கோடி தேவர்க்குமதிகலங்க ..... ..... .... ..... *
தங்கும்பரதவிதந் தன்னில்விதரணிக........ ........ ..... ..... ..... *
சரச லலித வுசித ஜொலித லுறுமிவள் .... .... ..... .... ..... *
உரிசைதருமதுரரசமெனகொலுவினில் ..... ..... (பதுமமலர்வதன)

அரம்பை - சொல் - கட்டளைக்கலிப்பா

இம் - புன்னாகவராளி

அந்தரத்திமையோர்களுக்கண்ணலே ........ .... *
ஐயனேயெமையாண்டருண்மெய்பனே .... .... *
சிந்தையுண்மகிழந்தென்னையழைப்பித்த ....... *
செய்தியையருளிச்செய்குவீரையா ..... ..... .... *

இந்திரன் - சொல் - விருத்தம்

இம் - தோடி

கோதையே சொல்லக்கேளாய் கோசிகன்றவத்தாலிங்கே .... ..... *
போதவேதனவதாகிப் புழுங்குதுதாளமாட்டோம்.... ..... ..... *
ஆதலானீயுமிப்போ தவன்செய்யும் யாகந்தன்னை .... ....... .... *
வாதுசெய்தேயழித்து வகையுடன் வருகுவாயே .... ..... .... .... *

வசனம்

சேளாயரம்பையே - இமோர்பர்வதச் சாரலிலே விசுவாமித்திரமகாரிஷி தவஞ்செய்கிறார் - அவர்தவத்தை யழித்து வரவேண்டும் பெண்ணே ..... ..... ..... ..... ....... ..... ..... ..... ..... *

அரம்பை - சொல்

கட்டளைக்கலிப்பா

கொந்துமாமலர்ச்சோலையிலென்னிட ... .... .... *
கோதைமாருடன்சென்றிடும்வேளையில் .... .... *

வந்தகோசிகமாமுனியைத்தொழ.. .... ....... ... ... *
வாழுமம்மாவென்றேயெனவாழ்த்தினர்... ...... *

வசனம்

சேளும் - சுவாமி - தேவேந்திரமகாராஜனே - விசுவாமித்திரர்தவத்தையழித்து - வரச்சொல்லிக்கட்டளையிட்டீர்மெய்தான் - ஒருநாள் தோழிமாருடனே - நான்பூங்காவிற்குப்போகும்போது - அவ்வழியாகவந்தவிசுவாமித்திரமகாரிஷியைக்கண்டு - அஞ்சலிவந்தனஞ்செய்தேன் - சுகமாயிருமம்மாவென்றாசீர்வதித்தார் - அவரெனக்குத்தந்தைமுறையாதலால் - அவரைவெல்லுதற்கென்னாலாகாது - மேனகையைவரவழைத்தனுப்பிவையுஞ்சுவாமி .... .... ..... .... .....*

இந்திரன் - சொல் - விருத்தம்

இம் - கும்பகாம்பூதி

வாழனனுங்குழலாண்மேருமலையெனுமுலையாள்கெண்டை.... *
மீனெனும்விழியாள்சோதி மின்னெனுமிடையாள் தெய்வ .... *
மேனகையாலேவிசுவாமித்திரனை வெல்லவேண்டுந்..... .... .... ...*
தேனெனுமொழியினளைச் சீக்கிரமாயழைத்திடீரோ.... ..... ..... *

வசனம்

சேளுந்தேவர்களே - தெய்வமேனகையை - அதிகசீக்கிரத்தில் அழைத்து வரச்செய்யுங்கள் - அப்படியே அழைத்துவரச்செய்கிறேஞ்சுவாமி..... ..... ..... ..... .... ..... ..... .... *

பொதுவசனம்

அகோதெப்படியென்றால் - தேவேந்திரமகாராஜன் கொலுச்சபைக்குத்தெய்வமேனகைவருகிறவிதங்காண்க ..........................*

மேனகை - வருகிற - தரு

இம் - அசாவேரி - தாளம் - ஆதி

திவ்வியபரிமளஜெகன்மோகன திலத லலித ஜொலித சரச ..... *
லபிநய தெய்வமேனகைவந்தாள்..... ..... ....... .... ...... .....*
மூவ்வுலகினிலுள்ள முனிவர மரரெவரு மதிகமயல்கொள்ள ..... *
முகவிலாசசுகவுலாச விசசிதமுயர் ..... ..... .. ..... ..... .....*
சித்திரத்தை யொப்பன வழகியமக .... ..... ..... (திவ்வியபரிமள)
சிந்தையுருக்குமுக சந்திரவிம்பமெப்போதும்..... ..... ..... .....*

மெய்த்தவத்தின் வழி முத்திபெற்றவர்தம்.... (சிந்தையுருக்குமுக)
தட்டழிந்த விச்சையினிடபவமே - விட்டொழிந்து சிற்சுகானுப
வமே-தவமிதென்று சிவமிதென்று தனையறி - சற்குணப் புனித
நிற்குணத்தவர்தம் ..... ..... ..... ..... .....(சிநதையுருக்குமுக)
செப்பும்பொருளிவட்குச் சிக்காதோன்றில்லையேதோ .... ....*
மந்தகாசத்தின் மதிமயக்கமெப்படிமாறும் வாயிதழ் தேனூறும்
ஜெகத்திலிவட்கிணை சொலப்படு நிறுக்கிலை-சிவ சிவ சிவ வதிசய
விதுவெனமக..... .... ... ....(திவ்வியபரிமளஜெகன்மோகன)

மேனகை-சொல்-விருத்தம்
இம்-ஆனந்தபைரவி

அண்ணலேபோற்றிபோற்றி ஆயிரங்கண்ணபோற்றி .... ..........*
விண்ணவர்க்கரசேபோற்றி விளங்குமிந்திரனேபோற்றி .... ... *
தண்ணளித்தலைவாபோற்றிச் சபைதனிலெனையிப்போது..... .....*
திண்ணமாயழைத்தசெய்தி தேவரீருரைசெய்வீரோ ..... ..... ..... *

இந்திரன்-சொல்-விருத்தம்
இம்-தோடி

வடிவின்மேனகையேகேளாய் வளம்பெறுமிமயச்சாரல் ..... .....*
அடல்பெறுவிசுவாமித்திரன் அகோரமாய்த்தவஞ்செய்கின்றான்.*
முடியுமுன்னீபோயுன்மேன் மோகிக்கச்செய்தேயந்தக் .... .....*
கொடியவன்றவமழித்துக் கொப்பனவருகுவாயே ......... ..... ....*

வசனம்

சேளும்-மேனகை-இமோர்பர்வதச்சாரலிலே - விசுவாமித்திர
ன்-தவஞ்செய்கிறான்-அவனுடையதபாக்கினியினாலே- திரிலோக
ங்களும்தத்தளிக்கின்றது-ஆதலால்-நீயந்த - இடத்திற்குப்போய்
அவனைஉன்பேரில் - மோகிக்கச்செய்து - தவத்தையழித்துவாரும்
பெண்ணே..... ..... .... ..... ..... .... .... ..... ..... ..... ...*

மேனகை-சொல்-விருத்தம்
இம்-ஆனந்தபைரவி

திசைச்சதுர்முகன்போலெல்லாஞ் சிஷ்டிக்கவலுமைபெற்றோன்*
வசிட்டர்மைந்தனாநூறுக மாய்ந்திடமிகச்சபித்தோன் .... .... ....*

முசித்தகோபத்திலாரு முன்னிற்கக்கூடாதந்த .... .... .... .... ※
இசைத்தவமுனியையெல்ல எந்தனாலாகுமோதான் ......... .... ※

வசனம்

கேளும்-தேவேந்திரமகாராஜனே-தேவரீர் சொல்லுக்குத்தடங்கலில்லை-அந்தவிசுவாமித்திரர்மகிமையை-நீர்அறியாததா -அவர்பிரம்மசிஷ்டிக்கெல்லாம்பதில்-சிஷ்டிக்கவல்லவர்- மேலும்பிரம்மரிஷியாகிய-வதிஷ்டருடைய பிள்ளைகளையெல்லாம் -பஸ்பமாகச்சபித்தவர்-எப்படிப்பட்டவர்களும்- அவர்முன்னே -- நிற்கமாட்டார்கள் மிகுந்த-கோபாக்கினியுள்ளவர்-அவர்தவத்தையழித்துவருதற்கு-என்னாலாகுமோசுவாமி..... .... ..... .... ..... ..... ..... .....※

இந்திரன்-சொல்-விருத்தம்

இம்-பந்துவராளி

கோபத்தில்வெகுண்டபேருங் கொலைசெய்யத்துணிந்தபேருஞ் ※
சாபத்தின்மிகுந்தபேருந் தவத்தினிலுயர்ந்தபேரும்..... .... ....※
தாபத்தைக்கொடுக்கும்பெண்கள் தம்வசப்படுவாரிந்த .... .... .... ※
ஆபத்தைத்தீர்ப்பையானால் அட்டிநீசொல்லவேண்டாம் ..... ..... ※

வசனம்

கேளும்-மேனகையே-கொடிதானகோபக்காரரும் - அஞ்சாமற்கொலைசெய்யப்பட்டவரும்- நிர்த்தாட்சணியமாய்ச்சபிக்கப்பட்டவரும்-பஞ்சேந்திரியங்களையுமடக்கி-மகத்தானதபசுசெய்யப்பட்டவரும்-ஸ்ரீகளுடையமோகாந்தகாரத்திலே முழ்கிவசப்படுவார்கள்- ஆதலால்-விசுவாமித்திரன்-தபாக்கினியினாலே- திரிலோகத்துக்குவந்த-ஆபத்தைதவிர்க்க-எவ்விதமானாலும்- அவன்றவத்தையழித்துவாரும்பெண்ணே .... ... .... .... .... .... .... .....※

மேனகை-சொல்-விருத்தம்

இம்-மோகனம்

வரமெலனசீசொன்னவெங்கள் வானவர்தலைவாபோற்றி .... ..........※
தரணியிலெவரானாலுந் தவம்புரிந்திருக்கும்பேணா .... .... ....※
வரிவிழிப்பகட்டால்வார்த்தை மழலையால்தவஞ்சிதைத்துத்...... ※
திரமுடன்வருவேனெந்தன் திராணியைப்பாருஞ்சுவாமி .... .....※

வசனம்

கேளுந்-தேவேந்திரமகாராஜனே-தேவரீரொன்பேரிற்-சித்தமி ரங்கிச்சொன்னபடியால்-அடியேனிந்த- ஆபத்தைக்காக்கவேண்டி யதே- நானிப்பவும் - அந்தவிசுவாமித்திர மகாரிஷியிடத்துக்குப் போய்-எவ்விதமாகிலும்-அவர்தபோபலத்தையெல்லாஞ்சிதைத் துவருகிறேன்-என்-திராணியைப்பாருஞ்சுவாமி .... .... ..........*

இந்திரன்-சொல்-வசனம்

எவ்விதமானாலும்-அந்தவிசுவாமித்திரன்றவத்தைஅழித்துவரவே ண்டும்பெண்ணேமேனகை(அப்படியேயழித்துவருகிறேன்சுவாமி

பொது-விருத்தம்

இம்-தோடி

துன்னலைப்புவிமாந்தர்க்குஞ் சுரருக்குமீண்டும்வந்த ...... ..... .....*
இன்னலைத்தவிர்ப்பதாக எழில்விசுவாமித்திரன்றன்பால் ...........*
சன்னலைநிகர்த்தசெஞ்சொற் கனிதனைப்பழித்தசெவ்வாய் ..... ... *
மின்னலையொத்தமேனி மேனகைநடக்கலுற்றாள்... ... ........*

பொது-வசனம்

அகோதெப்படியென்றால்- இமோர்பர்வதச்சாரலிலே- விசுவா மித்திரமகாரிஷி - தவத்தையழிக்கும்பொருட்டு- தெய்வலோகத்தி லிருந்துமேனகைவருகிறவிதங்காண்க .. ... ... ... .. .. *

மேனகை-வருகிற-தரு

இம்-புன்னாகவராளி-தாளம்-ஆதி

உல்லாச அபிநய வில்லாச சரச உசிதமேனகைவந்தாள் .. ... ... *
சொல்லாலுயர்முனிவ ரெல்லாமனமுருகி ... ... ... .. .. .. .*
சல்லா மெனுமதிக சல்லாப மோகன .. .. ... ... ... .. *
சுரத ரதிதுதிசெ யமிர்தரசவசன லலித வநவரத பரத விரகநிதி .. *
தோய்ந்தசித்தஜ லீலையிலேலருஜி வாய்ந்தசித்தினி ... ... ... *
ஜாதிவஜீகர .. .... .. ... ... (உல்லாச அபிநய வில்லாச சரச)
சேலைக்கடிந்துவடி வேலைத்துறந்தக்கண்கள் ... ... .. ... ...*
திடமுள மனவலி தனிலுயர் முனிவர்கள் ... ... .. .. ... *
செய்தவத் தையுஞ் சிதைக்குந் ... .. ... .. ... ... .......*
திவளுமதுரிதநற் பவளவிதழைக் கண்டால் ... ... ... ... ..*

ஜெகதல மதிலனு வளவும சைவிலாகற் ... ... ... ... ... *
சிலையுங் கிடந்துப் புதைக்குந் எங்குந் ... ... ... ... ... ... *
தேடியெடுத்தநற்தண் ணுடியையொத்தகன்னந் ... ... ... *
தெளிவுறு சதுர்மறை முடிவுண ரறிஞர்கள் ... ... ... ... ...*
செய்யவுயிரை வ்தைக்குஞ் ... .... ..... ... . ..... ..... .... .... *
சிந்தூரத்திலதமிடு சந்திரப் பிரபையைநிகர் ..... ..... ..... ....*
திருநுத விளைஞர்கண் மனதைவெ குவிரசச் ... ... . .... ....*
செப்பினிவிட்டுப்புதைக்கும் யாருஞ் செப்புமற்புத கஜத்தி ...*
னிற்பெருத்துமத்தகத்தை-மெய்ப்புறக்கதித்துப்பொற்கு.. ...*
டத்தையொப்பறப்பழித்து-திரண்டு பரந்து நிமிர்ந்து... .......*
வளர்ந்து செறிந்து ததும்பி சுணங்கு படர்ந்து ... ... ... ...*
செ.ழும்பொற்கலவையென்ற குழம்பித்பெருகளைந்து... .. *
கதம்பப்பொடி திமிர்ந்து நிரம்பக்கலனணிந்து ... ... ... .. *
சித்தமலையும்படிச்செய் குத்துமுலையின்பகரந் ... ... ... ... *
தேவரைமயக்குமொரு மூவரையுருக்குமத ... ... .. ... ...*
வேளினைவருத்துமணி நாகரையழிக்குநிறை ... ... ... ... ...*
யோர்களையழைக்குமுல கோர்களைமருட்டுமிதல் ... ... ... ...*
வாமமெவருக்கும்விர காணலையெழுப்புமெழில் ... ... ... ... *
சிறுகைப்பிடி யெத்தனை யத்தனை சிற்றிடை ..... ..... ..... ..... *
நற்றுடியைக் கொடியைப்பொருமணிச் .... ... ... ... ... *
சேலை மீது வாகு சேரு .... ..... ..... ..... .... ..... ..... *
மேகலை தங்கிய நாக ரிகம்பதி .... ..... ..... ..... ..... ..... *
ஞாலகங்களை யேவிலை கொண்டிடு ... ... .... ..... ..... ... *
தேசு ல்ாவு மாசி லாத .... ..... .... ..... ..... .... .....*
மேனிவிளங்கிய நாணயமென்சொல ... ... ... ... ... ... *
விறுபசும்பொனி ஞலுரைசண்டது ..... ..... ..... ..... *
நாளு நாளு மாசை யான ..... .... ..... ..... ..... ..... *
காமமிகுந்தனு போகசுகந்தரு .. ... ..... .. ... ..... ... *
நான்முழுதந்தனி யேகரைகண்டவள் ..... ..... ..... ..... *
வானு லாமி னேர்மை யான ..... ..... ..... ..... ..... ..... *
காதல லங்கிருத ரூபசவுந்தர .... ..... ..... ..... ..... .. *
ரோசை யணிந்த விநோதவிளங்கிவி ..... ..... ..... ..... *

சோதி தாழ்வி வாமல் வீசு ..... .... ... ... ..... ..... ..... ..... *
ஜீவரத்தினமோ துளைக் காதமுத்தமோ மகத் ..... ..... ..... ..... *
தானசித்திரமோ அனற்குருவிளக்கமோபறிக் ... ... ... ... ...*
காதபுஷ்பமோவெறுக் காரசக்கியமோ தெவிட் ..... ... .. .. *
டாவிருப்பமோசுரர்க் கானமுக்கியமோ ... ... ... ... ... ...*
சிறுபதங்கண்மிசை மருவுதண்டையுடன் ... .... ... .. .... *
அணிசதங்கைபது கலகலென்றிடவும் ... ... .. ... ... ... *
இடை நுடங்கவிரு முலைகுலுங்கவன ... ... .... ... .. ... *
நடைநடந்துநவ ரசமடந்தைதல .... .... ... .... ..... ... *
சித்திரமயிலேநிகர் நிர்த்தமுடனேமிகு ... ..... ... ..... ..... *
சேர்வையாக வாகுலாவு பரிமள ... ... .. ... (உல்லாச அபிநய)

மேனகை-சொல்-வசனம்

அடிபெண்ணே - நவரத்தினமாலை (தோழி-வசனம்) ஏனம்மா-இவர்தான் விசுவாமித்திர மகாரிஷிபோற்காணுதே -இப்படிப்பட்ட அகோரதபசுசெய்கிறவர்கண்ணைத் திறந்துபார்க்கிறதேது - என்பேரில்-மோகிக்கிறதேது-இந்தத்தபசு-அழிகிறதேது- எனக்கொன்றுந்தோற்றவில்லையே-தோழி... ..... ... .. .. .. ...*

தோழி-சொல்-வசனம்

இந்தவிசுவாமித்திரமகாரிஷியானவர்-ஒருக்காலுங்கண்ணைத்திறந்துபார்க்கமாட்டார்-அவ்வாதிரே- காற்றின்வழியாய்ப்போய் நின்றையேயானால்-உனதுபரிமளவாடையினாலே - ஒருவேளைக்கண்ணைத்திறந்து பார்ப்பாரென்று நினைக்கிறேனம்மா (அப்படியேசெய்கிறேனடி- நவரத்தினமாலை... ... ... ... ... ... ... ... *

விசுவாமித்திரர்-சொல்-வசனம்

ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி(சுவாமி)அடாகாலநேமி (ஐயா) ஏதடா-இவ்விடத்திற்சுகந்தபரிமளவாடைவீசுகின்றது -(சி-வச) அடாதம்பிகாலநேமி (ஏனண்ணன்)நமக்கில்லாதவாசனை இவருக்குமாத்திரம்-எங்கையடா-இருந்துவந்தது-அண்ணேன் - அதுஎனக்குத்தெரியமாட்டாது- ஆனால்இந்தக்கொட்டிப்பூவாசனையோ - இந்தக்கோரைப்பூவாசனையோ-இந்தஎருக்கம்பூவாசனையோ-இந்தமுருக்கம்பூவாசனையோ... .... ..... .... ... ... ... .. .. *

### சீஷர்-சொல்-விருத்தம்

இம்-ஆனந்தபைரவி

சந்தனம்பாரிஜாதஞ்சண்பகமசோகுபுன்னை........ ... ... ..... *
தொந்தலரகில்பொற்கொன்றை குங்குமங்கோங்குதாழை ..... . *
சிந்துரங்கடம்புசூதஞ் செறிந்துளவனத்தினாலே..... ......... .....*
விர்தையாஞ்சுகந்தவாடை மேன்மேலும்வீசுதையா... ....; ..... *

### வசனம்

மல்லிகைமுல்லை இருவாட்சி சண்பகமுதலாகிய விருட்சங்கள்எங்கணும்-மலர்ந்திருப்பதினாலே-பரிமளவாடை வீசுகின்றது சுவாமி.

### விசுவாமித்திரர்-சொல்-வசனம்

ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி(சுவாமி)அடாகாலநேமி (ஐயா) நானிந்தஇடத்தில்-வெகுகாலமாய்த்தவஞ்செய்கிறேன் - ஒருநாளும் இப்படிப்பட்ட - அற்புததிவ்யபரிமளவாடை வீசினதைக்காணேன்-இன்றைத்தினம்-இந்தப்பரிமளவாடையினாலே - ததோக்கியானமாயிருக்கப்பட்டமனதைக்கலைத்துப்போடுகின்றது - அதைநன்றாய்ப்பரிசோதித்துவாருங்கள்பிள்ளாய்-அப்படியேநன்றாய்ப்பரிசோதித்துவருகிறோஞ்சுவாமி..... ... ..... ... ..... ..... .....*

### சீஷர்-வசனம்

சுவாமி-சுவாமி - தேவரீர்சொன்னது-மெய்தான் -மெய்தான்-(விசுவச)என்னடாமெய்தான்மெய்தானென்கிறாய் தேவரீர் தவஞ்செய்யுமிடத்திற்குத்தெற்காக- ஒருமரத்தினடியிலே -என்னமோ ஒன்றுவந்திருக்கின்றது (சுவாமிசுவாமி) அதைப்பார்த்தால் கண்கூசுகின்றது-அடாஅதென்ன அக்கினிச்சுவாலையா(சீஷவச)உம்உம்-அல்லதுசூரியப்பிரகாசமா (சீஷவச) அவைகளெல்லாமல்ல சுவாமி (விசுவச)பின்னை என்னடாகண்கூசுகின்றது-(சீஷவச)இன்னமொருதரம்போய்ப்பார்த்துவருகிறோஞ்சுவாமி (விசுவச) ஆனால்போய்ப்பார்த்துவாருங்கள்பிள்ளாய்(சீஷவச)அப்படியேபார்த்துவருகிறோஞ்சுவாமி- அடாதம்பிகாலநேமி -இவளழகுக்கு-முக்காற்பணம்-ஆறுதுட்டுத்தாளும்போலிருக்கின்றதே-என்னடா அண்ணன் -கலாக்கினி-நீயப்படிச்சொல்வானேன்-காலேயணாக்காற்பணம் மூன்றுதுட்டுத்தாளுந்தாளும்(சுவாமிசுவாமி) ஏன்பிள்ளாய் - பின்னையொ

ன்றுமில்லை. அந்தமரத்தினடியிலே - ஒருசோதிமின்னல்வந்திருக்கின்றதையா(விசுவச)என்னடாபயல்கள் - சோதிமின்னலேதது - வருகிறதேதது - போகிறதேதது - இருக்கிறதேதது - என்னடாஊறுகிறீர்கள் ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி (சுவாமி) அந்தமின்னலானது - என்னமாயிருக்கின்றது(சிஷ்வச)சுவாமிசுவாமி - ஒருசொர்ண்டல் - இருகெண்டை. ஒருகொவ்வைக்கனி - இரண்டுதங்கக்குடம் - மேற்சொல்லிய குடத்திற்கொருமுழத்திற்கடியிலே ஒருதேன்கூடுஇவைகளெல்லாம் - அந்தமின்னலிலுண்டாயிருக்கின்றதுசுவாமி(விசுவச) அந்தமின்னலெங்கேயிருக்கின்றதுபிள்ளாய்(சிஷ்வச)அதோ - எனக்குநேராக இருக்கின்றது - பாருஞ்சுவாமி .. ... ... ... .. ..... *

விசுவாமித்திரர் - சொல் - வசனம்

ஆ - ஆ - பெண்ணே - நீயித்தனை தூரம் - என்னைத்தேடி வரவேண்டுமா - என்னைவரச்சொல்லி - உத்தரமனுப்பினல் - நான்வரமாட்டனே ஆரடாசிஷ்ஷியா காலாக்கினி (சுவாமி) அடாகாலநேமி (ஐயா) இவளழகைப்பார்க்க - என்னிரண்டுகண்கள்போதுமா (சிஷ்வச) சுவாமி - சுவாமி)இவ்விடத்தில் - ஆறுகண்களிருக்க - இரண்டுகண்களாகப்போவானேன்(விசுவச)ஏதடா ஆறுகண்கள்(சிஷ்வச) சுவாமிசுவாமி என்கண்ணிரண்டு - என்தம்பிக்கண்ணிரண்டு - தேவரீர்கண்ணிரண்டு - ஆகிய கண்களாறல்லவா இவளழகைப்பார்க்க - இந்த ஆறுகண்களும் போதாதா (விசுவச) அடபோடா துஷ்டப்பயலே - இவளழகைப்பார்க்க ஆறுகண்களும்போதாது - ஆயிரங்கண்களும்போதாது - பதினாயிரங்கண்களும் போதாது - இலட்சங்கண்களும் போதாதே - அரகரா - சிவசிவா ... .. .. .. ... ... ... ... .. ... *

விசுவாமித்திரர் - சொல்லுகிற - தரு

இம் - தோடி - தாளம் - ஆதி

கண்கள்போதாதே அரகர சிவசிவ ஒருகோடி கண்கள்போதாதே *
பெண்கள்சிகாமணிபேரழகைப்பார்க்க... ..... .. .. .... (கண்கள்)
சுந்தரமாகி நிறைந்த சரற்கால..... ... .... ... ... ... ... .. . *
சந்திரனுக்கொப்பான சுந்தரத்தைக்காண ......... ......(கண்கள்)
கன்னலைவென்றசொன் மின்னிலையோ சோதி... ..... .. ..... .. *
இன்னிலைநேரிவ ளன்னிலையைக்காண .. .... ... ....(கண்கள்)

துங்கப்பிரகாசஞ்செய் தங்கப்பதுமைபோல்..... ... .. .. ...*
இங்கிதச்சேர்வை அலங்கிருதத்தைக்காண .. .. ... ..(கண்கள்)

விசுவாமித்திரர்-ச்சொல்-வசனம்

ஆரடா-சிஷ்ஷியா-காலாக்கினி (சுவாமி) அடாகாலநேமி (ஐயா) இந்த ஆசனத்தையெடுத்து-அப்படியாகிலும்போடும்பிள்ளாய்..*

சீஷன்-சொல்-வசனம்

அடாதம்பிகாலநேமி-எனண்ணன் - ஒருநாளையஉபத்திரமல்ல இவருடனேபோராங்கிறது-பல்நாளும்-உபத்திரந்தான்...... *

விசுவாமித்திரர்-சொல்-சிங்காரபத்தியம்

இம்-புன்னாகவராளி

திசழுமாணிக்கமோ திவ்யரசக்கியமோ ... ... ... .. ......*
மோடியா எதிர்நின்ற மோகனாங்கி .. ... ... ... . .. *
மாசற்றதங்கமோ மதனவிலங்கமோ... ... ... ..... ..... ..*
வந்தெதிர்நிற்கின்ற வச்சிராங்கி .... ..... ... ..... ..... ..... .....*
நவரத்தினமாலையோ நயகுணவாலையோ..... ... ... .... .. ..*
குறுகிவந்தெதிர்நின்ற கோமளாங்கி..... ... .... ..... .... .. ....*
மதராஜமேட்டியோ மாதர்கிரீட்டியோ.. ... .... ..... .. .... *
தழுவவந்தெதிர்நின்ற சாமளாங்கி..... .. .. ..... ... .......*
எனதுமனவேதை யறியாததென்னகுறையோ... ..... ..... ...*
அடிமைமுறியோலை யெழுதிவைத்ததுவுமில்லையோ... ... ... ...*
சேர்வைதந்தென்னை மருவாதசெய்கையெனமோ.... ... ... ... *
காலில்வீழ்ந்தாகிலுங் கடைத்தேறுவேனே... ... ... ..... .... *

சீஷன்-வசனம்

சுவாமி-சுவாமி-எந்தஅக்காளையோழிவேண்டாமென்றான் - சுகமாய்ப்போய்விழும்.... .. .. ... .. ..... ..... ..... .... *

மேனகை-வசனம்

அடிபெண்ணே-நவரத்தினமாலை (எனம்மா) நான்பிறந்துபுத்தியறிந்து - இதுவனாக்கும் -ஒருஆணைப்பிறந்தவாள் -[முகம்பார்த்திருப்பனு(தோழிவசனம்)ஆ-அம்மா-ஐயையோ- நீயொருபாவத்தையும் - அறியமாட்டையே - அதையோசித்துப் பார்த்தால் - இலட்சத்துப்பதினாயிரத்துக்குமேற்படுமே-ஆ-கணக்குண்டா... *

விசுவாமித்திரர் - சொல் - தரு

இம் - சங்கராபரணம் - தாளம் - ஆதி

எவளோ இந்தச்சீமாட்டி எனக்கிசைந்தகண்ணாட்டி..... .... ..... *
சீமாட்டி எந்தனுக்கிசைக் கண்ணாட்டி ... ......... .... .. .... *
குவலயந்தன்னின்மின்னற் கொடிபோலுங்காணுதே..... ..... ..... *
குறித்தாலென்னையடிமைக் கொள்ளவந்தாற் போற்றோணுதே ..... *
கூச்சமேன்சும்மாவரலாங் கும்பிட்டாற்சேர்வைதரலாங் ... .... *
கூட்டிவைத்ததேகுருகடாட்சம் [இவள் (எவளோ)
கூவுமாங்குயிலோ மயிலோகனி தாவுபூங்கிளியோ வொளியோ
அரிவையிதனைப்பார்த்தால் அடியேன்வாய்த்தேனூறுதே.......... *
ஆனாலுமென்னமோ அதிசகாமமீறுதே .... .... ... .. *
அழைத்தால் தானாகுமோ அழையாவிட்டாலுயிர்போகுமே...... *
அதுந்தனிலுமனத்தாளுமா (எவளோஇந்தச்)
ஆண்பிறப்பினி லேபலனேதது விண்பிறப்பல வோதவ நேர்வது
தேமற்படர்ந்தமுலை செண்டுகள்போலாடுதே ..... .... .... *
சின்ன இடைதுவண்டு தேய்ந்துமிக வாடுதே ..... ..... .... ..... *
செய்ததவப்பயனால்வந்தாளோ தெய்வம்போற்காட்சிதந்தாளோ
திரும்பிப்பாராததுசெய்ததவக்குறையோ [இவள் (எவளோ)
தீர்ந்தரத்தினமோ அனமோசுவை கூர்ந்தபொற்கனியோ தனியே
இரண்டுதொடைநடுவில் இருக்குதோர்தேன்கூடு .. ..... ..... *
இதைவிடவேறேயுண்டோ இன்பமாமோட்சவீடு ..... .... [வாளா
என்னையும் ஆட்கொள்ள வருவாளா இன்பக்குறிஞ்சித்தேன் தரு
இரண்டுபாதத்திலும்போய்விழுவேனே (எவளோஇந்தச்)
என்சகிக்கவொணு ததுமாமயல் நான்சகிக்கில னேசிவனே யிவள்

சிஷ்ஷியர் - சொல்வசனம்

அடாஅண்ணேகாலாக்கினி (என்னடாதம்பி காலநேமி) நம்முடையசுவாமிதவஞ்செய்கிறவேளையில் - என்னடா அவலட்சணமாய மூகிருய் (உன்னுடனேசொன்னால் - தீர்க்கப்போகிறையா) நம்முடையகுருவைப்போலும் - இனியொருத்தனைக் காணப்போகிறமா சிஷ்ஷியனுக்குப்புட்டைப்பருத்துப்போச்சுதென்றல்லவோ புலம்புகிறார் - அல்லடா அல்ல - முட்டாளுத்தாயோழி - அதோவந்திருக்

கிருளே - அந்த - அம்மாளைப்பார்த்தல்லவோ அழுகிறார் - உனக்சென்னடா - ஆனால் - அவர்பாடவருக்குத்தான் - என்பாடெனக்குத்தான் ※

சீஷின் - சொல் - தரு

இம் - சங்கராபரணம் - தாளம் - ஆதி

எனக்கேனிந்தப்போராட்டம் இதற்குவராதோவாட்டம் ..... .... ※
நாமென்னசெய்வேன் என்னேரம்பீங்கலாட்டம்..... ..... ... .... ※
எனக்குவந்தாற்பொற்றம்பி உனக்குவந்ததேயானால் .... .. .... ※
எதிரெதிர்போட்டுக்கொண்டே இழுக்கலாம்பறிக்கலாம் (எனக்கே)
முழங்கான்மட்டும்வளர்ந்து முன்னும்பின்னுமாடுதே .... ... .. ※
முன்கையாற்றுங்கத்தாங்க முழுதுநழுவியோடுதே..... .. .... .. ※
மூதேவிபுட்டையுஞ் சிறுக்குமா ..... .... .... .... இன்னம்
முழம்வளர்ந்தால் இடைபொறுக்குமா .... .... ... ..... பஞ்சு
மூட்டையம்மாத்திரம் பருத்துதே..... .... .... .... .... ※
முண்டைசளுக்குதவா மலையோதொடை..... ..... .... .... ※
பண்டைமுட்டுதையோ சிவனேயிது .... .... (எனக்கேனிந்தப்)

மேனகை - சொல் - வசனம்

அடிபெண்ணே நவரத்தினமாலை - இந்தரிஷி - என்னைப்பார்த்துக் கண்ணாட்டி - கண்ணாட்டியென்றுசொல்லுகிறாரோ - ஆ - நன்றாயிருக்கின்றது (தோ - வச) ஆ - அம்மா - ஆசையல்லவாகெட்டது - அதோ நிற்கிறானே - வளியிறங்கின - பையல் - அவன்பேரிலெனக்கும் ஆசையாயிருக்கின்றது (மேனகை - சொல் - வசனம்) அடி நவரத்தினமாலை என்னடி எனக்கின்றைத்தினம் - இருந்திருந்து காமவிகாரங் கண்ணை மயக்குகின்றதென்னடி (தோவச) அம்மா உனக்கப்படிக்கிருந்தால் அதைப்பிறரறியச்சொல்லலாமா ... .... ... ..... ..... .... ※

மேனகை - சொல்லுகிற - தரு

இம் - ஆனந்தபைரவி - தாளம் - ஆதி

தனக்குத்தானேயேதோ காமம்பெருகுது.... ... ..... ..... ※
தாபம் மோகதாபம் விரகதாபம்வருகுது ... ..... ..... ..... ※
எனக்குத்தானே நெஞ்சி லெண்ணுதுமெண்ணுது .... .... .... ※
இந்தவிரகமென்ன வேதைபண்ணுது..... .... ..... .....(தனக்கு)
குத்துமுலையிரண்டும் விம்மிமீறுது - கோவையிதழூறுது..... .. ..※

சித்தஜபாணமென் மார்பைத்துளைக்குது ..... ..... .. ... *
தேசங்களைக்குது மோகம்விளைக்குது ..... ..... ..... (தனக்கு)
மாரனரண்மனை யோரந்துடிக்குது-மனதுமகிழ்நடிக்குது ... *
ஏராளமாமத வெள்ளமோடுது.... ... .. .... .... ...*
இப்போதேபோகிக்க என்னுள்ளநாடுதே ..... ... ...(தனக்கு)
மாவிற்குயில்களுங் கூடிக்கூவுது-மதியுந்தணல்தூவுது .. ... *
பூவினிலேயெனதுள்ளந்துள்ளுது..... ..... ..... .. ..... *
புத்திமிசமயங்கி வித்தியாசங்கொள்ளுது..... ..... ..... (தனக்கு)

விசுவாமித்திரர்-சொல்-வசனம்

ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி(சுவாமி) அடாகாலநேமி(ஐயா) இவளென்னமோ ஒருவார்த்தைச்சொல்லுகிறுள் அதுஎன்செவிக்குத்-திவ்வியாமிர்தஞ்சொரிந்தாற்போலுமிருக்கின்றது ..... ...... *

விசுவாமித்திரர்-சொல்-தரு

இம்-தோடி-தாளம்-ஆதி

மோடியேன்பெண்ணே யொருமுத்தநீதாடி ..... ... .... *
கண்ணே யொருமுத்தநீதாடி ..... ... .... .... .... ...*
மோடியென்னடிதகாதினி கூடிவிளையாடுவோமினி..... ..... .. *
கோடிசரணஞ்செய்கிறேன் .... .. .. ... ... .. .. உன்
குருவுக்குப்புண்ணியமாய்ப்போகுது... ... ... ... ..... *
மோகத்தினிலேமெத்தவும்.. .... ... .... ... ... .. *
வாதைப்படவோ இத்தனை ..... ... ..... ... ... .... (மோடி)
கொங்கைக்குடங்களின் குலுக்கிலே .... .. .... ... .... *
செங்கைக்கிடுவளை கிலுக்கிலே..... ..... ..... ..... ..... .....*
திங்கட்பிறைநேர் நுதலிலே-மங்கைக்கனிவா யிதழிலே .... .... *
மனவலுமையெல்லாம் போச்சுதே ..... ..... ..... ... ..... இனி
மாதவஞ்செய்து வாழ்கவா-மனநொந்ததி விரகந்தனில் .... ... *
உனைநம்பினே னென இத்தனை ..... ..... .... ..... ..... (மோடி)
மன்னித்திகழுமுடையிலே-துன்னித்தெரியுந்தொடையிலே ... *
மின்னுமரவப்படத்திலே-உன்னும்விரகதடத்திலே ..... ..... .... *
உலகமேழுமுழுகிப்போகுமே- ஒருவன்மூழ்கிறதாபெரிது .... *
ஒருஜமப்படநானுற்றிடுஞ்-சமயத்தினிலேமுற்றிலும்...(மோடி)

விசுவாமித்திரர் -சொல்- கலிப்பா
இம்-புன்னாகவராளி

காமமேமெய்யோகங் காமமேமெய்யோகங் ........ *
காமமேமெய்ஞ்ஞானங் காமமேமெய்ஞ்ஞானங்... *
காமமேவேதாந்தங் காமமேசித்தாந்தங் ......... *
காமமேமோட்சங் காமமேகாரணமே ... ...... *

வசனம்

கேளும்பெண்ணே-சகலப்பிரபஞ்சத்துக்குங் - காமமேமுன்னிற்கப்பட்டது-காமமில்லாவிட்டால்-உலகமில்லை - உலகமில்லாவிட்டால்-ஞானமில்லை-ஞானமில்லாவிட்டால்-மோட்சமில்லை மேலும் இம்மைமறுமை இரண்டிற்குங்காமமேமுதற்காரணமாயிருக்கின்றது-எனக்கானல்-விரகவேதனை சகிக்கக்கூடவில்லை - என்காமவிடாயைத்தீர்ப்பாயடிகண்ணே ..... .... .... .... .... .... .... ....*

காலாக்கினிவசனம்

அப்பப்பா - ஐயையா - அடாஅண்ணன்காலாக்கினி-என்னடா அழுகிறாய் - அடாதம்பிகாலநேமி-நம்மையர் - சீஷனுக்கு-வளியிரங்கிப் போச்சுதென் றல்லவோ அழுகிறார் - அடபோடாமுட்டாளுத்தாயோழி - அதோவந்திருக்கிறளே - அந்தஅம்மாளைப் - பார்த்தல்லவோ - அவரழுகிறார் - உனக்காக-வியசனப்படுகிறதல்ல போடா(அப்படியா) .... ..... .... ..... ..... .... ... ..... .....*

காலாக்கினி-சொல்-தரு
இம்-தோடி-தாளம்-ஆதி

வருத்தமாயெனக்கிதுபருத்துநோவுதே-அடாதம்பி ..... ..... .....*
வருத்தமாயெனக்கிது பருத்துநோவுதே ..... ..... ..... ..... *
வருத்தமாய்த்தம்பி தூக்கமாட்டேன்போடா .... ..... .... *
வல்லடிபுட்டையை நீசற்றேதூக்கடா .. ... ... ..... *
வாரித்தலைமேல் வைக்கவும் ஆருமிதைத்தூக்கப்போறர் (வருத்த)

விசுவாமித்திரர்- சொல்-வசனம்

ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி (சுவாமி) அவளென்பேரில் - கோபமாயிருக்கிறளா - சந்தோஷமாயிருக்கிறளா - பார்த்துவாரும்பிள்ளாய்(அப்படியேபார்த்துவருகிறேன்சுவாமி)சுவாமிசுவாமி- அந்த அம்மாள்கோபமாகத்தானிருக்கிறளையா .. .... .... .... *

விசுவாமித்திரர் - சொல் - தரு

இம் - புன்னாகவராளி - தாளம் - ஆதி

இத்தனைக்கோபமேன்வாடி ..... ..... ..... ..... ..... ..... ..... *
என்னாசைமனோகர மானபெண்ணே கண்ணே ..... ..... ..... *
இத்தனைக்கோபமேன்வாடி ..... ..... ..... ..... (என்மீதினில்)
சித்திரத்தினைப்பழிக்கும் ரத்தினத்தினற்சொலிக்கும் ..... ..... ..... *
உச்சிதஜகப்பிரசித்த சித்தினிச்செருக்கியேயுன் ..... ..... ..... *
சித்தமிரங்காததென்னடி என்மோகதாபஞ் ..... ..... ..... ..... *
சற்றுமடங்காததென்னடி கண்ணாட்டி கண்ணாட்டி ..... ..... ..... *
உன்னைச்சேர்ந்தணைந்திதம் - தான்கடித்ததின் ..... ..... ..... *
தேன்குடித்திட - நான்சமர்த்தனென் ..... ..... ..... ..... ..... *
சிந்தையின்பநினைந்துகலங்குது ..... ..... ..... ..... ..... ..... *
சேரவாடிபாவி (ஆ) ..... ..... ..... (இத்தனைக்கோபமேன்வாடி)

மேனகை - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மேதினிமாயைநீக்கி மெய்த்தவம்புரிகுவோர்க்கு ..... ..... ..... *
காதல்சேர்காமமேது கன்னியர்விருப்பமேது ..... ..... ..... ..... *
தீதிலாத்தவங்கெடுத்துச் சேர்ந்துமையணைந்தேனானால் ..... ..... *
பாதகமல்லால்வேறு பலனுண்டோசொல்லுவீரோ ..... ..... ..... *

வசனம்

கேளும் - முனிவரே - உலகமாயையை யொழித்து மெய்மையாகியதவஞ் செய்யப்பட்டவர்களுக்கு ஆசையேது ஸ்திரீகள் விருப்பமேதுஅல்லவென்று தவத்தைக்கெடுத்து - உம்மைச்சேர்ந்தேனானால் புண்ணியமுண்டோ - ருஷீஸ்வரரே ..... ..... ..... ..... ..... *

விசுவாமித்திரர் - சொல் - விருத்தம்

இம் - தோடி

சொல்லுமென்றுரைத்ததிவ்ய தோகையேநான்முன்செய்த .. .. *
நல்லமெய்த்தவத்தாற்றெய்வ நல்கியபொருணீகண்டாய் ..... ..... *
அல்லல்செய்காமநோய்தீர்த் ததரத்தேன்றுளியைத்தந்துப் ..... .. *
புல்லினாலுனக்கேபுண்ணியம் பொருந்திடுமேணவோம்வாராய் . *

வசனம்

சொல்லுமென்றுரைத்த - திவ்யமயிலுக்கொப்பானவளே நான் முற்பிறப்பில் செய்த - தபோபலத்தினாலே தெய்வங் கொடுத்த பொருள் - நீதான் - துன்பத்தைச் செய்யாநின்ற விரகநோய் தீர உனது - அதரத்தேன்றனியைக்கொடுத்து - என்னை ஆலிங்கனம்பண்ணினால் - உனக்குப்புண்ணியங்கிடைக்கும் - சீக்கிரத்திலணைவோம் வாரும்பெண்ணே.... ..... ..... ..... ..... ..... ..... ..... *

விசுவாமித்திரர் - சொல்லுகிற - தரு

இம் - தோடி - தாளம் - ரூபகம்

நான்செய்தபாக்கியம் அரகர நான்செய்தபாக்கியம் ..... ..... ..... *
மான்போலும் வேல்விழி மாதுகிடைத்தது..... ..... (நான்செய்த)

வாடும்பயிருக்கு மழைவந்ததுபோலும்... ..... ..... ..... ..... *
வண்டினைத்தேடி மலர்வந்ததுபோலுந் .... ..... ..... ..... ..... ..... *
தேடும்பொருள்கையிற் சிக்கினதுபோலுந்.... ..... ..... ..... *
திருப்பெண்ணிகரித்தத் துரைப்பெண்கிடைத்தது .... .... (நான்)

தேவாமிர்தமிச் செகத்திற்கிடைத்தாற்போல் .... ..... ..... ..... *
திகழுமதியமெதிர் வந்துதித்தாற்போல.... ..... ..... .... .... .... *
மூவருஞ்சேர்ந்தொரு மூர்த்தியாய்வந்தாற்போல் .... .... .... *
முந்தியிம்மாதெந்தன் முன்னாகவந்தது..... ..... .....(நான்செய்த)

அரனுக்கிடப்புற மம்பிகையுற்றாற்போல் ..... .... .... ..... *
அம்புயனுவிற்கலைமா தமர்ந்தாற்போல் .... ..... ..... .... *
திருமாலின்மார்பினி லிந்திரைசேர்ந்தாற்போல் ..... ..... .... *
தேடியெந்தனையுற வாடவந்ததேயிவள் .... ..... .... (நான்செய்த)

விசுவாமித்திரர் - சொல் - கந்தார்த்தம்

இம் - தோடி - தாளம் - ஆதி

காமாயுதவிழியான்மிக மாமோகவிகாரமீறிவாடவும்வசமோ .... *
தேமாந்தளிரியல்பெறு பூமாதேயினியிவ்வேளை .... ..... .... *
போகிப்பம்வாடி சுகமா சையோகிப்பம்வாடி ..... ..... ..... ... *
வேகமாகசமபோகமாக அதிதாகமாகவினியேசமாகநாம் ..... ..... *
போகிப்பம்வாடி சுகமாசை யோகிப்பம்வாடி ... ... ... ... *

மேனகை-சொல்-கந்தார்த்தம்

பஞ்சேந்திரியமடக்கிக்கெஞ்சாமிர்தமென்னும்மாதர்கேள்வியிலாத
நெஞ்சார்முனிவரர்தங்கட் கஞ்சாமதனிலைசெய்ய ... .... .. *
வாராதுகாணும் இன்பசுகந் தாராதுகாணும் .... ... ...... ... *
சேராதானந்தங் கூராதுசொற்றமை ... .. .. .. ... .... ... .. *
போராதுதேகமுஞ் சோராதுன்கையில் ..... ... ...... ..... .... *
வாராதுகாணும் இன்பசுகந் தாராதுகாணும்..... ... .... .... ..... *

விசுவாமித்திரர்-சொல்-கந்தார்த்தம்

திங்கட்பிறையெனு நகமுனகொங்கைக்குடமேருவிற்குறிகொள்
ளவழுத்தி-துங்கக்கனியிதழ்பருகிச் செங்கைக்குளணைத்து மையல்
தீர்க்கிறேன்வாடி சமர்த்தைநான் பார்க்கிறேன்வாடி..... ..... ... *
பார்க்கிலிங்கேயிரு வோர்க்குந்தொந்தமுந்தன் .... ..... ..... .... *
மூர்க்கமேனிநிசன் மார்க்கமாகமையல் ... ..... ..... ..... ... *
தீர்க்கிறேன்வாடி சமர்த்தைநான்பார்க்கிறேன்வாடி .... ... .. *

மேனகை-சொல்-கந்தார்த்தம்

துன்னுஞ்சடைமுடி பூண்டெழில் ..... .... .... .. ... ..... ... *
மன்னும்பரிசாதிவாக்கு மனமுமிரந்த.. ..... ..... .... ..... ... *
தன்னந்தனியுனைதேர்ந்தவர் ... ..... ... .. ..... ... ... *
சின்னஞ்சிறுபெண்களாசைத்தீர்ப்பாரோ போம்போம் .... ..... *
இதைப்பெண்களேற்பாரோபோம்போம் .... .. ..... .... *

விசுவாமித்திரர்-சொல்-வசனம்

அடிபெண்ணேமேனகை - நீயா - இத்தனைவிகாரங் கொடுத்து- என்றவத்தைக்கெடுத்தவள் - அடிசண்டாளி - நல்லது -உன்னைவர விட்டானே - தேவேந்திரன் - அவனைநானறிவேன் - முன்னாலே கௌதமரிஷியென்பவர் - அவன்சரீரமெல்லாம்- ஆயிரம்-யோனி யாகவல்லவாசபித்தார் - அதுசாபமல்ல - இப்போதவனைபஸ்பமாச் சபித்துப்போடுகிறேன்-ஆகட்டும்-நீபோ ..... ... ..... ..... *

வசனம்

ஆரடாசிஷ்ஷியாகாலாக்கினி (சுவாமி) அடாகாலநேமி(ஐயா)நம் முடைய-தண்டுகமண்டலம்-வியாக்கிரமாசனத்தை - எடுத்துக்கொ ண்டுநடவுங்கள்(அப்புடியேஎடுத்துக்கொண்டுநடக்கிறேஞ்சுவாமி

பொது - கொச்சகலிக்கலிப்பா
இம் - புன்னாகவராளி

மின்னுபுகழ்விசுவா மித்திரனு மேனகையுஞ் ..... *
தன்னமையர்லங்கே தழுவியணைந்தளவில் ......... *
நன்னயமாயோர்முகூர்த்த நாழிகையிலேயதிக *
உன்னதமதாக ஒருபெண்பிறந்தாளே..... ........ *

பொது - வசனம்

அசோதெப்படியென்றால் - இப்படியாகவந்த - விசுவாமித்திர மகாரிஷிக்கும் - மேனகைக்கும் - ஒருபெண்பிறந்த மாத்திரத்திலே விசுவாமித்திரர் - இராஜரிஷியானபடியாலும் - மேனகைதெய்வப் பெண்ணானபடியாலும் - பிறந்தசிசுவின்பேரிலே இச்சையில்லாமல் - விசுவாமித்திரர் வேறோரிடத்திற் றவஞ்செய்யப்போயினார் - மேனகைதெய்வலோகத்துக்குச்சென்றாள் - அவ்விடத்திற்றனியேகிடந்த குழந்தைக்கு - ஆகாரமில்லாமல் - அழுதுகொண்டிருக்க - அவ்வனத்தி லுள்ள சகுந்தலைப்பட்சிகள் - தமதுசிறகுகளினாலே நிழல்கொடுத்து காத்துக் கொண்டிருக்கும்போது - அந்தவனத்தி லிருக்கப்பட்ட கண்ணுவமகாரிஷியானவர் - அவ்வழியே வருகிறவிதங்காண்க ... *

கண்ணுவர் - வருகிற - தரு
இம் - உசேனி - தாளம் - ஆதி

கண்ணுவர்வந்தார் மகாரிஷி கண்ணுவர்வந்தார் ..... .. ... .... *
நண்ணுமொருசதுர்வேதப்பொருளணி ..... ... ... .. .... *
நாலுந்தெரிந்தமெய்ஞ்ஞானசிரோமணி ......(கண்ணுவர்வந்தார்)
வருத்தும்பிறவிக்கிடஞ்செயிரண்டு ..... ... ... .. .... ..... *
வல்வினைகெடமறைமொழிவிண்டு ..... ... ..... ... .. .... *
கருத்திற்கிசைந்தஇலங்குநற்றண்டு ..... .. ..... ..... .... .....*
கமண்டலங்கரதலத்தினிற்கொண்டு .... ..... ... ..... .. ... *
கருணைக்கடலெனுமுத்தமர் .... .. ..... ... ..... .. ..... ...*
பொறுமைக்கொருநிலமொத்தவர் ... ..... (கண்ணுவர்வந்தார்)
நித்தியாநித்தியப்பொருளைத்தேர்ந்து ..... ... .... ..... ... *
நிருவிகற்பநன்னிலையைச்சார்ந்து .... ..... ..... ..... .. ..... *
தத்துவாதீதப்பிரணவமோர்ந்து ..... ..... ..... ..... ..... ... *

சகசச்சிதானந்தங்கூர்ந்து .... .... .... .... .... .... .... *
தலைமைப்பெறுமுலகத்தினி .... .... .... .... .... .... .... *
னளினத்தவனிலைபெற்றவர் .... .... ...... (கண்ணுவர்வந்தார்)
புனிதமாய்ச்சடைமுடியைதரித்து .... .... .... .... .... .... *
புஜத்தினிற்காஷாயம்விரித்து .... .... .... .... .... .... .... *
இனிதுடன்ஜெபமாலைத்தரித்து .... .... .... .... .... .... .... *
இலங்கும்பிர்ம்மமந்திரமுச்சரித்து .... .... .... .... .... .... *
இருளாற்றிடுமொளிநற்பர .... .... .... .... .... .... *
வெளியைத்தனதுளம்வைத்தவர் .... .... (கண்ணுவர்வந்தார்)

கண்ணுவர் - சொல் - வசனம்

அப்பாசிஷ்ஷியாவிவேகசிந்தாமணி சுவாமி) ஞானவிளக்கம் ஓது கிறேன்கேளுமப்பா(அப்படியேகேட்கிறேன்சுவாமி) .... .... *

கண்ணுவர் - சொல்லுகிற - தரு

இம் - புன்னாகவராளி - தாளம் - ஆதி

சத்துச்சித்தானந்தஞ்சத்தியஞ்சகத்தோரே .... .... .... .... *
சத்தன்றிமற்றதநித்தியஞ்சகத்தோரே .... .... .... .... *
மெய்க்குருபாதத்தைமேவுஞ்சகத்தோரே .... .... .... .... *
மேவினுலெல்லாம்வெளியாஞ்சகத்தோரே .... .... .... .... *
பொய்க்குருவைத்தேடிப்போனாற்சகத்தோரே .... .... .... *
பொன்னுமிரும்பாகிப்போகுஞ்சகத்தோரே .... .... .... *
சாதனைநான்கையுஞ்சாருஞ்சகத்தோரே .... .... .... .... *
சார்ந்தான்மெய்ஞ்ஞானந்தழைக்குஞ்சகத்தோரே .... .... .... *
ஏதின்மெய்ஞ்ஞானமதெய்திற்சகத்தோரே .... .... .... *
ஏக்கைக்கியபாவனையெய்துஞ்சகத்தோரே .... .... .... .... *
சமயப்படுகுழிச்சார்ந்தாற்சகத்தோரே .... .... .... .... *
தாக்காதசஞ்சலந்தாக்குஞ்சகத்தோரே .... .... .... .... *
அமைவுற்றவொன்றையடைந்தாற்சகத்தோரே .... .... .... *
அல்லற்பிறவியறுக்குஞ்சகத்தோரே .... .... .... .... .... *
சாத்திரக்குப்பையைத்தள்ளுஞ்சகத்தோரே .... .... .... .... *
சற்குருபாதத்தைச்சாருஞ்சகத்தோரே .... .... .... .... *
சூத்திரசுகாதீதந்தன்னிற்சகத்தோரே .... .... .... .... *
தூங்காமற்றூங்குஞ்சுகங்காண்சகத்தோரே .... .... (சத்துச்சித்தா)

வசனம்

அப்பாசிஷ்ஷியாவிவேகசிந்தாமணி(சுவாமி) .... ..... ... ...*

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

வடதிசையிமயச்சாரன் மனிதர்ச்சஞ்சாரமின்றிக் ... ..... .... *
கடகரிவேங்கைசெந்நாய் கரடிகள்வாழுமிந்த ... ... ..... ...*
அடவியிற்சிறுகுழந்தை யழுகுரலோசையேது ..... .... ... *
திடமுடனுதிக்குஞ் சென்று நீயறிந்திடாயே ... ..... ..... *

வசனம்

அப்பாசிஷ்ஷியாவிவேகசிந்தாமணி(சுவாமி) மனிதர்சஞ்சார மில்லாத - வடதிசைப்புறமான - இமயச்சாரலிலே - மதத்தயானைகளும் - பருத்தபுலிகளும் - சிவத்தநாய்களுமாகிய - பலவிதமிருகங்கள் - சஞ்சரிக்கப்பட்ட - இந்த ஆரணியத்திலே - ஏதோ - ஒருசிறுகுழந்தையழுகுரலோசையேது - நாலுதிக்கும் போய்ப்பார்த்து வாரும் பிள்ளாய் (அப்படியேபார்த்துவருகிறேன்சுவாமி) ..... ... ...*

சீஷன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

தன்னிகரில்லாஞானத் தலைவனேகேளாய்தேவர் ..... .... .....*
சொன்னசொற்படியேசென்று சோதித்துமுழுதும் பார்த்தேன்*
அன்னைதந்தையருமற்றோ ராருமங்கருகிற்காணேம் ... . *
பொன்னிறக்கழுக்கள்காக்கப் புலம்புதோர்குழநதைதானே ..... *

வசனம்

சுவாமிசுவாமி - தேவரீர்சொன்னபடியேசென்று வனமுழுதுஞ் சோதித்துப்பார்த்தேன் - அவ்விடத்தில் - தாய்தந்தையராருமில்லாமல் - பொன்னிறமாகிய சகுந்தலைப்பட்சிகள் - தமதிறகுகளால் - நிழல்கொடுத்துக்காக்க - அந்தநிழலிலே ஒருசிறுகுழந்தை அழுதுகொண்டிருக்கின்றதுசுவாமி (ஆனாலதைப்போய்ப் பார்த்துவருவோம் வாரும் பிள்ளாய்) ..... ... ... .... .... ..... ... ..... *

கண்ணுவர் - சொல் - விருத்தம

இம் - ஆனந்தபைரவி

அரகரசிவனேயிந்த அழகிளங்குழந்தைதன்னைப் ... ..... ... *
பிரியமாய்ச்சுமந்துநொந்து பெற்றவராருகில்லாமற் ... ..... ....*

சுரமெனும்பெரியகாட்டிற் றுணிவுடனெறிந்துபோன ... ...... ✻
எரிமனத்தவர்களாரோ யாதொன்றுமறிகிலேனே....... .......... ✻

வசனம்

ஆகராசிவசிவா - இப்படிப்பட்ட ஆரண்ணியத்திலே திவ்யமங்கள மாணிக்கப்பிரகாசம்போலிருக்கிற் குழந்தையாருதோ இந்தக்குழ ந்தையைபெற்ற-கடினசித்தமுள்ள தாய்தந்தையாராரோ அப்பா விவேகசிந்தாமணி (சுவாமி)எனதுதிவ்யதிஷ்டியிலேபார்த்துச்சொ ல்லுகிறேன்பிள்ளாய்(அப்படியேபார்த்துச்சொல்லுஞ்சுவாமி) ..✻

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மேதினிதனிலேவிசுவா மித்திரன்றவமழிக்க ... ..... .... ... ✻
மாதுமேனகையையிந்திரன் வரவிட்டான்வலையந்தக் .... ...... ✻
காதிமைந்தனும்புணர்ந்த காரணமதனால்வந்த ..... .. .... ✻
ஏதில்பெண்பிள்ளைதன்னை யெறிந்துவிட்டவர்கள்போனார் ... ..✻

வசனம்

அப்பாசிஷ்ஷியாவிவேகசிந்தாமணி-இந்தக்குழந்தை யாரென்று பார்த்தால்-இந்த-இடத்தில் விசுவாமித்திரமகாரிஷி தவஞ்செய்தார் அவர்தவத்தையழிக்க-தேவேந்திரன்- மேனகையைவரவிட்டான்- அவள்பேரில் விசுவாமித்திரர் மோகித்து-அவளைச்சேர்ந்ததினாலே- இந்தப்பெண்பிள்ளைபிறந்தாள்- விசுவாமித்திரர்- இராஜரிஷியான படியினாலும்- மேனகைதெய்வப்பெண்ணாகையாலும்- இந்தச்சிசு வின்பேரில்இச்சையில்லாமற் காட்டிலெறிந்துபோனார்கள் - ஜீவகா ருண்ணியரா யிருக்கப்பட்டவர்கள்- இந்தச்சிசுவைப்பார்த்து- எப் படிப்போவார்கள்-ஆகையாலிந்தக்குழந்தையை-நமதாசிரமத்துக் குக்கொண்டுபோவோம்வாரும்பிள்ளாய் (சிஷ்ஷியன்வசனம்) அப் படியேயெடுத்துக்கொண்டுவருகிறேன்சுவாமி ... .... ... . ✻

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

இந்தநற்குழந்தைதன்னை யியலுடன்வளர்வதாகத்... ... ......✻
தந்தையுந்தாயும்போலச் சதாசிவனருளேகாக்க... ... ... ... ...✻

எந்தனுசிர்வதத்தா லியாதொருதுயரில்லாமல்... ... ... ... .... *
அந்தமாம்புவியின்மீதி லநுதினம்வாழிவாழி ... ... ... ... ...*

வசனம்

அப்பாவிவேகசிந்தாமணி - நாமெடுத்துவந்த பெண்குழந்தை யை ஆதியிலேசகுந்தலைப்பட்சிகள்காத்திருந்தபடியினாலேஇந்தக் குழந்தைக்குச்சகுந்தலையென்றுபேரிட்டேன் - நம்மிடசகுந்தலை பசித்திராது-பால்-கனிவர்க்கங்கள் வேளைதப்பாமற்கொடுத்து வள ர்த்துவாரும்பிள்ளாய் (அப்ப்டியேகொடுத்து வளர்த்துவருகிறேன் சுவாமி ..... ..... ... .... .... ... ..... ... ... ...*

பொதுவிருத்தம்

இம்-ஆனந்தபைரவி

ஆளுநல்லருண்மிருந்தோ ரருந்தவந்தனிலுயர்ந்தோர்..... ... ... *
மூளுமும்மலங்கடந்தோர் முனிவர்கண்ணுவரிடத்தில் .... .. ... *
வேளும்வந்திறைஞ்சும்வாகை மிகுசகுந்தலைப்பெண்பாவை......*
நாளுமோர்மேனியாக நலமுடன்வளர்கின்றாளே... ..... ..... ..*

வசனம்

இப்படியாக-சகுந்தலைகண்ணுவரிடத்தில்-வளர்ந்துவருகிற கால த்திலே - கண்ணுவராசிரமத்துக்குச் - சதானந்தரிஷிவருகிறவிதங் காண்க .. ..... ... ... ... ... ... ... .... ... *

சதானந்தர்-வருகிற-தரு

இம்-அசாவேரி-தாளம்-ஆதி

சதானந்தர்வந்தார் ரிஷி சதானந்தர்வந்தார் ... .... ... ... ...*
சிதானந்ததியானி எல்லாந் ..... ..... ... .. ..... ... ...*
தேர்ந்துளமெய்ஞ்ஞானி.. ... ... ... .....(சதானந்தர்வந்தார்)

மாதவப்பிரகாசர் சுகானுபவவிலாசர் ... .... ..... .. ... *
தீதிலாத்தவநேசர் வேதந் திகழுந்திவ்யதேசர் ... ... (சதானந்தர்)

அருந்தவசிவயோகி நிகராகியநல்விவேகி... .. ... ..... ...*
நிரந்தரங்கனிவாகி பிர்ம்ம நிஷ்டைசெயுநிர்வாகி......(சதானந்தர்)

அதிதநூற்பிரமாண மூதறிவினுக்கதுதோண... .. ... ... .....*
கதிதருந்துறைபூண முனி கண்ணுவர்தமைக்காண ...(சதானந்தர்)

சதானந்தர் - சொல் - வசனம்

சரணஞ்சரணங் - கண்ணுவமகா்முனியே (கண்ணுவர் - சொல்வசனம்) சரணஞ்சரணம்வாருஞ்சதானந்தரோ ... .. ..... ... ... *

கண்ணுவர் - சொல் - வசனம்

அப்பாசிஷ்ஷியாவிவேகசிந்தாமணி - நம்முடையசதானந்தருக்கு ஆசனங்கொண்டுவந்துபோடும்பிள்ளாய் - அம்மாசகுந்தலை - சதானந்தரைச்சரணஞ்செய்துகொள்ளுமம்மா (அப்படியேசரணஞ் செய்துகொள்ளுகிறேன்சுவாமி .. .. ... ... ... ... .... .... *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

அத்துவிதத்தையன்றி யநித்தியதேகமாதி... ..... ..... ... ... ...*
மித்தையென்றுணர்ந்துநான்கு வேதத்தின்முடிவைச்சார்ந்த ... *
முத்தனே போற்றிஞான முனிவனேபோற்றிதுய்ய .. ... ....*
தத்துவாதீதபோற்றச் சதானந்தரிஷியேபோற்றி... ... .. ...*

சதானந்தர் - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

அன்னமேவாழி யாயிழைவாழி... .... ..... .. *
பொன்னனேனினிய பூவையேவாழி ... ... ...*
நன்னெறியுணர்ந்த நங்கையேவாழி ..... ... ... *
தன்னிகரில்லாச் சகுந்தலைவாழி... .... ... ...*

சதானந்தர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

அத்தனேமுனிவர்க்கெல்லா மரசனேயரியவேத ... ... ... ... *
சுத்தனேபிரமர்க்கொப்பாங் கண்ணுவரிஷியேகேளாய் ... ... ...*
இத்தனையறிவுமன்புமிணக்கமு மிசைந்தவிந்த ... ... ... ... *
உத்தமியாரோகண்டா யுவந்தெனக்குரைசெய்வீரோ ... ... ... *

வசனம்

கேளுங்கண்ணுவமகாமுனியே - மகாபுத்திசாலியாகிய - இந்த உத்தமியார் - எனக்குத்தெரியச்சொல்லுஞ்சுவாமி ... ... ... ...*

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

இமயமலைச்சாரலிற்கோசிகன் றவத்தைச்செய்தான் ... ... ... *
இந்திரனங்கதையழிக்க மேனகையைவிடுத்தான் ... ..... ... *
குமரியவண்மேன்மயக்கங் கொண்டுவிசுவாமித்திரன் ... ..... ...*
கூடியபோதினிற்பிறந்த குழந்தையிதுகண்டாய் ... ... ... *
அமர்கழுக்கள்காத்திடவிவ் வடவிதனிலெறிந்தே ... ... ... ...*
அவர்போனார்யானொருநா ள்வ்வழியேசென்றேன் ... ..... ... *
நமதுகண்ணிற்கண்டவளை யெடுத்துவந்துவளர்த்தேன் ... ..... *
நல்லகுணசாலியிந்த நங்கைநெறியிதுவே ..... ..... ... .... ... *

வசனம்

கேளுஞ்சதானந்தரோ - இந்தப்பெண்மகாகுணவதியான படியால் - க்ஷத்திரியாளுக்சேயோக்கியம் - மேலும் - எவ்வனகாலமாயிருக்கின்றது - நல்லயோக்கியாளைப்பார்த்துப் பாணிக்கிரகணஞ்செய்துகொடுக்கவேண்டுமென்று - நினைத்திருக்கிறேன் - குருகடாட்சம் - அப்படியேநடக்குஞ்சுவாமி (கண்ணுவர்வசனம்) கேளுஞ்சதானந்தரிஷியே - தேவரீ ரிங்கெழுந்தருளிய காரணமென்ன தெரியச்சொல்லுமையா ... ... ..... ... ... *

சதானந்தர் - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

ஏகமாய்ப்பலவாயெங்குமிலங்குபூரணசைவல்லிய ... ... ... *
யோகமாதவரோமாயையொழித்தகண்ணுவரோகேளீர் ... .... *
பாகமாம்வேள்வியொன்றுபண்ணுதற்கிசைந்துவந்தேன் ..... ..... *
ஆகையால்தேவரொன்பினங்கெழுந்தருளுவீரோ ... ..... .. .....*

கண்ணுவர் - சொல் - வசனம்

அப்படியேபோவோம்வாரும்சுவாமி ... ... ... ... ... ... ... ... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

சாலவுமறிவின்மிக்கசகுந்தலைத்தாயேகேளாய்ச் ..... ... .... *
சீலமாமுனிவர்பின்போய்ச்சீக்கிரமாய்வருகிறேன்யான் ... ... *

கோலமாயதுவாரைக்குங்குலவுமாசிர்மந்தன்னிற் .... .... ..... *
பாலைநேர்மொழியினுளேபதலமாயிருந்திடாயே ... .. ...... *

வசனம்

அம்மாசகுந்தலை-நான்சதாநந்தரிஷி ஆசிர்மத்திற்குப்போய்வருகிறேன் - நீயிங்கேபதலமாகயிரும்மம்மா (அப்படியேயிருக்கிறேனையா... ..... .. ... ... ... ... ... ... ..... ..... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-கும்பகாம்பூதி

பெண்ணினல்லாளேயெந்தன் பிதாவிங்கேயிருந்தாராஞற்..... *
புண்ணியகதைகள்கேட்டுப் போதுபோமவரில்லாதால்..... .......*
எண்ணியபெண்களாட விசையவேயாடுவோமா... .... .... ...*
நண்ணிநாமென்னசெய்வோ நங்கையேயுரைசெய்வாயே..... .....*

வசனம்

அடிசௌந்தரவல்லி(ஏனம்மா)எனதுபிதாவாகிய கண்ணுவமகாரிஷியிருந்தால் - நல்லபுண்ணியகதைகளைச் சொல்லிக்கொண்டேயிருப்பார்-நாமதைக்கேட்டுப் பொழுதுபோக்கலாம் - அவர்சதாணந்தரிஷி-ஆசிர்மத்துக்குப்போயிருக்கிறபடியால் அவர்வர- நாலுநாழிகைசெல்லுமே-அதுவரையில் - நமக்குப்பொழுதுபோகவேண்டுமாதலால்-பந்தடிப்போமா- அம்மானுராடுவோமா- பம்பைசுற்றுவோமா-அல்லதுகொண்டானடிப்போமா- என்னசெய்யலாஞ்சொல்லடிபெண்ணே. .... ..... ..... ... ..... ..... ..... .....*

தோழி-சொல்-வசனம்

அம்மம்மாஅதுவெல்லாம்-வேண்டாம்-நம்முடையசிங்காரவனத்திற்குப்போய்-நல்ல-மல்லிகை-முல்லை- இருவாட்சி- சண்பகம்மற்றுமுள்ளபுஷ்பங்களைப்பறித்துக்கொண்டு பந்துவிளையாடி வரலாம்வாருமம்மா(சகுவச)ஆனால்அப்படியேசெய்யலாம்பெண்ணே*

பந்தாடுகிற-தரு

இம்-தோடி-தாளம்-ரூபகம்

பூப்பறிப்போம் அம்மாநாம் பூப்பறிப்போம் ... .... ..... ... *
ஆய்ப்பெருஞ்செழு நந்தவனத்தினில் .... ... .... .. ... .... *
வாய்ப்பதங்கேதிருந்துமனத்தொடு ..... ...... (பூப்பறிப்போம்)

ஆடுவோம்வாராய் பந்துவிளை யாடுவோம்வாராய் ... ... ... .. *
நாடுமிந்தநற்சாலையிலேமணனீடுசந்தனச்சோலையிலேவிளை ....*
ஆடுவோம்வாராய் பந்துவிளை யாடுவோம்வாராய்... ...... ... .... *
பொன்னேநாங்கைதட்டி யோடுவோ-மந்தப் ....... ... ..... *
புஷ்பம்பறித்துநாஞ்சூடுவோம் .... ... ... .... ..... .... .. *
முன்னேபோய்த்தொட்டுப் பறித்தவர்பாணியால் .... ... .... ...*
மூன்றேபடிப்பட்டுக் கொள்வதுவேணியால்... .... (ஆடுவோம்)
நன்றொருநாழிகைக் குறிப்போ-மந்த... ... .. ... ... ...*
நூறுக்கிலாயிரம் புஷ்பம்பறிப்போம்... ... .... .... .. ... *
இன்றதைமுன்னே பறித்தவர்கைத்தொட்டு .. .... .... ...........*
எண்ணிப்போடுவ தினியிருபத்தெட்டுசொட்டு..... ...(ஆடுவோம்)
ஒருமையாய் நாமோடத்தொடுப்போ-மந்த... .. ..... ......*
உதிர்ந்தமாங்கனியைப் போயெடுப்போம்.. .. ... .... .....*
கருவாகமுன்போ யெடுத்தவர்கைக்கொண்டு .... ... .... .. *
கைமேற்குட்டுவதுகணக்காய்ப்பனிரெண்டு ... (ஆடுவோம்வாராய்)

பொது-விருத்தம்

இம்-தோடி

தவமுனிபோனபின்பு தனித்தவாசிரமந்தன்னிற் .. ..... ... .. *
பவளவச்சகுந்தலைப்பெண் பரிவுடனிருக்கும்போதில்.........*
அவனிமன்வந்தவாறு மருமணம்புரிந்தவாறுந்..... ..... ..... ... *
தவறதுநடந்தவாறுந் தழைத்திடுவாறுஞ்சொல்வாம்... .. ......*

பொது-வசனம்

அகோதெப்படியென்றால்-சகுந்தலையம்மனை -ஆசிரமத்திலிருக்கச்சொல்லி - கண்ணுவமகாரிஷியானவர் - சதானந்தரிஷிபிறகே போனபின்பு இவ்வுலகையெல்லாமொருகுடையிலாளப்பட்ட-ஏகசக்கிரேஸ்பரனாகிய துஷ்யந்தமகாராஜன்-கொலுவிருந்துவேட்டைக்குவந்தவாறும் வந்த-இடத்திற்சகுந்தலையைக்கண்டு மோகித்துக் காந்தருவவிவாகஞ்செய்துகொண்டவாறும்-தவறுதல்செய்த பின்பு பரதமகாராஜனுக்கு-அரசாட்சிகொடுத்தவாறுஞ் - சொல்லத்துடங்குவாம்... ... ... ... ... ..... ..... ..... .. *

## பொது-விருத்தம்

இ:ம்-சங்கராபரணம்

ஒட்டியவுலகத்திமை யோட்டிபொன்னலனைபெல்லாம் ..... ..... *
வெட்டியம்புவியையாளும் விக்கிரமஜயவுத்தண்ட .... .... ... ... *
துட்டியந்தராஜனென்னுந் துரந்தரனிலங்கும்வாசற் ................*
கட்டியக்காரன்வந்து களறியிற்றோன்றினனே..... ..... ..........*

## கட்டியக்காரன்-வருகிற-தரு

இ:ம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி

கட்டியக்காரன்வந்தானே விதரணக் கட்டியக்காரன்வந்தானே...*
அற்புதவிதரணகுணசாலிசுமுகஜயசர்வியுசிதசெட்டி .. (கட்டியக்)
துஷ்டியந்தமகாராஜேஸ்பர ... ... ... .... ..... ..... ... *
சூரதீரவிரமாரனிசைதிகழ் .... ... ... ... ... ... ..... ..... *
சுற்றியசமுகனித்தியசுமுகன்வாசலிற் ... ... .... .... .... *
துலங்குமணியிலெங்குமலங்கிருதஞ்செயுங்கெட்டி .... (கட்டியக்)
தலையிற்பொன்னுருமாலைபுனைந்த துதளதமென்றுமின்ன - விறு
தடந்தோளிலணிவாகுவலயமதுதான்பளபளென்ன......... ..*
மலையைப்பொருமணிமார்பினின்முந்நூல் ..... .... .... .... *
வானிலங்குமினல்போல்விளங்கவுயர் .... .... ..... .... ..... *
மத்தகஜத்தை நிகர்த்தெழிலுற்ற..... .... .... ... ... ..... *
வலக்கையினிற்சுரிகைத்திகழப்பொரு ... ... ..... .... ..... *
வெற்பையெடுத்தெறியுக்கிரமமிகுநெடு ........ .... .... ..... *
வலியசிங்கமெனமீசைமுறுக்கிக்..... ..... ... .... ..... .... ....*
கிடுகிடென்னுமிடிபோலுமுறுக்கி .... ..... .... .... .... *
வெகுபராக்கொடெச்சரிக்கைமகிபதி .... ..... ... .... .... .....*
வருகும்வேளையெச்சரிக்கையிடையிடை .... ..... ..... .... ....*
மருவுமரசர்முதலெவருமறிகவென ..... .... .... .... *
இனிதுணைசெய்தருமை யுடனேசபையதனில்... ..........(கட்டியக்)

## கட்டியக்காரன்-சொல்-சட்டியம்

மன்னர்கள்வந்து வணங்கியிறைஞ்சிட மணிமுடிபார்வேந்தன் ..*
வருகிறவேளையி லவரவர்மனதினிற் பயமுடனெச்சரிக்கை .... .....*
கன்னல்வில்மாரன் றனைநிகரொன்று கருத்தினிற்கொண்டாடும் ....*
களிப்புறுமரசன் வருகிறவேளையி லவரவரெச்சரிக்கை .... ..... ....*

துன்னலர்தங்கள் சிரங்கடுணித்திடு சுடர்மின்னெளிவேலன் ..... ❋
துணாமகியாலன் வருகிறவேளையி லவரவரொச்சரிக்கை .... .. ❋
தன்னிகர்துஷ்டி யந்தனெனும்பேர் சந்திரகுலதீரன் .... ..... ❋
சதுருடன்வருகிற வேளையிலவரவர் மனதினிலெச்சரிக்கை .... ...❋

பொது-விருத்தம்

இம்-மத்தியமாவதி

சங்கரனருள்பெற்றோங்குந் தார்வேய்ந்ததுஷ்டியந்தன் ..... ... ❋
பொங்குளசுமுகர்மந்திரிப் புகழ்பெறுபிரதானிமாரோ ..... ...❋
டெங்கணுங்கீர்த்திபெற்ற இயன்மிகுகொலுவினுக்குச் .... ...... ❋
சங்கையில்லாமற்செங்கோல் தனைச்செலுத்திடவந்தானே .... ....❋

வசனம்

அகோரதெப்படியென்றால்-இராஜாதிராஜராஜமார்த்தாண்டராஜ கெம்பீர- சந்திரவமிசோத்தாரனகசக்ரேஸ்பரனாகிய துஷ்டியந்தமகாராஜன் கொலுவுக்குவருகிறவிதங்காண்க ..... .... ..... ..... ❋

இராஜன்-வருகிற-தரு

இம்-மத்தியமாவதி-தாளம்-திரிபுடை

இராஜராஜர் பரவிய அழகிய துஷ்டியந்தமகாராஜன்வந்தானே ..❋
தேசதேசாதிப ரெவர்களு மிருபுறமும்வர ..... .... .... ... ❋
தியாகபோக விந்திரனென்னசன ... ..... .... ... .. ❋
யோகவாசசந்திரகுலமக ... .... .... ... (இராஜராஜர்)
சோதிதருநவரத்னமணிமுடி-துலங்கியபிரகாச-மது .... ... ❋
சோடிசூரியர்கடமைப்போனிறைந்தொளி சூழ்ந்தினிதுவீச ....❋
காதலுடனணிபுஜகிரிதியினுடன் சலந்தசையும்வாச..... ...... ❋
மாலை கமகமெனமணிமார்பிலணிகவன் மருவியவிலாச .... ........❋
சீதநிறைமதிபோற்குடைபிடிக்க ........................ .........❋
ஜெபவிருதுகவிகடிகையர்படிக்க .... .... ..... ..... ..... ..... .....❋
நீதிமந்திரிகளிருபுறமுஞ்சூழ .... .... ..... ..... ..... .....❋
நெடுமுடியரசரடியின்மிசைவீழ .... ..... .... ..... .......❋
மாதர்சாமரைபோட-நவமன்மதனெனக்கொண்டாட ..... ❋
வச்சிரசிங்காதனமிருந்து..... ..... ..... ..... ..... ... ❋
மெச்சியசெங்கோன்முறைதெரிந்து..... ..... ..... ..... ..... .❋
மனுநெறிவழியேயுலகத்தில் .... ..... .... ...... ..... ...❋
அரசில்வழுவாமல்செலுத்த......... ....... (இராஜராஜர்பரவியஅழகிய)

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

சதிர்பெறுமறைவிளங்கத் தர்ம்மமென்மேலுமோங்க ..... ..... *
மதிமனுநீதிசெல்ல மாதமும்மாரிபெய்ய .... ..... ... ... *
வதிதருமுலகம்வாழ்க மன்னர்செங்கோற்றழைக்க..... .... ... *
துதிதருமாதிமூலந் துணைப்பதம்போற்றிபோற்றி .... ..... *

சட்டியக்காரன் - சொல் - எச்சரிக்கை

மகுடமுடிமண்டலிகர் வந்துவந்தெதிரே..... ..... ... ..... *
வணங்கிப்பராக்கென்னவே .... ... ..... ..... .... .... *
மாற்றலர்களெல்லோரு நடுநடுங்கிக்கொண்டு... ..... ..... .. *
மன்னவசவாமென்னவே .. ... ..... .... .... .... .... *
இகலுமுகாரணவீரர் பரராஜர்மேற்சண்டை .... ..... .... ... *
எங்கையெங்கேயென்னவே ... .. ... ..... ... .... .. *
இருபுறமுமந்திரிக டந்திரிபிரதானிகள் .... .... ..... ..... .. *
என்னவிவையென்னவெனவே... .... .... .... ..... ..... *
தகைமைபெறுமிரதகஜதுரகமொடுதளகர்த்தர் .... .... ..... *
தாவுபுலிபோற்றுள்ளவே ..... .... ..... ..... ..... ..... *
சங்கையிற்போர்வீரரெல்லோருமொல்லென்று .... ... ..... *
தாங்கொக்கரித்துவரவே ..... .... .... ..... .. .. *
சுகமானசக்கிரபதிராஜரர்ஜாதிபதி .... ... ..... ..... ... *
துஷ்டியந்தனெனுமகிபதி ..... ..... ..... ... ... *
சுடர்பெற்றநவரத்தினகொலுவுக்குவந்தனர் ..... .... ... ..... *
துமாமக்களெச்சரிக்கை .... ... ..... ..... ..... ..... *

மந்திரிசொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மனுநெறிமன்னுபோற்றி மாற்றலர்க்கூற்றேபோற்றி... .. .... *
தனை நிகரில்லாய்போற்றி ஜயசக்கிரவர்த்திபோற்றி ... ... ... *
புனிதசற்குணனேபோற்றி புகழ்மகிகுலத்தாய்போற்றி ... .... *
இனிதுதிதுஷ்டியந்த இறைவனேபோற்றிபோற்றி.......... ... *

மந்திரிசொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

ஜயவிஜயமேவுமாத்தாண்டகுல சேகராஜகம்புகழாதிதீரா ... ..... *
பயமுடனேயதிவீரர் சூரர்கள்பணிந்திடப் பலமாதர்கவரிவீச ..... *

வியன்மணிச்சிங்காதனம்வீற்றிருந்துமிகுமேன்மைசெங்கோல்செலுத்தி-நயமுடன்வாழ்கின்றதுஷ்டியந்தமகாராஜ ராஜனேபோற்றி போற்றி... ... ... ... ... ... ... ... .. ... *

கட்டியக்காரன் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

வீரர்கண்மெச்சும்வீராபோற்றி .... ... ..... ..... *
மாரனையொக்கும்வடிவாபோற்றி. ..... ........ .... *
தாரணிமெச்சுஞ்சதுராபோற்றி .... .. ... .. *
ஆரியமுணர்ந்தஆண்டகைபோற்றி ..... ..... .... *

இ து வு ம து

படையிற்பெரியபார்த்திபாபோற்றி ..... ... .. *
கொடையிற்பெரியகொற்றவாபோற்றி......... *
நடையிற்பெரியநராதிபாபோற்றி ..... ..... .... *
அடையிற்காக்குமாண்டகைபோற்றி ........ ..... *

பொது - விருத்தம்

இம் - புன்னுகவராளி

என்னென்னபாடுபட்டே யிட்டதோர்பயிரையெல்லாம் ........ *
வன்னவன்னங்களான வகைக்கொருமிருகம்வந்து ... .. ... *
சின்னபின்னங்கள்செய்து தினமானமழிக்குதென்று ..... ..... .... *
மன்னனோடுரைப்பதற்கு வருகின்றார்குடிகடானே .... ..... ..... *

குடிகள் - வருகிற - தரு

இம் - புன்னுகவராளி - தாளம் - ஆதி

குடிகள்வந்தாரே பயிரிடுங் குடிகள்வந்தாரே ..... ... ..... ..... *
நெடுமுடிதுஷ்டியந்தமகிபன்முன் .... ..... ..... ..... .... *
நிறைமனதுள்ள குறைசொல்லிக்கொள்ள .... ..... .....(குடிகள்)
காட்டின்மிருகங்கண்மிகுந்து-செழுங் ... ..... ..... ..... .. ..... *
கதிர்ப்புலந்தனிற்புகுந்து.. .. ... ..... ..... ... ... ... ..... *
வாட்டமாய்ப்பலசேதஞ்செய்ய..... ... ..... ... ... ........ *
மன்னவனுடன்சொல்லிக்கொண்டுய்ய ... .. (குடிகள்வந்தாரே)

பறவைகண்மிகச்செழித்தே - இட்டப் ..... ..... ..... ..... *
பயிர்களையெல்லாமழித்தே .. ... ... ..... ... ..... *

குறைசெயுமிந்தச்செய்தியைமெல்லக் ..... ..... ..... ..... ..... *
கொற்றவன்றிருக்காதில்விழச்சொல்ல .. ........(குடிகள்வந்தாரே)
மன்னவர்ச்செல்லாமன்ன - னல்ல - வளமைபெறுவிற்பன்னன் .... *
இந்நிலவேந்த னென்று சொல்லப் பட்ட ..... ..... ....... ..... *
இறைவன்துஷ்டியந்தராஜராஜன்கிட்ட ..... .. (குடிகள்வந்தாரே)

இராஜன்சொல் - தேச - விசாரணை

பாரிலைம்பத்தாறு தேசத்திராஜாக்கள்பகுதிப்பணம்வந்ததா .... *
பாக்கியில்லாமலேதேசத்திலுண்டான்பணமுழுதும்வந்துதையா *
பகருமுப்பத்திரண் டறமும்வழுவாமலே பழுதிலாமன் டக்குதா *
பார்த்திபாமுப்பத்திரண்டறத்துக்குமொருப்பழுதிலாநடக்குதையா
சீரிலுயர்தேவாலயங்களாராதனைச்செப்பமாகநடக்குதா ..... [யா
திறல்வேந்தனேயுனது பத்தியின்படிநிதஞ் செப்பமா நடக்குதை
தேவப்பிராமணர்க ளாசாரகிர்த்தியங்கள் செவ்வையாகநடக்குதா *
திரிகாலங்களும் ஸ்நானபானஜெபநிஷ்டைகள் செவ்வையாநடக்கு
தையா - தாரணியிலெங்கணுமாதமுமும்மாரிதாழ் வில்லாமற்பெய்
யுதா - சதாகாலமுந்திங்கள்மும்மாரி பொழிகுதொரு தன்மைகு
றையில்லையையா - தாவியெழுகின்றபுலி யும்பசுவுமோர்துறையிற்
றண்ணீர் குடித்துவருதா - சக்ரேஸ்பராவுனது சக்கரநெறிப் படித்
தண்ணீர்குடித்துவருது - ஏரிலுயர்விளைவுவேளாண்மையாண்மைமிக
எழிலாகவேவிளையுதா - இறைவனேவிளைவுவேளாண்மையாண்மை
மிகஎழிலாகவிளையுதையா - எப்போது மாறிலொரு கடமையீய்ந்
தேகுடிக ளெல்லோர்களும்க்ஷேமமா - எல்லோர்களும்க்ஷேமமிப்
போதுவந்துணையிறைஞ்சிநின்றாரரசனே ... ..... ..... .... *

குடிகள் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

வேந்தர்கள்வேந்தேபோற்றி விரவிக்கிரமனேபோற்றி..... ..... *
சாந்தமாயுலகையாளுந் தயாளரட்சகனேபோற்றி .... ..... .... *
ஏந்தெழின்மிகுந்திருக்கு மெங்களாண்டவனேபோற்றி .... .... *
வாய்ந்தசீர்பெறுதுஷ்டியந்த மகிபதிபோற்றிபோற்றி..... ..... *

இராஜன்சொல் - வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - நம்முடையஅஸ்தினபுரத்தில் வாழாநின்ற

குடித்தனக்காரரெல்லாம் - ஒன்ருய்க்கூடி வந்ததென்ன காரியம் - நன்ருய்விசாரணைசெய்யுமந்திரிகளே .... .... .. ..... .... *

மந்திரி - சொல் - விருத்தம்

இம் - பந்துவராளி

போற்றிநின்றிருகைகூப்பிப் புகழ்ந்திடுங்குடிகாள்கேளீர்...... *
ஏற்றமாங்கொலுவிற்கிப்போ தென்னகாரியமாய்வந்தீர் .... ..... *
மாற்றலர்பயமுமில்லை மன்னனுமொருதீங்கில்லை ... .... ..... *
வேற்ருருகுறையுண்டானல் வேந்தன்முன்னுரைசெய்வீரோ. *

வசனம்

கேளுங்குடிகளே - உங்களுக்குச்சத்துருக்களாலே - ஒருபயமுமில்லைஇதோ - நமது - ஆண்டவனுமாய் - இராஜகண்டீரவனுமாய் - விளங்கி யிராநின்ற - துஷ்டியந்தமகாராஜாவினலே - ஒருபொல்லாப்புமில்லையே - என்னகாரியமாய்க் கொலுவிற்குவந்தீர்கள் - தெரியச்சொல்லுங்குடிகளே ..... .... ... ..... ..... ..... ..... *

குடிகள் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

இறைவனேபோற்றிபோற்றி யெமக்கொருதாழ்வுமில்லை..... .... *
அறைதருபுவியினுங்க ளாவிலாப்பயிரிட்டாலுஞ் .... ..... ... *
செறிபலமிருகத்தாலே சேதமாய்ப்போகுகிந்தக் ... ... . .... *
குறைவலாலெமக்குவேருேர் குறைவில்லையெங்கள்கோவே..... *

வசனம்

சரணஞ்சரணம் - இராஜபரமேஸ்பரா - ராஜவுத்தண்ட ராஜமார்த்தாண்ட ராஜகெம்பீர - உங்கள்கிருபாகடாட்சத்தினலே - ஒருகுறைவுமில்லாதிருந்தாலும் - பலவிதமிருகங்களால் - நாங்களிடப்பட்ட பயிர்களெல்லாம் - பலசேதமாய்ப் போகின்றது - ஆறிலொரு கடமைகொடுக்கிறது - அடங்கலுங்கொடுத்துவிடுகிறதாய்த்தோற்றி வருத்தப்படுகிருேம் - அதனல் - விண்ணப்பம் பண்ணிக்கொள்ள வந்தோம் - மகாராஜனே . .... ... ... ..... ... ... *

இராஜன் - சொல் - வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - நமதுகொலுவிற்கு - வந்தகுடிகளுக்குசெய்யத்தகும் - வெகுமதிகள்செய்தனுப்புமந்திரிகளே..... .. .... .. *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

இடுபலபயிர்களெல்லா மியம்பியமிருகத்தாலே ..... ... .. .....*
கெடுபலபோகுதென்று கிளத்தியவதனுனும் ..... ... ..... *
விடுபலகருவிகொண்டு வேட்டைக்குப்போகவேண்டும் .... .....*
அடுபலசேனைதன்னை யமைச்சரேவரச்செய்வீரே. ... .. ... ..... *

வசனம்

சேரும்மந்திரிகளே - பலவித்மிருகங் களினுலே - இடப்பட்ட பயிர்களெல்லாஞ் - சேதமாய்ப்போகுதென்று - நமதுதேசத்துக் குடிகள்வந்து - சொல்லிக்கொண்டபடியால் - நாம் - வேட்டைக்குப் போகவேண்டும் - வேட்டைக்கிசைந்த - அதிவீரபராக்கிரம சேனைகளையெல்லாம் - அழைப்பித்துபிரயாண - சன்னுகஞ்செய்விப்பீர் மந்திரிகளே (அப்படியேசெய்கிறேஞ்சுவாமி)... ... ... ... ...*

மந்திரி - சொல் - விருத்தம்

இம் - பந்துவராளி

மூட்டியபதணலுக்கொப்பாமுனைந்திடுஞ்சேர்வைக்காரா ... .......*
காட்டகவேட்டையாடக்காவலனினைந்தத்தாலே .... ... ..... *
பூட்டியவலைகண்மற்றைப்பொருபடைகளைக்கொண்டு ...... ..*
நீட்டியசேனைதன்னை நிமிஷித்திலழைத்துவாராய் ... .... ... *

வசனம்

ஆரடாஅடா - சேர்வைக்காரா - நம்முடையமகாராஜா வேட்டைக் குப்போகச்சித்தமாயிருக்கிறபடியால் - வேட்டைக்கிசைந்த சேனைகளையெல்லாம் - அதிசீக்கிரத்துக்கு - அழைத்துவாரும்பிள்ளாய் (அப்படியேஅழைத்துவருகிறேன்சுவாமி) .... ... ... ..... *

கட்டியக்காரன் - சொல் - கவி

வில்லியர் தலைவா - புல்லிய வேட்டைக்.... *
செல்லையி லரசன் - ஒல்லையி லழைத்தான் .. *

வசனம்

ஆரடாஅடாகானக தலைவேடாநம்முடைய மகாராஜா வேட்டைக்குப்போகசித்தமாயிருக்கிருர் - வேடர் - வில்லியர் - வேட்டைநாய் செந்நாய் - முதலானவைகளை - அதிசீக்கிரத்துக்கு அழைத்துவாரும்

ஸ்ரீளாய் (அப்படியேஅழைத்துக்கொண்டுவருகிறேன்சுவாமி .. ✻

தலைவேடன் - சொல் - வசனம்

அடேங் - அம்புகள் - தும்பைங் - அடேங் - ஆயுதக்குப்பைங் - அடேங் - வலையெறிபுலியன் - அடேங் - மார்பிலசைந்தான் - அடேங் குழியிற் - கிடப்பான் - அடேங் - குன்றேறிநின்றான் - அடேங் - காட்டையளந்தான் - அடேங் - நம்மிடஜயன் - வேட்டைக்குப் போகிறானும் - ஊடிவாங் - ஊடிவாங் ... ... ... ..... ... ✻

வேடர் - வருகிற - தரு

இம் - கலியாணி - தாளம் - ஆதி

வேடர்நாங்களே ஐயே மலை வில்லியர்நாங்களே ... ..... ... ✻
காடுமலை கிடு கிடென அடர்ந்து ..... ... ... ..... ..... ✻
கட்டும்வலைக்கொண்டு பொட்டெனத் தொடர்ந்து ... .... ... ✻
ஓம்பெருமிருக நீழலின்மறைந்து .... .... ..... .... ... ✻
ஒட்டிக்காலைத்தட்டி சட்டிப்போர்செய்கெட்டி ..... (வேடர்நாங்)

ஓங்கியெழும்பெரும் வேங்கைப்புலிகளை ..... ..... .. .....✻
ஓடிப்போய்த்தடுத்து - ஐயே .... ... .... ... ... ... ✻
ஒவ்வப்பெருந்தொடைக் கௌவுஞ்செந்நாய்களை .... ..... ... ✻
உசிப்பி மேல் விடுத்து ... ... .... ... ... .. ... ✻
ஆங்சதன்விரிபமடங்கிச்சுழிக்க ..... ..... ..... ... ... .... ✻
அசந்துப்போய்ப்பசபசென்றுவிழிக்க ... ... ... .. ✻
ஏங்கித்தியங்சஎன்வாங்குவல்லயத்தால் .... ... ... .. ... ...✻
ஈரல்பற்றிக்கொள்ள மார்பில்குத்தித்தள்ளும்.... (வேடர்நாங்களே)

பொக்கென்றுப்பாய்ந்துப்புறப்பிடும்பன்றிப் ... ..... ... .. ✻
புறங்காற்பிடித்தடிப்போம் - ஐயே ... .. ... ..... .. .. ✻
போந்தக்கரடியைப்பாய்ந்ததைக்குத்திப் ... .... .... ..... ✻
புகழ்ந்திரத்தங்குடிப்போம் .. ... ... ... ... ... ✻
எந்துமருப்புள்ள யானையைத்தாக்குவோம் ... .. ... ... ...✻
ஆளிசிங்கத்தையிரண்டுதுண்டாக்குவோம் ... ..... ..... ..... ✻
காய்ந்தமிருகங்களெல்லாம்படவலைக் ... ... ..... ... ..... ✻
கட்டிப்பிணித்ததைவெட்டித்துணிக்கின்ற ..... (வேடர்நாங்களே)

கன்னியர்க்கென்றுவிருப்புங்கொடுத்துக் ... ... ... ... ... ✻
கடன்வாங்கியுங்கொடுத்து - ஐயே ... ..... ... ... ...✻
கவிவாணரைக்கண்டானடுக்கமெடுத்துக் ... ..... ..... ... ..... ✻
கவிழ்ந்துமிகப்படுத்து ...., ..... ..... ... ..... .. ✻
பின்னுமுன்னென்னுமல் வாணராத்தூஷிக்கும் ... ... .. ✻
பேய்களுக்கொப்பான நாய்கடம்வாயிலே ... ..... ... .... ✻
அந்நிலையேகவிராமசந்திரன்கவி ... .. ... .. ... ✻
ஆப்பையடித்துப்பின்வாய்ப்பைப்பிடுங்கின்ற (வேடர்நாங்களே)
இன்பமாய்த்தேடியசெம்பொனதனிலே ..... ..... ... .... ...✻
இச்சையதுமிகுத்து - ஐயே ... ... ... ... ... .... ✻
இல்லறந்தன்னிலே நல்லறஞ்செய்யாமல் .... .... ..... ... ✻
எல்லாம் புதைத்து வைத்து ... ..... .... ..... ...... ....✻
மன்புவிதன்னிலே யெத்தேசகாலமும் ... ..... ..... ... ✻
வாழ்ந்திடுகின்றநற்கீர்த்தியைநாட்டாமற் ... ... ..... ... ....✻
அன்புறுகின்ற இடும்பைக்கடம் பைகள் .... .... ..... .... ✻
தொக்கப்பிடித்திந்தச் சிக்கத்தடைக்கின்ற .... (வேடர்நாங்களே)
பாடும்புலவர்கடம்மைக்கண்டொதுங்கிப் ... .... .... .. .....✻
பயந்துபோய்ப்பழைங்கலத்துட்பதுங்கி ..... .... .... .... ✻
வாடுந்திருட்டுக்குலாமனொனுமட்டி ..... ..... .... ... .... ✻
மாட்டைப்பிடித்திந்தக்கூட்டிலடைக்கின்ற ....(வேடர்நாங்களே)

வேடர் - சொல் - வசனம்

சரணஞ்சரணம் - இராஜமார்த்தாண்ட - ராஜகெம்பீர - ராஜவுத்தண்ட - சுவாமி - தேவரீர் - உத்தாரப்படியே - எங்கள் வேடுவச்சேனைகளும் - வேட்டைநாய்களை யழைத்துக்கொண்டு - ஆயுதமுஸ்தீப்புடனேவந்தோமையா .... .... ..... ..... ..... ... ✻

மந்திரி - சொல் - வசனம்

சேனும் - இராஜபரமேஸ்பரா - தேவரீருத்தாரப்படியே - வேட்டைக்குப்போக - சுத்தவீரர் - இருப்புவலைக்காரர் - ஒடுகண்ணிக்காரர் குத்துகண்ணிக்காரர் - எறிவலைக்காரர் - சிறுவலைக்காரர் - சிவங்கி - செந்நாய் - வேட்டைநாய் - வல்லூறு - டேகைக்காரர் - இவைமுதலாகிய - அதிபலபராக்கிரம சேனைகளெல்லாம் வந்திருக்கிறார்கள் - சுவாமி

அனல்வேட்டைக்குப் போவோம்வாரு மந்திரிகளே (அப்படியே போவோம்வாருஞ்சுவாமி) ..... .. ... .... ... ..... ❊

இராஜன்-வேட்டையாடுகிற-தரு

இ-ம்-அடாணா-தாளம்-திரிபுடை

வேட்டையாடுவோம்வாரீர் ஜயவீரர்களே சூரர்களே வன ..... ❊
வேட்டை யாடுவோம் வாரீர் .... ..... ..... ..... ... .... ❊
விளைநெற்பயிரிற்பொழிந்மேதகு ..... .... .... ... ... ❊
பலனைச்சிதையச்செயுமாமிருக..... ... ..... (வேட்டையாடுவோம்)

நாட்டையதஞ்செய்யுங்கூட்டமிருகங்களால் ..... ..... .... ..... ❊
நாட்டுக்கொரு சேதமிலாமலே ... ..... ..... .. ..... .. ... ❊
காட்டுக்கொருபூதமிலாமலே .... .... ..... ...(வேட்டையாடுவோம்)

பிரசண்டதனுவையெடுப்போம் - நாரியைப்பூட்டிப்..... ... ❊
பிறைமுகவாளி தொடுப்போம் ... ..... ... .... .. ... ❊
இசைந்தபிறைமருப் புயர்ந்தபன்றிகள் ... ... ... ... ..... ❊
இற்றுச்செண் டாய்த்தலைமே லெழ ... ..... ... ... ..... ... ❊
கற்றித்துண் டாய்ப்புவி மேல்விழ ..... ... (வேட்டையாடுவோம்)

சினத்தநாய்களைவிடுப்போம் -ஓடவொட்டாமல் .... ... ..... ...❊
துறத்திப்போயதையடுப்போம்........ ..... .... ..... ... ...❊
வனத்திலோங்கிய கனத்தவேங்கைகள் .... .. ..... ..... ... ❊
வாய்விட்டலறித் துள்ளிப்படி... .. ... ... ... .... .. ❊
மேலூற்றுதறிக் கொள்ளத்துடி... ... ... (வேட்டையாடுவோம்)

வனமுழுதும்போயெட்டுவோம்-விட்டுவிடாமல் ..... .. ..... ❊
வலியவில்வலைக்கட்டுவோம்... .... .. ..... .. ..... ❊
அனந்தமிருகங்களிரிந்துதிகைத்திட..... ... ..... ..... ..... ....❊
அடவித்திரண்மேலேபற்றும் .... ..... ... ... ..... ..... ...❊
வடவைக்கனல்போலேமுற்றும் ..... ... (வேட்டையாடுவோம்)

இராஜன்-சொல்-வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - வீரர்களே - சூரர்களே - இந்தவனத்தில் நெருங்கி - யிருக்கப்பட்ட - மிருகங்களினுடைய - அதிசயத்தைப் பாருங்கள் - மந்திரிகளே ... ... ..... ... ... ..... ❊

## இராஜன் - சொல் - தரு

### இம் - பந்துவராளி - தாளம் - ஆதி.

வாரும் வாரும் வீரரே விந்தைமிகுத்திடு மிந்தவனத்தினி ... ....*
னெருங்கியிருக்குமிருகங்களனைத்தையும் பாரும்பாருஞ் சூரரே *
ஆனையுடனேமத யானைப்போர் செய்யுதடேதா ... .. .... ... *
அதனைக்கண்டொருசிங்க மடுத்துவருகுதடேதா ..... ..... .... *
ஆனைத்தலையுட ஞளித்தலை யொரு ..... .... ..... ... ... *
அம்பால்விழவெறுந்தேம்பாகவுமே ... ........... ... (வாரும்வாரும்)

வேங்கையுடனேயுக்ர வேங்கைப்போர் செய்யுதிதேதா ... .... *
வெகுண்டுசெந்நாயதனை வெல்லவருகுதிதேதா .... ..... .... ....*
வேங்கையுடனேசெந் நாய்குடல்சரியவே ... ..... ..... ... *
வேல்விடுவீர்புலி மேல்விழவேநீர் .... ........ (வாரும்வாரும்வீரரே)

பன்றியுடனேபன்றி பதைத்துப்போர் செய்யுதடேதா .... .... ..... *
பாய்ந்துக் கொல்லவேவார்புலி பதுங்கிவருகுதடேதா ... .... ..... *
பன்றியுடனே யெதிர் பாயும்புலிவிழ ... ... ..... ... *
பரிசையையெறிவீர் வரிசையதாகவே................ (வாரும்வாரும்)

எல்லாமொன்றுடனேயொன் றெதிர்த்துப்போர் செய்யுதிதேதா *
எதெதுபகையுள்ளதேதா எதுத்துவருகுதிதேதா ..... ..... ..... *
எல்லாமுங்கள்கைவில்வாளுயர்களை .... ..... .. .... ... *
எய்திடுவீர்வதை செய்திடுவீரே ..... ..... (வாரும்வாரும்வீரரே)

## இராஜன் - சொல் - வசனம்

அகோவாரும் - வீரர்களே - சூரர்களே - இந்தவனத்தில் - இப்படிப்பட்ட பொல்லாத மிருகங்களிருக்கிற படியால் - நாமிவைகளை - உபாயமாய்ச்சங்கரிக்கவேண்டுமாகையால்நீங்கள் - நாலுதிக்கிலும்வலையைக்கட்டிப் பதலமாய்வாருங்கள் - வேடர்வில்லியர்களே.....*

## வேடர்த்தலைவன் - சொல் - விருத்தம்

வனத்தினினெருங்குமிந்த வளமிருகத்தையெல்லாந் ... .... .....*
தனித்தனிதுரத்தியெய்திச் சங்கரித்திடற்கூடாது .... ........ ....*
புனித்திடுவலையைக்கட்டிப் போகவொட்டாமற்கூட்டிக் ... .....*
கனத்ததோர்துஷ்டியந்தக் கர்த்தற்குக்காண்பிப்போமே ..... ...*

வசனம்

கேளும் - வேடர்வில்லியர்களே - இந்தவனத்தி லிருக்கப்பட்ட மி
ருகங்களையெல்லாந் தனித்தனிச் சங்கரித்தற்குக்கூடாது ஆதலால்
வலைகளைக்கட்டி ஒன்றையும்போகவொட்டாமற்கூட்டி நம்முடை
யஆண்டவனுக்குக் சாண்பிப்போம் வாங்கடங் ..... ... .... ...*

வேடர் - சொல் - தரு

இம் - பந்துவராளி - தாளம் - ரூபகம்

வலையைச்சட்டடா ஐயையே இருப்பு ... ... ... ... .... ...*
வலையைக்கட்டடா ஐயையே .. ... ... ... ... ......*
நிலத்தொட்டும் அந்தமலைமட்டும் .... ..... ... .... ..... *
நெரியுறுவிரியுது திரியுதுபோபோ .... ... (வலையைக்கட்டடா)
தனியப்பன்றிமுன்னே போகுது - அதைத்..... ..... ..... ..... *
தழுவிப்பன்றிகளெல்லாமேவுது... ..... ... ..... ... .... *
கலவாயொருபன்றியை யொருபன்றியததோபார் ... ... ..... *
சடிக்குது இடிக்குது துடிக்குது போபோ... (வலையைக்கட்டடா)
புள்ளிமானதோவொன்றுமேயுது - அதைப் .... ... ..... .... *
புல்கியொருகலைமான்பாயுது ... ..... ..... ..... ..... .... *
மெல்லவேசிலமான்கள் வெருண்டுவெருண்டுமிக .... ..... ... *
மிதிக்குது குதிக்குது சதிக்குது போபோ.....(வலையைக்கட்டடா)
கடம்பையதோவொன்றோடுது - அதைக்.. ... ..... ... ....*
காணுமற்பெண்கடம்பைதேடுது... ..... ... ..... ..... ...*
அடருங்கடம்பையதோ இரண்டையுங்காணுமல் ... ... ..... ...*
அலையுது மலையுது கலையுது போபோ..... .... (வலையைக்கட்டடா)

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

மந்திரிபாராயிந்தமான்போகும்வேகந்தன்னை ..... .... .... *
வந்திடும்வாயுவேகமனோவேகமிதற்கொவ்வாது .... ..... ... *
விந்தையாமிந்தமானைவிடாமலேபின்றொடர்ந்தே ... ..... .... *
எந்தன்கையம்பினாலேயெய்துநான்வருகுவேனே ..... ..... ..... *

வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - வீரர்களே - சூரர்களே - அதோபோ

இன்ற மானினுடைய வேகத்திற்கு - வாயுவேகமும் - மனோவேகமும் - அதற்கொவ்வாது - ஆதலால் - என்கையம்பினாலே - அதை நிமைப்பொழுதில் - எய்துவருகிறேன் பாருங்கள் - மந்திரிகளே (ஆனல் - அப்படியே எய்துவாருஞ்சுவாமி) ..... ..... ..... ..... ※

இராஜன் - சொல் - தரு

இம் - பரிசு - தாளம் - ரூபகம்

போகுதுபாரொருமான்விடுவேனோ நான்விடுவேனோ ... ..... ※
போகுதுமா னதிவேகமதாகதினைப்..... ..... ..... ..... ..... ※
புனத்தைச்சஞ்சரித்துதிண் ..... ... .... .. ... ..... .... .... ※
செடிக்குட் சஞ்சரிக்க ... ... ... ... (போகுதுபாரொருமான்)
அன்றொருசீதை கண்டதுவாக ... ... .... ... ... ... ※
நின்றதுபோலச் சென்றதுதானோ - தலை ... ... ... ... ... ※
நெறித்துக் கந்தரத்திற்றன் ... ... ... .. ... ... ... ※
சினத்தைக்கொண் டிடிக்க ... ... .. (போகுதுபாரொருமான்)
மேய்வதுபோல பாய்வதுபோல ... ... ..... ... ... ※
சாய்வதுபோல வாய்வதுபோல - அது ... .... ... ..... .. ※
தனித்துச்சென் றினத்தைப்பின் ........ ... ..... .. ... ... ※
படுத்துக்கொண்டொளிக்கப் ..... ..... (போகுதுபாரொருமான்)
சினத்துவாடி வனத்திற்கூடி ... ..... ... .... ..... ... ※
இனத்தைத்தேடி கணத்திலோடி - கையில் .... ..... .. ..... ※
எடுத்தத்திண் சரத்தைக்கண் ..... ..... ..... .. ... ... ※
டொளித்துக்கொண் டிருக்க ..... ... (போகுதுபாரொருமான்)

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

எய்பநாந்தொடர்ந்துவந்த எழில்பெறுமானைக்காணோம் ... ... ※
வெய்யலில்இளைத்துத்தண்ணீர் விடாய்க்கொண்டுவியர்வுசிந்தி... . ※
ஐயுறுகளைவந்தெய்தி யயர்ந்துகாதடைக்குதிப்போ ... ... ... ※
துய்யவேநினைத்தாற்றண்ணீ ருறையிடந்தேடுவோ ..... .. ... ※

வசனம்

ஆ - ஆ - வாருமந்திரிகளே - நாம் - இந்தப்பெருங்காட்டிலே - ஒருமானை - எய்யுமபொருட்டாய்வெகுதூரம்வந்துவிட்டோம் - மானும்

அகப்படவில்லை - நமதுசரீரத்துக்கு - மிகவும்வருத்தம் - உண்டாச்சுது - வெய்யலில் - அடிப்பட்டபடியாலெனக்கு - தாகவிடாய்க்கொண்டிருக்கின்றது - இந்தவிடாய்த்தீரும்படி - சீக்கிரத்தில் - தடாகமிருக்கிற - இடம் - பார்க்கவேண்டுமந்திரிகளே... ... ..... .... ...✻

மந்திரி - சொல் - வசனம்

சேளும் - ராஜபரமேஸ்பரா - நாம் - சேனைகளையெல்லாம் விட்டு வெகுதூரம் - காடுமலைகாளுறுகளுங்கடந்து - இந்தப்பாலைநிலத்தில் வந்துவிட்டோம் - இவ்விடத்தில் - நம்முடைய - சரீரத்திலுண்டாகப்பட்ட - வியர்வைநீரோபல்லாது - வேறே - நீர்கிடையாதுஇவ்விடத்திற்குக்கிழக்கே - நெருங்கிய - சோலை - தோற்றுகின்றதினாலே - குளிர்ந்தகாற்றுவருகின்றது - அவ்விடத்திற்றடாகமிருக்குமென்று நினைக்கின்றேன் ஆதலால் - அந்தஇடத்திற்குப்போவோம் வாருஞ்சுவாமி (அப்படியேபோவோம்வாருமந்திரிகளே) ... ..... ... .. ✻

மந்திரி - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

கிள்ளைநற்குயில்பொன்பூவை கிளையுடனிருந்துகொஞ்சுந்... ....✻
தெள்ளுமாவருக்கைபுன்னை செண்பகத்தருக்கள்சூழ ..... ... .... ✻
வள்ளைசெவ்வல்லிசெந்தா மரைமலர்நெருங்கிநாளும்... . .. ..✻
எள்ளறுதடாகமொன்றிங் கிருக்குதுபாருஞ்சுவாமி ..... ... .... ✻

வசனம்

கேளும் - ராஜபரமேஸ்பரா - குளிர்ந்தகாற்றுவீசாநின்ற - இந்தச்சோலையினிடத்தில் - உத்நதமானதடாகமொன்று - இதோ - இருக்கின்றது - பாருஞ்சுவாமி (இராஜன்சொல்வசனம்) ஆ - ஆ - மந்திரிகளே நம்முடையபுண்ணியவசமென்னென்றுசொல்லலாம - இந்த - ஆரணியத்திலே - திவ்யமானதடாகத்தைக்கண்டோம் - இதிலிறங்கி - தாகசாந்திசெய்து நமதுவிடாயைத்தீர்த்துக்கொள்ளலாம் வாரும்மந்திரிகளே (மந் - வச) அப்படியேசெய்யலாம்வாருஞ்சுவாமி...... ...✻

இராஜன் - சொல் - வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - நல்ல - இடமறிந்து - அழைத்துவந்தீர்கள் நம்முடைய - புண்ணியவசம் - என்னென்று - சொல்லலாம - இந்த ஆரணியத்திலே - இப்படிப்பட்ட - தடாகமும் - மகா - உத்நதமான

சோலைகளும்- இருக்கின்றதுபோல - நானெங்கும் - கண்டதில்லை இந்தஇடமே-இப்படிஇருக்குமபோது - வனமுழுதும்- எப்படி யிருக்குமோதெரியாது-முற்றிலும் - போய்ப்பார்த்துவருவோம் வாருமந்திரிகளே (மந்திரிகள்-சொல்வசனம்) சுவாமிசுவாமி-நாங் கள்-தாகம்-சாப்பிட்டமாத்திரத்திலே சரீரம் - ஒருவகையாயிருக் கின்றது-மகாராஜனே(இராஜன்-சொல்-வசனம்) ஆ- ஆ- மந்திரி களே-ஆனல்-அதோஒரு- குருக்கத்திமரம்- நன்ருய்த்தழைந்து- புஷ்பித்து-மகா-உந்நதமாயிருக்கின்றது -அந்தமரத்திலர்நிழலிலே போயச் - சயனித்துக்கொண் டிருங்கள் - மந்திரிகளே (அப்படி யே சயனித்துக்கொள்ளுகிறேஞ்சுவாமி ... ... ..... ..... ... *

இராஜன்-சொல்- கொச்சகம்

இம்-புன்னுகவராளி

மூவரிருப்பிடமோ முப்பத்து முக்கோடி... .. ... *
தேவரிருப்பிடமோ செய்தவத்தோர் வாழிடமோ.....*
வாவிபொழினந்த வனமிருப்ப தென்ன சொல்வேன்*
யாவரிருப்பிடமோ யாதுமறிகிலனே.. ..... .. .... .....*

வசனம்

ஆ-ஆ-மும்மூர்த்திகளிருக்கப்பட்ட-இடமோ- முப்பத்துமுக் கோடிதேவர்கள்வாசஞ்செய்யப்பட்ட- இடமோ- அல்லது- ருஷீ ஸ்பரர்கள்-தவஞ்செய்யப்பட்ட-இடமோ-வனதேவதை யிருக்கப் பட்ட - இடமோ - ரிஷியாசிரமம்போலுந் - தோற்றுகின்றதே- முழுதும்போய்ப்பார்ப்போம்-ஆ-ஆ-இந்தமரங்கள் - இருக்கிற அழகேயழகு- இந்தத்- தடாகமிருக்கிற - உந்நதமே - உந்நதம்- இந்தத்தடாகத்தில்-செந்தாமரைமலர்கள்- மலர்ந்திருக்கிற - நேத் யேநேத்தி-ஆ-ஆ-அசோகமரம்-தழைந்திருக்கிற- அலங்காரமே- அலங்காரம்-இந்த- அசோகமரத்தில் - பஞ்சவர்ணக்கிளிகள்- கொ ஞ்சுகிற-ஓசையே-ஓசை-இதேது-ஆ-ஆ-ஆ- இந்தச்சிங்காரவனத் திலே-சித்திரப்பதுமைபோல்-தோற்றுகின்றது ஆ-ஆ-..... ...*

இராஜன் - சொல் - கொச்சகம்

இம் - புன்னுகவராளி

அன்னப்பெடையோ அழகுபசுங்கிளியோ.. ..... *
வன்னக்குயிலோ மடமயிலோ வான்மதியோ... ... *

மின்னற்கொடியோ விளக்கோவின் மேனகையோ.. ※
என்னுட்கலந்தவிவள் யாரொன்றறிகிலனே ....... .....※

இராஜன் - சொல் - சிங்காரபத்தியம்
இம் - புன்னாகவராளி

சித்திரமோ வொளிவீசிரத்தினமோ தெரியாது .... ..... ..... ※
நேருடனென்னெதிர் நின்றமாயம் ... ... ...... ..... ※
மங்கையோமதனிரதி தங்கையோ தெரியாது .... .... .. .. ※
எந்தனுக்கெதிர் நின்ற இந்தவுருவம் .... ..... ... .... ....※
வாணியோ வுசித இந்திராணியோ தெரியாது ..... .. ... ... ※
வலியவந்தெனையாள வந்தவடிவம் ... .. .. .. . ... ※
அன்னமோ புடமிட்ட சொன்னமோ தெரியாது ...... .... ...※
தமியன்முன்நிறைகாட்சி தந்தவடிவம் ... ... ... ..... ※
என்னமுகவிம்ப சுகதம்ப மென்ன டம்பம் ... ... ... ..... ※
என்ன நவவிலை மணிமாலை யென்ன வாலை ... .... ... ※
என்ன கண்சாடை யொயில்வேடை யென்னவாடை .. ..... ... ※
என்னவதிசோபம் வெகுதாப மென்னரூபம ... ... ..... ※

இராஜன் - சொல் - தரு
இம் - அசாவேரி - தாளம் - ஆதி

ஆரோ அரிகரி ஒகோ ஆஆ இத்தனைச் ... ... ... ... ...... .... . ※
சோதிப் பிரகாச ரத்தினம்போ னிற்கிறபெண்... . .. (ஆரோ)

காரார்செழுஞ்சோலையிலேயொரு கன்னி இள... .... ... .. ※
அன்னம் போலொயிலாய் மின்னி .... . ... .. ... .. ※
பொன்னின்வன்னம்போலெந்தன் .. .. .... ... .. .....※
கருத்துக்கிசைந்த அழகிய வஞ்சி தனியுபரஞ்சி ... .... ... ※
வனத்தின்மிகுந்த நவரசரஞ்சித சொகுசுடனின்றவள் ... (ஆரோ)

குலவுமளியினத்தைக் கொண்டைக்காயையிருளை ... ..... ..... ※
கொண்டலை வென்ற கொண்டைச் சொருக்கும் ஒரு ..... .... ※
கோடிபூரணசந்திர கலையைப்பழிக்குநல்ல .... ..... .. ........※
கோமள மானமுகத் திருக்கும் ..... .... ..... .... ... ... ※
பூலனுலவுகலவை கதம்பகஸ்தூரிபூசும் ... ..... ..... ..... ※
புளகிதகும்பஸ்தன நெருக்கும் இந்தப் ..... ... ..... ..... ※

பூமியந்தரசொர்க்க மூன்றையும்விலைபெறும் ... ..... ... *
பூவைச்சிங்காரச் செல்வச்செருக்கும் காமக் ... ..... ... .. *
கலசஞ்செய்மன்மதனுங் கண்டுபணியுருவங் ..... ..... .... *
கன்னூட்டிபிளைங்களினி கற்பழியாப்பருவம் . ..... ..... ... .*
இலகுமிவளழகைக்கண்டால் வேறென்னதோணும் .... ..... ...; *
இசைந்தாளிதல்லாலெனக் கென்னபாக்கியம்வேணும் இவள் ... *
ஓயிலுங்கனமுமலங்கிருதமிகு செயலும் மயலுமறிந்தென ..... *
திமனதுருகுது மிகமயல் பெருகுது ... .... .. ... .... *
அவள் மனதினதென அறிவதெவ்விதமிவள் ..... ... .. (ஆரோ)

சகுந்தலை - சொல் - வசனம்

அடிபெண்ணே சௌந்தரவல்லி (ஏனம்மா) அதோநமக்கு-
நேராகவருகின்றவராரடி இராஜகுமாரனைப்போற்காணுகின்றதே *

தோழி - சொல் - தரு

இம் - தோடி - தாளம் - ரூபகம்

இவரோதுஷ்டியந்தமகிபதி அம்மா ஏகசக்ராதிபதி ... ..... ... *
அவனிபோர் போற்றுங் கிரீடபதியுல ... ... .. .... .... *
சாதிபதிநல்ல நீதிபதி சொன்னேன் ... ... ..... (இவரோதுஷ்டி)
சந்திர வமிச குலோத் துங்கன் நல்ல சர்ஜன சாது சங்கன் ... ... *
இந்திரன் மகா தந்திரன் புய ... ..... .... .... .. ..... *
மந்திரன்றிவ்யசுந்தரன்சொன்னேன் ..... ..... (இவரோதுஷ்டியந்த)
மன்மத ரூபிலும் ரூபன் எழில் ... .. ..... ..... ..... *
மாதர் மகிழ் பூபன் - நிதம் ... .... .... ..... ..... ... *
தன்ம வானுயர் ஜென்ம வான்மதி .. ..... .. .... ... *
வண்மையான்கன நன்மையானம்மா ... ... ..... (இவரோதுஷ்டி)

தோழி - சொல் - வசனம்

அம்மாஇவரிந்த-உலகையெல்லாம்- ஒருகுடையில் ஆளப்பட்ட
ஏகசக்ரேஸ்வரனாகிய துஷ்டியந்தமகாராஜா இவர்தானம்மா ..... *

சகுந்தலை - சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

பொன்னின் முடிபூண்டு புயவலயந் தானணிந்து ... ... ... *
கன்னலெனடுமன்மதன்போற் கைதனில்வில்லம்புகொண்டு... ... *

தன்னந்தனியே சௌந்தரிய துஷ்டியந்த ... ... ..... ... ... *
மன்னனிவ்வனத்தில் வருவதென்ன மாமயிலே ..... ..... .. ... *

வசனம்

அடி சௌந்தரவல்லி - உலகத்தையெல்லாம் - ஒருகுடையிலாளப்பட்ட - துஷ்டியந்தமகாராஜனானவர் - இந்தவனத்தில் - நம்முடைய ஆசிர்மந்தேடி - வருவதென்னடியம்மா தோழி (ஆனாலென்ன வரட்டுங்கேட்போம்அம்மா) ... .... ..... ... ... .. .... *

இராஜன் - சொல் - கொச்சகம்

இம்புன்னாகவராளி

அன்னப்பெடைபெண்ணரசியாரெனவேநாமிருந்தால்
கன்னியொடின்னனென்றுகாதலுடன்சொல்லுவார் *
மின்னற்கொடியாளருகின்மெல்லனப்போய்நின்றுகில
நன்னயமாய்வார்த்தைசொல்லிநானையறிகுவனே ..... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்போதி

தெரிவையர்க்கரசேயின்பந்திகழிளங்குயிலேகேளாய் .... ... *
இருளகன்முனிவரானோ ரெவரிருப்பிடமோவேண்டி ..... ... *
அருமையாயுன்னைப்பெற்றஅன்னையார்தந்தையார்சீர் ..... ... ...*
பெருகியநீயாருந்தன்பேரெனக்குரைசெய்வாயே .... ... ... *

வசனம்

கேளும்பெண்ணே - நீதேவரம்பையோ - அல்லது - இந்திராணியோ - உன்னைப்பார்த்தால் - காமரசவிலாச - திரிலோகசுந்தரியைப்போலுந்தோற்றுதே - இந்தரிஷியாசிர்மத்திலிருக்க வேண்டியதென்ன - உன்னுடைய - தாய்தந்தையார் - நீயார் - உன்பேரென்ன - எனக்குத் தெரியச்சொல்லும் பெண்ணே .... ... ... .... *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - தோடி

அன்னலேகேளாயெந்தை யருந்தவந்தனிலுயர்ந்த .. ..... *
கண்ணுவமுனிவர்வாழுங் கனத்தவாசிர்மமீதே ... .... .. .... *
எண்ணுமங் கவர்மனத்திற் கிசைத்தபுத்திரிநான்மிக்கத் ... ... *
தண்ணளித்தலைவாவென்பேர் சகுந்தலையென்பர் தானே .... .....*

வசனம்

கேளும்-மகாராஜனே — எனது தந்தையாகிய-கண்ணுவ மகாரிஷியி னுடைய ஆசிரமமிது- நான் அவருடைய புத்திரியாள் - என்பேர்- சகுந்தலையென்று-சொல்லுவார் மகாராஜனே ... ... ... ... ✻

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

பூதலமாதர்க்கொப்பாய் புகலொணுவழகின்மிக்க ..... ... ..... ✻
தாதவிழ்குழலாய்திவ்ய சகுந்தலைப்பெண்ணேகேளாய் ... ..... ✻
காதல்சேருந்தன்றந்தை கண்ணுவனென்றுசொன்ன ... ..... ...✻
மாதவனெங்கேபோனர் மயிலேநியுரைசெய்வாயே ..... .. ..... ✻

வசனம்

கேளும்பெண்ணே-சகுந்தலை- உனது தந்தையாகிய- கண்ணுவ மகாரிஷி - எவ்விடத்திற்குப் போயிருக்கிறார் - அவரெப்போது - வருவார்-தெரியச்சொல்லும்பெண்ணே ... ..... ... ... ..... ✻

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-பந்துவராளி

முரண்டருமோன்னர்தங்கண் முடிபொடிப்படவேதாக்குந் .....✻
திரண்டமேருவுக்கொப்பான திண்புயவரசர்கோவே .. ..... .. ....✻
தெருண்டகண்ணுவரைவேறோர் ஜெயமுனியழைத்துப் போனர்✻
இரண்டுநாழிகைக்குள்ளாக இவ்விடம்வருகுவாரோ ..... ..... ... ✻

வசனம்

கேளும்-மகாராஜனே-என்- தந்தையாகிய - கண்ணுவமகாரிஷி யானவர்-சதானந்தரிஷி-ஆசிரமத்திற்குப்போயிருக்கிறார் -இன்னம்-இரண்டு- நாழிகைக்குள்ளாக-இவ்விடம்வருவார்மகாராஜனே.✻

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

இகபரமுணர்ந்துமாயை யென்பதைமுழுதுநீக்கிப்..... ....... ...✻
புகலுமூவாசைவிட்டுப் பூரணபதத்தைச்சார்ந்து ... .. ... ...✻
தகைமைசேர்துறவியான தவமுனிகண்ணுவர்க்கு..... ... ..... ...✻
மகளெனநீயுதித்த வாறெனக்குரைசெய்வாயே..... ..... ..... ... ✻

வசனம்

கேளும் - பெண்ணே சகுந்தலை - மும்மலங்களையும் கடந்த தபசியாகிய - கண்ணுவமகாரிஷிக்கு நீமகளாக - வந்துதித்த - வரலா றென்ன - அவரைப்பார்த்தால் - ரிஷியாயிருக்கின்றது உன்னைப்பார் த்தால் - ராஜவடிவாயிருக்கின்றது - அதையெனக்குத் - தெரியச்சொல் வாய்பெண்ணே... ..... ..... ... ... ..... ..... ... ..... .. *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - எதுகுலகாம்பூதி

மன்னனே யொருநாளிங்கோர் மாதவமுனிவர்வந்தே ..... ..... ..... *
என்னையா ரொன்று கேட்க வெந்தைகண்ணுவரவர்க்குச் ... ..... ...*
சொன்னபோதருகிருந்து சூட்சியாய்க்கேட்டிருந்தேன் ..... ....*
பின்னுமென்வரலாறெல்லாம் பாந்தமாயுரைசெய்வேனே........*

வசனம்

கேளும் - மகாராஜனே - என்னுடையவரலாறு - எனக்குத் - தெரி யமாட்டாது - ஒருநாளிங்கே - ஒருரிஷிவந்து - என்னை - யாரென்று - என்தந்தையாகிய - கண்ணுவமகாரிஷியைக்கேட்க - அந்தரிஷிக்கு - அவர்சொல்லும்போது - நான் - மகாசூட்சமாய்க்கேட் டிருந்தேன் அதைதெரிந்தமாத்திரஞ்சொல்லுகிறேன் - மகாராஜனே ..... ... *

சகுந்தலை - சொல் - அகவல்

இம் - எதுகுலகாம்பூதி

மகிபநான்பிறந்த வரலாறுகேளாய் ..... ... .... *
மிருதவவிசுவா மித்திரனென்போன் .... ..... .....*
வண்மைசேரிமய மலையினிற்கருகே ..... .. *
திண்மையாய்த்தபசு செய்திடும்போதில் ..... .....*
இந்திரனந்த வெழிறவமழிக்க ..... ..... ... *
விரதைமேனகையை விடுத்தனனவளைச் ...... ...*
சிந்தையுண்மகிழ்ந்து சேர்ந்தபோதுதித்த ...... *
எந்தனைவனத்தி லெறிந்தவர்போனார் ..... .... .....*
அவ்வழிவந்த வரியகண்ணுவர்கண் .... ..... .. *
டிவ்விதமாக வெடுத்தெனைவளர்த்தார்... ........ *
தையலார்தமக்குத் தந்தையர்மூவர் .... .... *
எய்யுநூன்முறைய தெப்படியென்றால்... ..... *

இன்பமாய்ப்பெற்றோ ரிடர்தனைத் தீர்த்தோன் ※
அன்புடனன்ன மளித்திரட்சித்தோன்.... ........※
இந்தமூவர்களு மேந்திழையார்க்குத்..... .... ... ※
தந்தையென்றுரைக்குஞ் சகலசாஸ்திரமும் .... ※
ஆதலாலென்னை யருமையாயெடுத்துக் ... ..... ※
காதல்சேரந்தக் கண்ணுவனென்னை ... ... ..... ※
மகளெனச்சொல்லி மகிழ்ச்சியாய்வளர்த்தார் ....※
தகுமெனக்கவரோ தகப்பனாரன்றே .... ..... ...※

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - எதுகுலகாம்பூதி

வேந்தர்கள்வேந்தன்விசுவா மித்திரனுற்பிறந்தத்தாலே ..... ....※
எந்திழையாளேயுன்மே லிச்சைவந்ததுவுமெய்யே .. .... .....※
வாய்ந்தவென்றேகமெல்லா மன்மதபாணம்பட்டுப் ... ........※
பாய்ந்துமேயுருகுதெத்தன் பரிதாபந்தீர்த்திடாயே .... ... ....※

வசனம்

கேளும்பெண்ணே - சகுந்தலை - அந்தராஜரிஷியாகிய - விசுவா மித்திருடைய - புத்திரியானபடியினாலே - உன்பேரில் - எனக்கு - இச்சைவந்தது - மெய்யே - என் - விரசவேதைதீரக்கூடி மருவ வேண்டும்பெண்ணே .... ..... .... ... .. ..... ※

இராஜன் - சொல் - தரு

இம் - தேசிகம் - தாளம் - ரூபகம்

மயலாகினன் மானேநான் மயலாகினன் .... ..... ... ... ※
மயிலேயிளமான்குயிலேமிசநான் ..... .... .... (மயலாகினன்)
வண்டுவிழியிலே கண்டுமொழியிலே மனம் .. ..... .... .... ※
மயங்கித்தமி ழுயங்கிக்களை புரிந்துச்சடம் வருந்தித்தினம் .......※
அற்புத பொற்பிரு வெற்பினிவிப்பவு நான்.... ....... ...(மயலா)
கும்பமுலையிலே யின்பநிலையிலே நிலை .... .... ... .... ..... ※
குலைந்திப்படி கடம்பப்பயன் மதன்கைப்பட விடும்பொற்கணை※
குத்திட தைத்திட மெத்தவுநான் .... ... ..... ... (மயலாகினன்)
சின்னவிடையிலே யன்னநடையிலே யுளந் ..... ..... .... .. ※
திரும்பிச்சுகம் விரும்பிப்பர வசம்பெற்றுனை யணைந்திச்சையில்※
சித்தமு மொத்திட முற்றிட மெத்தவுநான் .. ...(மயலாகினன்)

இராஜன் - சொல் - வசனம்

ஆ - ஆ - பெண்ணே - சகுந்தலை - நான்முன்னே - உன் - பேரென்ன வென்றுகேட்டபோது - எப்படிமனது - சந்தூஷ்டியாய்ப் பேசினை யோஅப்படி - இப்போது - முகத்தைப்பார்த்து - என்மையல்தீர - இரர்சியமாய் - ஒருவசனஞ் - சொல்லும்பெண்ணே .... ........ *

இராஜன் - சொல் - தரு

இம் - புன்னாகவராளி - தாளம் - ஆதி

சொக்கிப்போகுதே நெஞ்சஞ் சொக்கிப்போகுதே .... ...... ......*
மிக்கச் சிறந்த கண்ணாட்டி முகச்... ... .... .. ... ... .... *
சந்திரவிம்பத்திலே ஸ்தன கும்பத்திலே......... ........ (சொக்கிப்)
குதலைமொழியிலே நெடு மதனவிழியிலே .... ... ...... ......*
விதனமேவிடச் செய்திடு முடை .. ..... ..... ... ..... .. *
மெலுக்கிலே நடைகுலுக்கிலே நெஞ்சம் ... ..... ... (சொக்கிப்)
துன்னுமயிலிலே யிந்தக்கன்ன வொயிலிலே ......... ..... .....*
உன்னு மங்கைப் பருவக் குறி .... ..... ... ..... ..... *
வகுப்பிலே செக்கச்சிவப்பிலே நெஞ்சம்.......... ... (சொக்கிப்)
முத்துநகையிலே யொரு யித்தவகையிலே .... .... ...... .. *
மற்றுமொருவரொப்பிலாத ..... ... ... ... ... ... ..... *
வசத்திலே பரவசத்திலேநெஞ்சம் ..... ... .... ..... (சொக்கிப்)

இராஜன் - சொல் - சிங்காரபத்தியம்

இம் - புன்னாகவராளி

கார்கொண்டகங்கையே கரியமாறங்கையே .... ... .... .... *
கலைமேவுமங்கையே கனகமானே.... .... ... ... .....*
பார்கொண்டகன்னியே பசுமைசேர்பொன்னியே..... ..... .....*
பாதாளமன்னியே பாவையேநீ ... ... ... ..... ... .... *
சீர்கொண்டவன்னமே செழுமேனிவன்னமே .... ... ..... *
செய்யபூஞ்சொன்னமே சித்திரமேமின் ... .... .. ... *
வார்கொண்டகொங்கையே மயறந்த நங்கையே ..... ..... ..... *
வசமாகவிங்குதான் வாடிவாடி ..... ..... ... .... ... *
வஞ்சகஞ்செய்ய வேளையோ தருணமலடி ..... ..... ... ... *
பஞ்சமாபாதகி பழிநினைபாதடி ... ..... ... ... ..... *

அஞ்சலென்றழையடி யுன்மனங்கல்லடி .... ..... ..... ..... .....*
தஞ்சம்வேறில்லையொருவார்த்தைசொல்லடிதையல்வாடி ...*

இராஜன் - சொல் - தரு

இம் - பைரவி - தாளம் - திரிபுடை

விரகம்பொல்லாதே யெந்தன் விரகம்பொல்லாதே ... ..... ...*
விற்பனர்பெற்றிடுந்தனமே அற்புதபொற்கனியனமே...(எந்தன்)
மருவளர்தேனே யெவ்வனமடமானே யெந்தன்.... .......(விரகம்)
விரைமலர்சூடி மிகவிளையாடி .. ... ..... .... .... .... ... *
அருமையாய்க் கூடிநா மனோகுவம்வாடி யெந்தன்... .....(விரகம்)
கரவுசொல்லாதே சும்மா கடிந்துகொல்லாதே ..... ..... ... *
மருவியல்லாதேயெந்தன் மனதுநில்லாதேயெந்தன் ... (விரகம்)
எனையினிமேவி யிணங்கடிபாவி .... ... ..... ... ..... ... ..... *
உனைமனந்தாவி யையோ வுருகுதென்னாவியெந்தன்..... ...(விரகம்
அருகினில்வாரா யுந்தனருட்கணுறப்பாராய் ......... .... .... *
விரும்புதேன்றூராய்க்காம வீடாய்தனைத்தீரா யெந்தன்..(விரகம்)

சகுந்தலை - சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

எந்தையெனுங்கண்ணுவனு ரில்லாதவேளையிலே .... *
வந்துமயல்கொண்டுமிகவாடுகிறேனென்றுசொன்னால் *
உந்துநெறிமாமுனிவ ருள்ளம்றியாமலெநீ .... ..... *
இந்தவகைப்பேசவுனக் கேற்குமோமன்னவனே .... *

வசனம்

கேளும் - மகாராஜனே - என துந்தையாகிய - கண்ணுவமகாரிஷி யானவர் - இல்லாதவேளையில் - நீதனித்துவந்து - இப்படிக்கு - என்னுடன் - பேசுகிறது - சரியல்லவே - கண்ணுவமகாரிஷி வரட்டும் - மகாராஜனே ..... .... ... ... .... .... ... ... ... *

இராஜன் - சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

கற்றமுனிவருன்னைக் காதலுடனேவளர்த்து ..... ... *
மற்றொருவர்க்கீயாமல் வைத்திருக்கஞாயமுண்டோ *
குற்றமில்லையென்றனை நீ கூடியணைந்தாலதற்கு ... ...*
வெற்றிதருமாமுனிவர் வேறொன்றுஞ்சொல்லாரோ...*

வசனம்

வாரும்பெண்ணேசகுந்தலை-உனதுதந்தையாகிய - கண்ணுவமகாரிஷியானவர் - உன்னை - எடுத்துவளர்த்தார் - இனிமேல் - நல்லயோக்கியாளைப்பார்த்துப் - பாணிக்கிரகணஞ்செய்து - கொடுப்பாரேயல்லாமல் - சும்மாவைத்திருக்க - ஞாயமில்லை - ஆனபடியால் - இப்போது - நீயென்னைக்கூடியணைந்தால் - அந்தக்கண்ணுவமகாரிஷி - ஒன்றுஞ்சொல்லமாட்டார் - வாரும்பெண்ணே ... ... ... ... ... ❋

சகுந்தலை சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

சொல்லாரொணவுரைத்த தோன்றலேநீதிநெறி..... ...❋
எல்லாமறிந்தவர்களிப்படியுஞ்சொல்வாரோ ... ...❋
வல்லாரறியவிவாகஞ்செய்யாமன்மட ..... .... .... ❋
நல்லார்தமைமருவல்ஞாயமோமன்னவனே ..... ..... ❋

வசனம்

கேளும் - மகாராஜனே - உம்மைப்பார்த்தால் - எல்லாநீதியுமறிந்தவர் போற்றோற்றப் படுகின்றதே - என்றந்தையாகிய கண்ணுவமகாரிஷியானவர் - இல்லாத வேளையில்வந்து - விவாகமில்லாத பெண்களைக்கூடி - மருவுதல் - ஞாயமோசொல்லுமகாராஜனே ........ ❋

இராஜன் - சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

விண்ணினமுதேகேள் விவாகத்திலெட்டுவிதம் ..... ...❋
பண்ணும்பிரமபிரசா பத்தியமாரிடந்தெய்வந்... .....❋
தண்ணரசிராட்சசப சாசுடனேகாந்தருவம் ... ... ...❋
நண்ணுமதிற்காந்தருவ நல்லவிவாகமிதே ... ..... ...❋

வசனம்

கேளும்பெண்ணேசகுந்தலை - விவாகத்தினுடைய - முறைமையைச் - சொல்லுகிறேன் - பிரம்விவாகமென்றும் - பிரசாபத்தியவிவாகமென்றும் - ஆரிடவிவாகமென்றும் - தெய்வவிவாகமென்றும் - இராஜவிவாகமென்றும் - இராட்சசவிவாகமென்றும் - பைசாசுவிவாகமென்றும் - காந்தருவவிவாகமென்றும் - இப்படிக்கு - எட்டுவிதவிவாகமுண்டு - அதில் - காந்தருவவிவாகமென்பது - கொடுப்போருங்

கேட்போருமில்லாமல்- ஸ்ரீபுருஷாள் - இருவருந் - தனித்தெதி ர்ப்பட்டுத்தாமேகூடுவது-காந்தருவவிவாகம் - இதுவேதவிதியான படியினாலே-அந்தக்காந்தருவவிவாகமாக - நாமிருவருங்கூடுவோம்-வாரும்பெண்ணே .... ... .. .. ... ..... ..... ... ❋

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-ஆனந்தபைரவி

கல்லெனத்திரண்டதோளாய் காந்தர்வவிவாகஞ்செய்து ..... ......❋
மெல்லியலாரைக்கூடல் விதிபுராதென்றுசொன்னாய் ... ... .....❋
எல்லையிநுலகையாளு மிறைவனேயுனக்குத்தேவி .... ..... ..... ❋
இல்லையோவுண்டோமெய்யா வெனக்கிதையுரைசெய்வாயே ... ❋

வசனம்

சோனும்-மகாராஜனே-நீயென்னைக்காந்தருவவிவாகஞ் செய்து கொள்ளவேண்டுமென்று சொல்லுகிறீர் உமக்கு- இதுவரையில் விவாகமில்லையா-பட்டத்துத்தேவியானமனையாளில்லையா - என்னுடன்-உண்மையாகச்சொல்லும்-மகாராஜனே ... ... ..... ... ❋

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

மன்னியவுலகையாண்டு வந்ததல்லாமல்வேறோர் .... ... .... .❋
கன்னியையிதுவரைக்குங் கலியாணஞ்செய்ததில்லை ... .. .....❋
இன்னிசைக்குயிலேசேளா யிணங்கியென்விரகந்தீர்த்தால் .......❋
பன்னுவதென்னநீயென் பட்டத்துத்தேவிகண்டாய் ..... ... .....❋

வசனம்

கேளும்பெண்ணே-சகுந்தலை-நானிதுவரைக்கும் ஒருவரையுங் கலியாணஞ்செய்ததில்லை-எனக்குப்பட்டத்துத்தேவியுமில்லை இப்பவும்-யென்னுடன்-கூடி காமவிடாயைத்தீர்ப்பையேயானால்நீஎன் பட்டத்துத்தேவி என்பதற்குச் சமிசயமில்லை வாரும்பெண்ணே❋

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-சாவேரி

என்பெருமனையாணீயே யென்றுநல்லிதவுசொல்லி... ... ... ❋
அன்புடனென்னைச்சேர்ந்துன் னக்கரைதீர்ந்தபின்பு .... .... ❋
மென்புவிபுறியவேறே விவாகநீசெய்துகொண்டால் .... .. ...❋
இன்புறும்அரசர்கோவே யிதற்குநானென்னசெய்வேன் ..... .......❋

வசனம்

கேளும்-மகாராஜனே-நீயேயெனக்கு பெண்சாதியென்றும் நானேயுனக்குப்-புருஷனென்றும்-இப்போது-இதவுவார்த்தைசொல்லி-என்னைக்கூடி புணர்ந்து-உன்னக்களைதீர்ந்தபின்பு-நீபோய் வேறே-விவாகஞ்செய்து-கொண்டால்-பின்பு-நானென்ன-செய்குவேன்மகாராஜனே ... ..... ..... ... ... ... ... ..... ...*

இராஜன்-சொல்-விருததம்

இம்-தோடி

கன்னியர்தம்மைவேறே சனவிலு நினைப்பதில்லை ... ..... .... *
அன்னமெய்சொன்னேன்சொன்னே னைய நீகொள்ளவேண்டாம் *
உன்னுடைத்திருவயிற்றி லுதித்திடுமைந்தனுக்கு ..... ... ... *
மன்னியவுலகையாள மணிமுடிசூட்டுவேனே ... .. ... ... ... *

வசனம்

கேளும்-பெண்ணே-சகுந்தலை-உன்னையன்றி நான்-பரஸ்திரீ முகத்தைப் பார்க்கிறதில்லை-நீயொன்றுக்குஞ் சந்தேகப்படவேண்டாம் நீயே-என்சுயபத்தினி-உன்வயிற்றிற் பிறக்கும்பிள்ளைக்கு-இந்த-உலகமெல்லாம்-அரும்படியாக-முடிசூட்டுவேன்-வாரும்பெண்ணே ... ... ..... ... .... ... ... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-சாவேரி

எந்தைகண்ணுவனரிங்கே யில்லாதவேளைதன்னில்.. ..... ... ..... *
வந்துநீயென்னைக்கூடி மருவினுற்றகுமோநானை ... ..... ... ... *
உந்தனைநான்கண்டேனே வுன்முகமறிவேனோவென் ... ... . *
றிந்தவாசகத்தைச்சொன்னு விறைவனேநானென்செய்வேன்.... *

வசனம்

கேளும்-மகாராஜனே-எனது-தந்தையாகிய-கண்ணுவமகாரிஷி-இல்லாத-வேளைபார்த்துவந்து-என்பேரில்-மோகித்து-என்பட்டத்துத்தேவியேயென்றும்-உன்வயிற்றிற்பிறக்கும்-பிள்ளைக்குப்-பட்டந்தரிக்கிறேனென்றும்-இச்சகம்பேசிக்கூடினுல்-தகுமோநானை-உன்னைக்கண்டவனர்-உன்முகத்தைப்பார்த்தவனுமொன்று-சொன்னுல் அப்போது-நானென்னசெய்வேன்-மகாராஜனே

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - காம்போதி

அன்னமேகேளாயிந்த வதிசயமெங்குங்காணேன் ..... ..... ..... *
மின்னனைபாரைச்சேர்ந்து விரகநோய்தீர்ந்தனன்பின் ..... ... .. *
புன்னைபார்கண்டாருந்தன் முகத்தைபாரறிவாரொன்று ......... .... *
சொன்னவருலகிலுண்டோ தோகையேயுரைசெய்வாயே ... ... *

வசனம்

கேளும்பெண்ணே சகுந்தலை - நீசொல்லுகிற - அதிசயமானவார்த்தையை - நானெங்குங் கேட்டதில்லை - ஆகிலும் - இராஜாக்கள் ஸ்திரீகளைக்கண்டு - அவர்களைக்கூடி - தங்கள் - விரகந்தீர்ந்தபின்பு - உன்னையார்கண்டார் - உன்முகத்தையார்கண்டாரென்றுசொன்ன அரசர் உலகத்திலுண்டோ - இல்லை - ஆகிலும் - உனக்குப் - பிரமாணஞ் செய்து கொடுக்கிறேன் - வாரும்பெண்ணே .... ..... .. ... *

இராஜன் - சொல் - தரு
இம் - தோடி - தாளம் - ஆதி

நம்படிபெண்ணே யென்வார்த்தையை ..... ... .... ..... ... *
நம்படி யென் கண்ணே ..... ..... ... .... ... .... *
வன்பெறுமாகாச வாணிபூமி தேவி ... .... ... ..... ..... .. *
மனதே நித்தியமாக விதுவேசத்தியமாக ... (நம்படிபெண்ணே)
கன்னியெநீயென் பெண்சாதி நானுன் கணவனிதே யுள்ளசேதி *
தன்னமையாலுன்னை யல்லாமல்வேறேபெண் ... ... .... ... *
டன்னைக்கொள்ளுவதில்லை யுன்னைத்தள்ளுவதில்லை... ... (நம்படி)
எந்தன் வார்த்தையைநீ தள்ளாதை - நெஞ்சில் .... .... ... ...*
எதுவுஞ்சந்தேகங் கொள்ளாதை .... ... .... ... ... ... *
உந்தனவயிற்றி லுதித்திடும் பிள்ளைக்கிவ் ... ... ..... ... ... *
வுலகமதுபுரப்ப இலகு முடிதரிப்பன்... ....(நம்படிபெண்ணே)
பட்டத்துத் தேவியுநீயே - எந்தன் .... .. .......... ... .. *
பாராளு வோனுந்தன் சேயே ..... ... .... .... ... .. .... *
கட்டழகியெயென்னைக் கைவசமாக்கிய .... .... ... .. ... ....*
கண்ணேயுந்தன் மித்தியஞ் . ..... ..... ..... ... ... *
சொன்னேன் சத்தஞ் சத்தியம் .... .... .... (நம்படிபெண்ணே)

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மெய்யுநல்லறமுநீதி விளக்கமுமருளுங்கொண்டு ... ..... ...*
வையகமுழுதுங்காக்கு மன்னர்மன்னவனுன்கண்டாய்... ..... ....*
தையலேயுனக்குச்செய்த சத்தியமறந்தேனுனாற் .... .. .. *
றெய்வந்தான்பொறுத்திட்டாலுஞ் செகதலம்பொறுத்திடாதே *

வசனம்

சேளும்பெண்ணேசகுந்தலை - உண்மையையும்தர்மத்தையையும் நீதியையும் - பிரகாசத்தையும் - கிருபையையும் - ஒருஆபரண மாகப்பூண்டு - இவ்வுலகத்திலுள்ள - எவ்வகைப்பட்ட - உயிர்களை யும் - தன்னுயிரைப் - பாதுகாக்கும் - இராஜாதிராஜர்களுக்கெ ல்லாம் - ராஜனாகிய - நான் - உனக்குப்பொய் சொல்லமாட்டேன் மேலும் - உனக்குச்செய்துகொடுத்த - சத்தியத்தைமறப் பேனானல் தெய்வம் பொறுக்காது அல்லது - தெய்வம்பொறுத்தாலும் - இந்தப் பூமி பொறுக்கமாட்டாது - இப்பவும் - எனக்குக் - காமவேதனை - பொறுத்திடக்கூடவில்லை - இனிமேலாகிலும் - நாமிருவரும் - காம கிரீடையைச்செய்யலாம் - வாரும்பெண்ணே .... .... .... ...*

இராஜன் - சொல் - கந்தார்த்தம்

இம் - தோடி

சேளாயிளைமயிலேமிக மீளாமயன்மீறியாகமெலிவுறு மெனைநீ *
ஆளாவிடிலுயிர் போகுது . ... ... .... ... .. .... *
தாளாதினிமேலென்னுடைத் தையலேவாடி ... ..... ... ...*
நான்சொன்னது பொய்யல்லவாடி ..... .... .. ... .. .. *
வெய்யபாவியினி யையமேனென்னுவி .... .... ... .... *
உய்யும்வாறுகிருபை செய்யடி வொய்யாரத் .... .... ... .....*
தையலேவாடி நான்சொன்னது பொய்யல்லவாடி ... ..... *

சகுந்தலை - சொல் - கந்தார்த்தம்

இம் - தோடி

அன்றேயுன்றிரு மனையவளென்றே பிரமனெழுதியபடியே......*
இன்றேயிசைகுவதென்னென ... .... ... ... ..... ..... *
நன்றேயெனது பிராண நாதனேவாரும் .. .... ..... ... *
ஜகதலப்ரக் கியாதனேவாரும் ... ...... ... ..... ..... *

சோதகன்றுநின்ற நீதனென்றுமிந்தப் .... ..... ..... ..... *
பூதலங்களெங்கு மோதுகின்ற எந்தன் .. .. .... .. *
நாதனேவாருஞ் ஜகதலப்ரக்கியாதனேவாரும் .... ... ..... .....*

இராஜன் - சொல் - சந்தார்த்தம்

இம் - தோடி

கானேமருவிய இளைமட மானேயுனதாசை வெள்ள ... ... ..... *
வாரியில் வீழ்ந் தே - நானேயலைவது மிதமல ... .... ..... .....*
தேனே நா மொருமையாகச் சேருவம்வாடி ... ..... ..... ..... *
சேர்ந்தானந்தங் கூருவம்வாடி .... .. ... ..... ..... .. .... *
சாருநண்பகலில் யாரும்வந்திரா முன்... ... .... .... .... .... *
நேருமிங்கேயிரு வோருமின்பமாகச் .... .... .... ..... .... *
சேருவம்வாடி சேர்ந்தானந்தங் கூருவம்வாடி .... .... ..... *

சகுந்தலை - சொல் - சந்தார்த்தம்

இம் - தோடி

ஆரலுமதிரோ கிணியும்மென .... ... ... ..... .... .... *
ஏருளரதிமதனுமென்ன - இனிதுடனிமையுஞ் ..... .... ... *
சாரையு நாசமு மெனவே .. ..... .... .... ..... ... *
சீருடனே நாமொருமையாகச் சேருவம்வாருஞ் ... .. .... *
சேர்ந்தானந்தங் கூருவம்வாரும் ... ..... .. .... .... ... *
சாருநண்பகலில் யாரும்வந்திராமுன் ..... ..... ... .... ..... *
நேருமிங்கேயிரு வோருமின்பமாகச் .... ..... .... .. ..... *
சேருவம்வாருஞ் சேர்ந்தானந்தங் கூருவம்வாரும் ..... ..... ... *

இராஜன் - சொல் - வசனம்

கேளாய்பெண்ணே - சகுந்தலை - உன்பிதாவாகிய கண்ணுவமகா ரிஷி வேள்விமுதலாகிய - நற்றவங்கள் - செய்யப்பட்ட - இடமிது ஆதலால் - நாமிருவரும் - இவ்விடத்திற் - காமகிரீடைச் - செய்யலா காது - அதோ - அந்தக்குருக்கத்தி - மரத்தின்கீழே - பன்னசாலை யொன்றிருக்கிறது போற்றோற்றுகிறது - அவ்விடத்தில் - நாமிரு வருங் - கூடிவிளையாடலாம் - வாரும்பெண்ணே ..... ..... .... ..... *

இராஜன் - சொல் - சந்தார்த்தம்

இம் - தோடி

மலர் வுற்றலர் சணையா லுள் .... ..... ... ..... ... *
மெலிவுற்றிடு விரகதாப மேலிடுதையோ ... .... ..... ... *

கலிவிக்கிது ததிமகிழ் வொடு ..... ..... ..... ... ..... ❋
குலவிப்பிரிய மாகக் கூடுவம்வாடி கொஞ்சிவிளை யாடுவம்வாடி ❋
நாடிமிஞ்சியுற வாடியின்பவனைத் .... .. ... .... ... .... ❋
தேடியன்பின்மலர்ச் சூடிப்பாடிநாம் ..... .... ... ... .... ❋
கூடுவம்வாடி கொஞ்சிவிளை யாடுவம்வாடி ........ ... .... ... ❋

சகுந்தலை-சொல்-கந்தார்த்தம்

இம்-தோடி

பாவிச்சிலைமகன் விடுகணை ..... ... ... ... ..... ..... ❋
தாவிக்கனைகண்டிலாத தமியையடைந்தேன் .... .... ... .... ❋
ஆவிக்கினிதுறு புட்குரல் ... ..... ..... .... .... .... ❋
கூவிப்பிரியமாகக் கூடுவம்வாரும் .... .... ..... .... ... .... ❋
கொஞ்சிவிளை யாடுவம்வாரும் .... ... ... ... ..... ...... ... ❋
நாடிமிஞ்சியுற வாடியின்பவனைத் ... ... ... ... ... ... ... ❋
தேடியனபின்மலர்ச் சூடிப்பாடிநாம் ... ... .. .. ..... ...❋
கூடுவம்வாருங் கொஞ்சிவிளை யாடுவம்வாரும் ................... ...❋

இராஜன்-சொல்-விருத்தம்

இம் - காம்பூதி

ஆருக்குஞ்சத்யமென்ப ததுவேகண்கண்டதெய்வம் ... ... ... ❋
பாருக்குளுனக்குச்சொன்ன பரவசமறப்பதில்லைச் .. ... .....❋
சீருக்குளுபர்த்தமாதே செலவுதந்தனுப்பவேண்டும்..... ..... .....❋
ஊருக்குச்சென்றுநாளை யுன்னைநான்வரச்செய்வேனே .......... ❋

வசனம்

வாரும்-என்பிராணநாயகி- ஆருக்குஞ்சத்தியமே - பிரத்தியட் சமானதெய்வம்- ஆதலால் - நான் - உனக்குச் செய்து கொடுத்த சத்தியம்-தப்புகிறதில்லை-வந்து வெகுநேரமாச்சுது -எனக்குச்செலவு-கொடுத்து-அனுப்பும்பெண்ணே ... ... ... .. ...... ❋

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-புன்னாகவராளி

நற்றவமுனிவர்வந்து நடந்தவாறறிந்தபின்பு ... ... ... ... ❋
மற்றெனையனுப்புவிக்க மகிழ்ந்துநாமூர்க்குச்சென்றால் ... .. ❋
குற்றமொன்றிலை நமக்குங் கோதிலாக்கண்ணுவர்க்கும் .... .. .. ❋
பற்றுமிங்கிதைக்கேட்போர்க்கும்பார்ப்போர்க்குமழகுமன்று. ❋

வசனம்

கேளும்என்பிராணநாதா - என்பிதாவாகிய - கண்ணுவமகாரிஷீ யானவர் - இங்கே - உமக்குமெனக்கும் - நடந்த - விருத்தாந்தமெல் லாங்கேட்டு - அவர்சந்தோஷமாய் - என்னைக்கூட்டி யனுப்பும்படி நடப்பித்துக்கொண்டு - போவீரானால் - நம்மிருவருக்கும் - யாதொரு குற்றமுமில்லை - இதல்லாமல் - கண்ணுவமகாரிஷிக்கும் - இதைக் கேட்பவர்க்கும் பார்ப்பவர்க்கும் அழகாயிருக்கும் பிராணநாதா ※

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

வேட்டையிற்றனித்தேனென்பின்விறலுடன்வந்தவீரர் ...... ※
காட்டகத்தன்னிலென்னைக்காணமற்றேடுவார்கள் ...... ※
கூட்டமாமவரைக்கூடிக்குலவுநன்னகர்க்குச்சென்று...... ※
நாட்டுமந்திரியாலுன்னை நாளைநான்வரச்செய்வேனே ...... ※

வசனம்

கேளுமென்பிராணநாயகி - நாம்அம்மாத்திரத்துக்கு - வேலைவை த்துக் கொள்ளுகிறதாவேண்டாம் - நான்சொல்லுகிறதைக்கேள் - உன்பிதாவாகிய - கண்ணுவமகாரிஷி - வருகிறவரைக்குமல்லவோ இரு க்கச்சொல்லுகிறாய் - அது - சரியே - வேட்டைக்கு - வந்த - இடத்தில் - ஒருமானைத் துரத்திக்கொண்டு - நான் - தனித்து - வந்துவிட்டேன் பினனாலேவந்த - சேனைகள் - என்னைக்காணமற்றேடுவார்கள் - ஆத லால் - நான்சீக்கிரமாய்ப்போய்நாளைத்தினம் - மந்திரியையனுப்பி உன்னை - என்னிடத்திற்கு - வரவழைத்துக்கொள்ளுகிறேன் - எனக் குத்தரவு - கொடுத்தனுப்பும் - பெண்ணே ...... ※

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - சாவேரி

கானகந்தன்னிலின்னங் காரியமிருக்குமானால் ...... ※
நானினிச்சொல்வதென்ன நல்லதப்படியாகட்டும் ...... ※
ஆனமந்திரியாலென்னை யழைப்பிப்பேனென்றசொல்லும் ...... ※
வானுமண்ணறிந்தசொல்லு மறந்திடவேண்டாமன்னா ...... ※

வசனம்

கேளும் - என்பிராணநாதா - உமக்குக் - காரியமிருந்துதானால் - அப்படியே போய்வாரும் - என்னை - நாளைத்தினம மந்திரியை-

அனுப்பி - வரவழைத்துக் கொள்ளு கிறேனென்ற சொல்லையும் ஆகாசவாணி- பூமிதேவியறியத்தக்கதாகச் செய்துகொடுத்த சத்தியத்தையும்மறந்திடவேண்டாம்போய்வாரும் என்பிராணநாதா *

இராஜன் - சொல் - வசனம்

சேளுமென் பிராணநாயகி- இந்தப்பூமியும்- ஆகாசமும்- அறியும்படியாக-உனக்குச்செய்துகொடுத்த- பரவசத்தை-மறப்பேனு ஒருக்காலுமறக்கிறதில்லை - என்பின்னுலேவந்த-மந்திரிகள்-முதலாகிய-சேனைகளுடனேகூடி- அஸ்தினபுரத்திற்குப்போய் - நாளைத்தினம் - மந்திரியை - அனுப்பி - உன்னைவரவழைத்துக்கொள்ளுகிறேன் - இப்போதுநீமனதிலே - சந்தேகங்கொள்ளாமல் - உத்தரவு கொடுத்து - அனுப்புவிக்கவேண்டும் - என்மனோரஞ்சித மானபிராணநாயகி (சகுவச) அப்படியேபோய்வாரும்-சொன்னசொல்லை-மறக்கவேண்டாம் - என்பிராணநாதா (இராவச) ஒருக்காலுமறக்கிறதில்லைபெண்ணே (சகுவச) ஆனற்போய்வாருமகாராஜனே... .....*

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

தந்திரிமுதலாஞ்சேனைத் தலைவனைவனத்தில்விட்டு ... ... .... *
முந்துமானைத்தொடர்ந்து மூரியவேட்டைகொண்டோம்.... ...*
விந்தையாம்புனலையுண்டு மேவியவிடாயுந்தீர்ந்தோம் ....... .....*
வந்தொருசாமமாச்சு மந்திரிகாளெழுந்துவாரீர் ..... .. ..... *

வசனம்

ஆ - ஆ - மந்திரிகளே - சேனைகளே - எல்லாம் - வனத்தில் - விட்டு - ஒருமானன்பின்னுலே - தொடர்ந்து - மிகவும் - மெய்வருந்தி - தாகமாய் - ஜலத்தைத்தேடிவந்தோம் - வந்த - இடத்தில் - புனலைக்கண்டு - தாக சாந்திசெய்து - - சாதுவிடாய்த்தீர்ந்தோம் - ஆனலும் - நாம் - வந்து வெகுநேரமாச்சுது- எழுந்துவாரும் - மந்திரிகளே (மந்தி - வச) அப்படியே - போவோமவாருஞ்சுவாமி .... ... ... ... ... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - தோடி

வீரியசேனையெல்லாம் விடுபட்டுத்திசைதோறும்போய்ப் . ..... *
பாரியவேட்டையாடிப் பலவிதமாயிருப்பார் ..... ....... .. *
சூரியன்மறையுமுன்னே துரிதமாய்வந்துசேர ..... .... ... ...*
பேரிகையடிப்பாரந்தப் பேரொலியுற்றுக்கேளீர் ..... .. ... *

வசனம்

கேளுமந்திரிகளே - நம்முடையசேனைகளெல்லாம் - வேட்டையாடப்பலதிசைகளிலும் - போயிருப்பார்கள் - அவர்களெல்லாம் பாசறையில் - வந்துசேரத்தக்கதாக..பேரிகையடிப்பார்கள் - அதையுற்றுக்கேளுங்கள் - மந்திரிகளே ... .... ... ... .... ... ...*

மந்திரி - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

ஆமிதுமெய்தானெங்க ளண்ணலேயொருவிண்ணப்பம் ....... *
போமிந்தவழிக்குமேற்குப் புறவடதிசையிலேதோ .... .....*
தூமவான்குமுறல்போலத் தொனிக்கின்றததுதானந்தச் ...... *
சேமபேரிகையடிக்குஞ் செழித்திடுமோசையையா ... ... ... *

வசனம்

கேளாயெங்களாண்டவனே - நாம் - போகும்வழிக்கு - மேற்குவடதிசைப்புறத்திலே - ஒருயோஜனைதூரத்தில் - நமதுஜயபேரிகை மேகங்குமுறுதல்போலத் - தொனிக்கின்றதுசுவாமி..... ... ... ....*

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

விந்தைசேர்மானைக்கண்டு விடாமலேபின்றொடர்ந்து .... .... *
சுந்தரமானையெய்பத் தொடர்ந்துபோய்மீண்டுவந்தோந்..... ....*
தந்திரவலிமையுள்ள தரும்படைவீரரோநீர் ..... ..... .... ..... *
அந்தவஸ்தினபுரத்திற் கனைவரும்புறப்படுமோ ... ... ..... ...*

வசனம்

அகோகேளுங்கள் - அகோர - உக்கிர - வீராதிவீரர்களே - ஒருமானையெய்யும்பொருட்டாய் - அந்தமானின் - பின்னாலே - வெகுதூரம் போய் - மீண்டுவந்தோம் - ஆகையால் - நம்முடைய - அஸ்தினபுரத்திற்குப்போவோம்வாரும் - வீரர்களே .. ... ... ..... ..... *

இராஜன் - சொல் - தரு

இம் - ஆகிரி - தாளம் - ரூபகம்

போவோம் வாரீர் அஸ்தினபுரம் போவோம் வாரீர்........... ....*
ஆவேதனை யிளைப்பாறி யாவருங்கூடிப் ....... ...... (போவோம்)
வலிவொடு நடந்தோம் வனத்தினிற் படர்ந்தோம் ... .... ..... *
மெலிவுறவடர்ந்தே மிருகபணை கடந்தோம்......(போவோம்)

வனமது தொலையே வரவிலங் கிலையே ... ..... ..... ... ... ...*
இனிநல்ல நிலையே யெவர்க்கும்பயமிலையே ..........(போவோம்)
வேட்டையிற்குளித்தோ மிகப்பரிமளித்தோம் ..... ... .... *
நாட்டமாய்க்களித்தோ நாட்டுக்கினிதளித்தோம் .. (போவோம்)

பொது-கொச்சகம்

இம்-புன்னாகவராளி

மங்கைசகுந்தலையு மன்னவனுஞ்சேர்ந்தணைந்து .... *
தங்குமுடி துஷ்டியந்தன் றன்னகர்க்குப்போனபின்பு *
பொங்கமிகு மாமுனிபின் போயிருந்த கண்ணுவனார் *
தங்குமெழி லாசிரமந் தன்னிலவர் வந்தாரே .... ... *

பொது-வசனம்

அகோதெப்படியென்றால்- இப்படிக்குச்சகுந்தலையுந்- துஷ்டியந்தமகாராஜனுங்-கூடியணைந்தபின்பு- துஷ்டியந்தமகாராஜன்-அஸ்தினாபுரிக்குப் - போய்விட்டார் - அப்போது - சதானந்தர்-ஆசிரமத்துக்குப்போயிருந்த- கண்ணுவமகாரிஷியானவர்- தன்னுடைய-ஆசிரமம்-வந்தபின்பு-நடக்கிற-விதங்காண்க.......... *

கண்ணுவர்- சொல்-வசனம்

அம்மாசகுந்தலை-அம்மாசகுந்தலை- அப்பாவிவேகசிந்தாமணி-தம்முடைய-அம்மாள்-சகுந்தலை- நான் - அழைக்குமுன்னமே-ஓடிவருவாளே-இன்றைக்கு- அட்டியாயிருப்பதென்ன - அழைத்துக்கொண்டுவாரும்பிள்ளாய்(சீஷர்-வசனம்) அப்படியே- அழைத்துவருகிறேன்சுவாமி - அம்மாசகுந்தலை (ஏனப்பா) ஐயா அழைக்கிறார்-வாருமம்மா (அப்படியேவருகிறேனப்பா) ..... ... ..... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-காம்போதி

பேதைமையென்பதெல்லாம் பெண்களுக்குரியதென்பார்... .. *
ஆதலாற்பிழையொன்றிப்போ தடியவள்செய்தேனையா .... ....*
போதநான்செய்தகுற்றம் பொறுத்திரட்சிக்கவேண்டும் ... ..... *
மாதவமுனியேயுந்தன் மலரடிபோற்றிபோற்றி...... .... .......*

வசனம்

சுவாமிசுவாமி -தேவரீர்- அனுமதியில்லாமல்- அடியவள் - ஒருகுற்றஞ்செய்துவிட்டேன்- அடியவள்-செய்தகுற்றத்தை- தேவரீர் திருவுளத்திற்கொண்டு- பொறுத்து இரட்சிக்கவேண்டுஞ் சுவாமி*

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

கைதவமென்னவெந்தன் கருத்தினினைத்தவண்ணஞ் .... .... ....*
செய்தவப்பயனோ வன்று திருவுளச்செயலோகண்டாய்.... ..... ....*
மைதவிர்த்துலகையாளுமன்னவன்றேவியாதல் ..... ... ...: *
எய்துமுன்பாக்கியத்தை யென்சொல்வேனுருந்திரம்மா ..... *

வசனம்

அம்மாசகுந்தலை - நீயென்னகுற்றஞ்செய்தாய் - சந்தோஷஞ் - சந்தோஷம் - குருநாதா - நானினைத்தபடி - திருவுளச்செயலினாலே - உனக்குத்தகுந்த - புருஷன்வந்துவாய்த்தான் - அன்றெழுதினவன் செயலேயல்லாமல் - உன்பேரில் - ஒருகுற்றமுமில்லை - எழுந்திரும்மா - எழுந்திரு ... ... .. .... ... ... .... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

உலகையாளுமொருமைந்தனைநுவயிற்றிவிருக்கையினால் ......*
வலிமைபடைத்தசந்திரகுலமன்னன்றேவியானதினால் ... .... ...*
நலமிதென்றுமனமகிழ்ந்தேனடந்ததெல்லாமொளியாமற் .... *
றிலதநுதலாயென்றனக்குத்தெரியநன்றாயுரைசெய்வாய் .. .... *

வசனம்

கேளுமம்மாசகுந்தலை - இந்த - உலகமெல்லாம் - ஒருகுடையிலாளப்பட்டவனாகிய - ஒருபிள்ளை - உன்கர்ப்பத்திலிருக்கிறபடியாலும் - நீசந்திரவமிசத்து - துஷ்டியந்தமகாராஜன் - தேவியானதினாலும் - எனக்குமிகவுஞ் சந்தோஷமாச்சுது - இப்பவும் - உனக்கும் - அந்தராஜனுக்கும் - இவ்விடத்தில் - நடந்த - வரலாறெல்லாம் - ஒளியாமல் - எனக்குத் - தெரியச் - சொல்லுமம்மாசகுந்தலை ........ ....*

சகுந்தலை - சொல் - அகவல்

இம் - காம்பூதி

நற்றவமுனியே நடந்தவாறதுகேள் . ..... .......*
கொற்றவனுலகோர் குடையினிலாளும்..... ..... *
மன்னன்றுஷ்டியந்தன் வனவேட்டையாடி ..... *
தன்னுடல்வருந்தித் தாகமேகொண்டே ........ *

உற்றதோர் துணைபின் னொருவரில்லாமல்....... ❋
மற்றவன் றனியே வருத்தமாய்வந்தே........ ....❋
இத்தடாகத்தி லெழிற்புனலுண்டு ...... .... ❋
சற்றவடத்திற் றுணிளைப்பாறிக் .... .... ... ❋
களைதெளிந்தென்னைக் கண்டுமோகித்தே ..... ...❋
இளமயிலேநீ யாரெனக்கேட்க ... .... .... ❋
கண்ணுவரளித்த கன்னிநானென்றே ... ...... ❋
வண்ணமாமெனது வரலாறுசொன்னேன் ... ❋
சொல்லவுமதிக சோபமேகொண்டு ... .... .. ❋
வல்லகாந்தருவ மணமெனைச்செய்தே .... ...❋
உன்னுடைவயிற்றி லுதிக்குமைந்தனுக்குப் ..... ❋
பொன்னணிமகுடம் புனைகுவேனென்று....... ❋
சத்தியஞ்செய்து தழுவியபின்னர் ... .........❋
அஸ்திநாபுரிச்சென் றமைச்சரையனுப்பித் ..... ❋
தையலேயுன்னைத் தருவிப்பேனென்று ..... .. ❋
மெய்யுரைசொல்லி வேந்தனுநடந்தான் ......❋

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - அனந்தபைரவி

கருதுசெந்திருவேயுன்னைக்காந்தர்வவிவாகமாக ..... .. ..... ..... ❋
மருவியதுஷ்ஷியந்தமகராஜன்வாழிவாழி .... ..... .... ..... ... ❋
அருமையுமன்புமபெற்றவரிவைநீவாழியுந்தன் ..... ... ....... ❋
திருவயிற்றினிலுதித்தசிறுவனும்வாழிவாழி ..... ..... ... ... ❋

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

உன்னுடைத்திருவயிற்றிலுண்மையாயுதிக்குமைந்தன் .... .......❋
மன்னியவுலகுக்கெல்லாமன்னர்மன்னவனேயாகி .... .... ... ❋
மின்னுசெங்கோல்செலுத்திமேன்மேலும்வாழ்ந்திருப்பான் .....❋
இன்னமுதனையசொல்லாயிதற்குநீயஞ்சவேண்டாம் ..... ....... ❋

வசனம்

சேளுமம்மா - சகுந்தலை - உன்னுடைய - வயிற்றிற்பிறக்கும்பிள்ளைஇந்த ஐம்பத்தாறுதேசத்தையும்ஆளப்பட்ட இராஜாதிராஜனாகச் செங்கோல்செலுத்தி - வாழ்ந்திருப்பான் - நீயொன்றுக்கும் அஞ்ச வேண்டாம் சுகமாயிருப்பாய் விடுதிக்குள்ளேபோயிருமம்மா ...❋

பொது - கலிப்பா
இம் - புன்னாகவராளி

நொடிப்பளவிற்றீவினையை நூறுமறைமுனிவர் ..... ... .... *
வடுப்படுவேற்கண்ணாளை வாழ்த்தியனுப்பியபின் ..... ..... ... *
கொடிப்பவளவாயாள் குறையறவேகொண்டகர்ப்பம் ... ... ..... *
படிப்படியாய்மாதமொரு பத்துநிறைநதுவே ..... ........ .... *

சகுந்தலை - சொல் - விருத்தம்
இம் - கண்டா

இன்னிசைக்குயிலேகேளாயின்றையதினத்திலேதோ .... ... ... *
என்னடிவயிற்றினுள்ளேயிருந்திருந்துளைக்குதிந்தப் .... ........ *
பன்னுமெல்லிடையிரண்டுபக்கமும்வலித்துக்கால்கள் ..... ... .... *
பின்னுதுசோபதாபம்பெருகுதென்செய்வேனம்மா ... ... ... *

வசனம்

அடிசௌந்தரவல்லி - என்னடி - இன்றைத்தினம் - இருந்திருந்து என்னடிவயிற்றிலுளைக்குது - இரண்டுபக்கமும்வலிக்குது நடந்தால் கால்கள் - பின்னிக்கொண்டுபோகுது - உடம்பு - ஒருவகையாய்வருகுது - நானென்னசெய்வேனடிதோழி ... ..... ... .. ..... .... *

தோழி - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

சந்ததமுலகிற்பெண்சடலைச்சனைப்பெறுவோரல்லாஞ் ... .... *
சிந்தையிலெண்ணுதெண்ணித்தியங்கியேவருந்துவார்கள் ... ...... *
தந்தைகண்ணுவராமையர்தம்மருளிருக்கும்போதில் ... .... ... .. *
உந்தனுக்கொருதீங்கில்லையொன்றுக்குமஞ்சவேண்டாம் ... .... *

வசனம்

கேளுமம்மா - சகுந்தலை - உலகத்திற் றலைச்சன்பிள்ளைப்பெறுகிறவர்கள் - என்னமோ - ஏதோவென்று - எண்ணுதெல்லா மெண்ணிவருந்துவார்கள் - ஆனாலும் - உன்பிதாவாகிய - கண்ணுவமகாரிஷியினுடைய - அநுக்கிரகம் - இருக்கிறபடியினாலே - உனக்கு - யாதொருபயமுமில்லை - நீயொன்றுக்கும் - அஞ்சவேண்டாமம்மா ... ... *

சகுந்தலை - சொல் - தரு
இம் - ஆகிரி - தாளம் - ரூபகம்

என்னகாரணம் அடி அம்மா சவுந்தரா எதுகாரணம் ..... ... ... *
அன்னமேயடி சொன்னமே நானின்னஞ் ... ..... ... ... *

சின்னவள் பிள்ளை யென்றும் பெறாதவள் ... .... ... ... ... *
என்ன மாயமோ என்ன வுபாயமோ .... ..... ... ... .. *
என்னே என்னடி வயிற்று னோவுதே...... ... (என்னகாரணம்)
இப்படி வருமென் றறிந்தே னானல் ... .... .... ..... *
அப்போதே யவ்வரசனைக் கூடேனே ..... .... ... ... . *
தப்பிப் போச்சிதற் கெப்படி சொல்லடி... ..... .. .... .... *
அப்பியேயென் னிடைமிக நோவுதே ...... ....(என்னகாரணம்)
கள்ள மொன்று மறியா திருந் தேனே ..... ..... .... .... .... *
வள்ளல் பேர்சொல்ல எந்தன் வயிற்றினில் .... ..... ... .... *
பிள்ளை வந்தது போதும் போதுமடி ... ..... .... ... *
உள்ளுளே பெண்ணைத் துள்ளி யுதைக்குதே.........(என்னகாரணம்)
சர்க்கரைக்கஞ்சி வார்த்தென்னைத் தேற்றிய ...... ..... ... .... *
துஷ்டியந்த மகராஜனைக் காணேனே .... ... ..... ..... *
இக்கதையை யொருவருடன் சொன்னால் ..... ..... ... .... .... *
வெட்கம் போகுதே பக்கமு நோவுதே .......... (என்னகாரணம்)

தோழி - சொல் - கொச்சகம்

இம் - புன்னாகவராளி

திருத்தமுற்றவேதாந்தசின்மயவிலாசமெல்லாங் ... ... .... *
கருத்திலுற்றமெய்ஞ்ஞானக்கண்ணுவரோ நீர்கேளீர் ... ...... ....*
வருத்தமுற்றுப்பேதைவயிறுளைந்துவாடுகிறாள் .... .. .... ....*
மருத்துவச்சியிப்பொழுதேவருகவருள்செய்வீரோ ..... .. ........ *

வசனம்

சுவாமிசுவாமி - தேவரீர் - வாழ்த்தி - அனுப்பினபின்பு - சகுந்தலையம்மாளுக்கு - சர்ப்பம் - பத்துமாதமு நிறைந்து - இப்போது - பிரசவவேதைப்படுகிறபடியால் - உமக்கு - அறிக்கைச்செய்து - மருத்துவச்சியை - அழைத்துவரச் சொன்னாள்சுவாமி (கண்ணுவர்சொல்வசனம்) அப்பாசிஷ்ஷிபாவிவேகசிந்தாமணி - நம்முடைய - அம்மாள் சகுந்தலை - பிரசவவேதைப்படுகிறாள் - ஆகையால் - இந்தமலையடிவாரச்சிறுகுடிகைச்குப்போய் - ஒருமருத்துவச்சியை - அழைத்துவாருமப்பா (சிஷின்வசனம்) அப்படியே - அழைத்துவருகிறேன் சுவாமி (அடிஆரடி-மருத்துவம்பார்க்கப்பட்டமந்திரசாலி - இராஜாதிராஜனாகிய - துஷ்டியந்தமகாராஜாவினுடைய - பட்டபதி - பிரசவவேதைப்படுகிறாள் - சீக்கிரமா - யோடிவாடியாட்டி.................*

பொது - விருத்தம்
இம் - புன்னாகவராளி

சுழித்திடுகுழிக்கண்களைத்தலைநடுக்கிடத்துவளுமுழந்தாளின் *
விழுச்சிறு துருத்திகௌனத்தனமலைத்திட்டமிகமுதுகினற்கூனி ... *
முழுக்கவுமிளைத்துடல்திரைத்தொருவிடக்கெனமுற்றும்வரண்டே
தான - கிழத்தனமடிக்கடிவிழத்தளமருத்துவக்கிழவியும்வந்தாளே *

சிஷ்ன் - சொல் - வசனம்

அடிபாட்டி (என்னடாபேராண்டி) உன்னுடைய மருத்துவப்பிர தாபத்தைஎனக்குத்தெரியச்சொல்லடிபாட்டி ..... ... ..... ... *

மருத்துவச்சி - சொல் - தரு
இம் - பியாகடை - தாளம் - ஆதி

எனைப் போல் நல்ல மருத்துவச் சமர்த்தி ... .... ... ..... .... *
இவ்வுலகினிவில்லை மெய்யா ஈதென்ன....: ... ... ... .... ..... *
பொய்யா எனது ஐயா சஞ்சீவி யையா ..... .... .... ... ... *
எனைப் பொல் நல்ல மருத்துவச் சமர்த்தி - இவ்வுலகினி வில்லை ... *

மருத்துவச்சி - சொல் - வசனம்

சரணஞ் - சரணஞ் - சுவாமி - கண்ணுவ - மகாமுனியே..... ... ....*

கண்ணுவர் - சொல் - வசனம்

கேளும் - மருத்துவநங்கையே - இப்போது - பிரசவவேதைப்படு கிற - என்குமார்த்தி - இந்த உலகமெல்லாம் - ஒருகுடையிலாளப் பட்ட - துஷியந்த மகாராஜாவினுடைய பெண்சாதி யாக்கும் - நீமகாபயமுண்டாய் - பிள்ளைப்பேறு பார்க்கவேண்டும் - மருத்துவ நங்கையே (அப்படியே பார்க்கிறேன்சுவாமி (மருத்துவச்சிசொல் வசனம்) ஆரடியம்மா - இந்தவளவிலே (இப்படிவா டிபாட்டி) (சகுந்தலைசொல்வசனம்) அடிபாட்டி - என்னடிபேர்த்தி - என்னசெ ய்வேனடிபாட்டி - எனக்கு - இடைவிட்டுப்போகுது - பக்கமெல்லா நோவுது - சரீரமெல்லாமவேர்க்குது - தாகமெடுக்குது - இருந்திரு ந்து - என்னடி வயிற்றிலேமுட்டுது - எனக்கு - மிகவும் - பயமா யிருக்கிறதடிபாட்டி ... ...... ... ..... ... ..... ..... *

சகுந்தலை - சொல் - அகவல்
இம் - கண்டா

மங்கையேநீயென்வார்த்தையைக்கேளாய்... .... .. *
இங்கெனதிடையி லிருந்திருந்தகனே .. ... ... ... *

கத்திரிக்கோலாற் கத்திரிப்பதுபோல் ... ... .. *
உற்றமூச்செடுழம்பு முளைக்குதென்னம்மா... ..... *

மருத்துவச்சி - சொல் - வசனம்

காக்கையேறின - கொம்பல்லவோ - அசைகுது - கைப்பட்டகண்ணல்லவோ - அருகுது - அததற்குக் காலம்வந்தால் - நிற்குமா - பயப்படாதை யம்மாபயப்படாதை ... ..... ... ..... ... *

ஷை அகவல்

வயிறெலாநோவுது வலதுபாரிசத்தில் .. .... ... *
முயலுறப்புரண்டு முட்டுதென்னடியோ ....... .... *

வசனம்

வலதுபாரிசத்தில் - நொந்தால் - ஆண்பிள்ளையைப் பெறுவாய் - இப்பவோ - சற்றுநேரமோவென்றிருக்கச்சே உளைக்காமலுந் துளைக்காமலுமிருக்குமா - சற்றேமனதைப்பிடித்துக்கொண்டிரு.... ...*

ஷை அகவல்

உந்தியினேரா யொருகுடந்திரண்டு... ...... ,.... .*
தைந்துகீழ்வயிறு சரியுதென்னடியோ ... ... ... *
சரிந்திடமெல்லாந் தணல்வெதுப்பாகி ... ... .. *
பெருந்தொடைச்சந்து பிறப்புறமுளைக்குதே ....... *
ஒருவகையதிர்ந்தே யுடம்பெலாமஷியர்த்து .... .. *
வரவரவிளைப்பு வருகுதென்னடியோ .... ... .. *

வசனம்

அடிபோடியம்மா - நீதான் - அதிசயமானபிள்ளைப் பெறத்தலைப்பட்டாய் - கரைபுரண்டவெள்ளங் - கையிலடங்கென்றுலடங்குமா - காற்றுமழையுங் கலந்தடித்தால் - கல்லானலுங்கலங்காமற்போகுமா - பத்தெட்டுப் பெற்றவளெல்லாம் - பயப்படச்சே - தலைச்சன் பிள்ளைத்தாய்க்குத்தைரியமிருக்குமா - பயப்படாதையம்மா பயப்படாதை .... ..... ... .... ... ... ..... ..... *

ஷை அகவல்

நடந்திடிற்கால்கணடுக்குதுட்கார்ந்தால் ..... ... ... *
இடந்தரப்பெருமூச்செறிகுதுநின்றால் ... ..... ... *
பக்கநோவுதெயிப்படிகுனிந்திட்டால் .... .. ... *
அக்கணமார்பையடைக்குதென்செய்வேன்... ..... ...*

என்செய்வேனம்மாவென்செய்வேன்சகியே .... ..... *
என்செய்வேனினிமேலெப்படிப்பொறுப்பேன் ..... *
(வசனம்) அடிபாட்டி எப்படி ... ... ... ..... ... *

சகுந்தலை - சொல் - தரு
இம் - கண்டா - தாளம் - ரூபகம்

என்னசெய்குவேன் அம்மா அம்மா நான் - ஏதுசெய்குவேன் .... *
அன்னியர் போலென்னை யெண்ணாதை யெண்ணாதை......... ..... *
ஆதாரநீபெற்றமாதாவுநீயடி ... ....... .. ..... .... ..... ... *
அன்னமே யீதறியேனென்று முன்னமே ... ..... .... ... .... *
பொன்னே யென்றாற் பொறுத்து முடியாது .... ... ....... *
போது மீது போது நான் .. ..... ..... (என்னசெய்குவேன்)
அம்மா நீவாடி ஐயோ ஐயோ அ ஆ நீ - அந்தப் பக்கம் போடி *
சும்மா என்னைப் பிடித்தே யலட்டாதை ..... .... ... .... ... *
சோக முடுக்குது தாக மெடுக்குது ... ... ..... .... ... *
தோகையே யடி சித்திர ரோகையே ... .... ... ... .... *
அம்மாஈதென்றாற் சகித்திடலாமா இனியாமா ...... ... .. (என்ன)
எங்குநோவுதே இதோ இதோ - இடையிற்றுப் போகுதே .. ... *
உங்களாலே பாதி யுடம்பு முறியுதே .... ... ..... .... ..... *
ஒத்தியிரு சற்றே யொத்தியிரு அ ஆ ... .. .. ..... .. .... *
உளைக்குது தேகங் களைக்குது ... ... ..... ..... ..... ..... *
சங்கட மையையோ பெண்ணைப் பிறக்கவும் .. ... ..... ... *
தருமா இது தருமா நான் ... ... .. (என்னசெய்குவேன்)

சீஷன் - வசனம்

அடிபாட்டி (என்னடா பேராண்டி) என்னபிள்ளை பிறந்த
தடிபாட்டி .... .... ..... .... .... .... ..... ... *

கிழவி - சொல் - விருத்தம் -
இம் - ஆனந்தபைரவி

ஒருவரொப்பில்லாப்பிள்ளையுலகமேழாளும்பிள்ளை ..... .... *
வரமெலாம்படைத்தபிள்ளைவலுமையிற்சிறந்தபிள்ளை ... .... ... *
தருமதேவதைநேர்பிள்ளைச்சகுந்தலையெனும்பெண்பிள்ளை .... *
அருமையாய்ப்பெற்றபிள்ளையாண்பிள்ளையறிந்திடாயே ........ *

சீஷன் - சொல் - வசனம்

சுவாமி சுவாமி - தேவரீர் - ஆசீர்வசனத்தினலே - அடியேனுக்

குத் தம்பிபிறந்தான் - தம்பிபிறந்தான் சுவாமி (சந்தோஷிம்சந்
தோஷிங்-குருநாதா .... .... .... .... .... .... .... *

கிழவி-சொல்-வசனம்

கேளுமம்மாசகுந்தலை-கண்ணுவமகாரிஷியானவர்-என்னுடனே
இந்த-உலகமெல்லாம் - ஒருகுடையிலாளப்பட்ட - துஷ்டியந்த
மகாராஜாவின்-பெண்சாதியென்றுசொன்னார் - அவர்அஸ்தினாபுரத்
திலிருக்க-நீயிங்கேயிருக்கவேண்டிய தென்ன - எனக்குத்தெரியச்
சொல்லுமம்மா .... .... .... .... .... .... .... .... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-கண்டா

மருத்துவமாதேசேளாய் வனத்தினிலென்னைக்கண்டு .... ...... *
சருத்திலிவாகைகொண்டு காந்தர்வவிவாகமாக .... .... .. ... *
அருத்தியோடென்னைச்சேர்ந்தே யமைச்சராற்றருவிப் பேனென்
றிருததியே போனவேந்த னின்னமும்வரக் காணேனே ..... .. *

வசனம்

அம்மாமருத்துவமாதே - இந்த - உலகையெல்லாம் - ஆளப்
பட்ட - துஷ்டியந்தமகாராஜன் வேட்டைக்கு - வந்தஇடத்தில்-
என்னைக்கண்டு - மோகித்து - காந்தர்வவிவாகஞ்செய்து - நாளைத்
தினம்மந்திரியை - அனுப்பி - அஸ்தினாபுரத்துக்கு - வரவழைத்
துக்கொள்ளுகிறேனென்று சொல்லிப்போன மகாராஜன் - இது
வரைக்கும் - வரக்காணேன் - மந்திரியையும் - அனுப்பவில்லை -
என்னுடைய - பாக்கியம் - இப்படிக்கிருக்கின்றது நானென்ன
செய்வேனடியம்மாமருத்துவமாதே .... .... .... .... ....... *

மருததுவச்சி-சொல்-விருத்தம்

இம்-ஆனந்தபைரவி

அன்னையேயுன்வயிற்றிலருமையாய்ப்பிறந்தபிள்ளை ... ..... .. *
உன்னியவுலகமூன்றுமொருகுடைதன்னிலாள்வான் ... ... ..... *
மன்னுநின்மகன்றனக்குமஞ்சனநீரையாட்டி .... .... .... ..... *
பன்னுகண்ணுவர்தஞ்செய்யபாதத்திற்போடுமெம்மா ... .. ... *

வசனம்

அம்மாசகுந்தலை - உன்பிள்ளை - இந்த-உலகமெல்லாம்- ஒருகு
டையிலாளுவான்-சந்தேகமில்லை-இந்தப்பிள்ளைக்கு-மஞ்சன நீரா

ட்டி - உனது - பிதாவாகிய - கண்ணுவமகாரிஷியினுடைய - பாதார விந்தத்திற் - கொண்டுபோய்ப் போடுமம்மா (சகுந்தலைவசனம்) அப்படியேசெய்கிறேனடிபாட்டி .... ..... ... ... .. .... *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

முத்தனேசரணமுனிவனேசரணஞ் ... .... ..... *
சுத்தனேசரணந்துறவியேசரணஞ்.... ....... .... *
சித்தனேசரணஞ்சிறந்தவாசரணம் .... ......... *
அத்தனேசரணமையனேசரணம் ........ ..... .... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

சரணெனப்பணிந்துபோற்றுஞ்சகுந்தலைத்தாயேயுன்றன்........*
திருவயிற்றினிற்பிறநதசேயிவன்பரதனென்போன்... ...... ...*
ஒருமையாயுலகமேழுமொருகுடைநிழலிற்றங்க ... .... ... *
விருதுசெங்கோல்செலுத்திமேன்மேலும்வாழிவாழி .... ........ *

வசனம்

அம்மாசகுந்தலை - நீசுகமாய்ப்பிள்ளையைப் பெற்றுவந்ததே - பாக்கியம் - இந்தப்பிள்ளைக்குப் - பரதனென்று பேர்கொடுத்தேன் உலகத்தையெல்லாம் - ஒருகுடையி லாளுவான் - நீங்களிருவருஞ் சுக மாயிருப்பீர்கள் - பிள்ளையையெடுத்துக்கொண்டுபோய்ச் சீராயவள ர்த்துவாருமம்மா (சகுவச) அப்படியேவளர்த்துவருகிறேன் சுவாமி.

சகுந்தலை - தாலாட்டு - தரு.

இம் - நீலாம்புரி

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ ..... ..... ... ..... ..... *
பொன்னேநவமணியே பூலோகசுந்தரமே . .... .... . *
தன்னேயொருவரில்லாச் சந்ததியேகண்வளரீர் ......... (ஆராரோ)
கண்ணேயென்கண்மணியே கற்கண்டேசர்க்கரையே ... ..... .. *
தண்ணேயெனது தவப்பயனேகண்வளராய் ..... ... (ஆராரோ)
செந்தாமரைமலரோ ஜெகதலத்தையாளவந்த .. ..... .... .... *
சிந்தாமணியேயென் செல்வமேகண்வளரீர் .... .. ... (ஆராரோ)
சீராருநல்லமுதே தித்திக்குஞ்செந்தேனே ... ..... ..... .. .... *
பாராளுஞ்சந்திரகுல பாக்கியமேகண்வளராய் ........ ... (ஆராரோ)

பிள்ளைகலிதீர்த்திந்தப் பேருலகையாளவந்த ..... .. ..... .. *
வள்ளலெனவேசிறந்த வாழ்வேநீகண்வளராய்.... .... .... (ஆராரோ)
உற்றவுலகேழு மொருகுடையில்லாளவந்த ... ... ... ..... ...*
கொற்றவனேயெங்கள் குலக்கொழுந்தேகண்வளராய் ... (ஆரா)
பார்புகழுங்கண்ணுவரைப் பாட்டனெனவேபடைத்தாய் ... ...*
சீர்தழைக்குமன்னர் சிகாமணியேகண்வளராய் ........... (ஆராரோ)

வசனம்

அப்பாவிவேகசிந்தாமணி (சுவாமி) நம்முடையஅம்மாள் - சகுந்தலையை - அழைத்துவாருமப்பா (அப்படியே அழைத்துவருகிறேன் சுவாமி ...... ... ... ... .. .... .... ..... *

சிஷன் - சொல் - கலிப்பா

இம் - புன்னாகவராளி

மன்புவியையாளுமொருமன்னன் துஷ்டியந்தனிட . *
இன்பமனோகரியேயென்றாய்சகுந்தலையே ... ..... *
துன்பமதைநீக்குமொருதூயமுனிகண்ணுவனார் .....*
அன்புடனேயுன்னையிப்போதழைத்துவரச்சொன்னாரே

வசனம்

அம்மாசகுந்தலை - நம்முடைய - ஐயா - அழைத்துவரச்சொன்னார் வாருமம்மா (அப்படியேபோவோம்வாருமப்பா ... ... ..... *

சகுந்தலை - சொல் - கவி.

இம் - மத்தியமாவதி

நாதனேநலஞ்சேர் வேதனேவிமலா ..... *
நீதனேநெறியார் போதனேபோற்றி ..... *

கண்ணுவர் - சொல் - கவி

இம் - மத்தியமாவதி

பொன்னேவாழிபூவையேவாழி .... .... .... *
அன்னேவாழியருளேவாழி ..... ... ... .... *
மின்னேவாழிமெல்லியேவாழி .. ........ *
தன்னேரில்லாச்சகுந்தலைவாழி ..... ... .... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

உதித்தீமாமதியேகேளாயுன் மகன்பரதனுக்குக்... ... ..... .. *
கதித்திடும்வயதைந்தாகிச்சல்விக்குப்பருவமாச்சு ..... ... ..... *

பதித்திடும்வேதசால்கிரம்படிப்பிக்கவேண்டுமேம்மா ...... .. *
துதித்திடுமெவனையிங்கேதுரிதமாயனுப்புவாயே ... ... ... ... *

வசனம்

கேளுமம்மாசகுந்தலை - உனதுகுமாரனாகியபரதனுக்கு - வயதைந்தாச்சுது - இன்றுமுதலவனுக்குச் - சகலகலைக்கியானங்களுங் - கற்பிக்கவேண்டுமாதலால் - அந்தப்பிள்ளையை - என்னிடத்துக்கு - அனுப்பிவையுமம்மா - அப்படியே - அனுப்புகிறேன்சுவாமி .... ........*

பொது - விருத்தம் - இம் - தோடி

தரையொருகுடையிலாளுஞ்சந்திரகுலத்துமன்னன் ... .. .... *
அரசனாந்துஷ்டியந்தனளித்திடுமருமைமைந்தன் .. .. ...... *
கருதுகண்ணுவரிடத்திற்கலையெலாங்கற்கவேண்டிப் .. .... ... *
பரதனற்சபையைமேவிப்பாங்குடன்வருகின்றானே .... .. .....*

பொது - வசனம்

அசோதெப்படியென்றால் - இப்படிக்குச் சகுந்தலைபுத்திரனாகிய பரதமகாராஜனுக்கு - வயதைந்தாகி - சல்விக்குப்பருவமாய் - அறுபத்துநாலுகலைக்கியானங்களும் - உணரும்படியாக - பாட்டனாராகிய கண்ணுவமகாரிஷியினிடத்துக்குவருகிறவிதங்காண்க... ...... ...*

பரதமகாராஜன் - வருகிற - தரு

இம் - பூரிகல்யாணி - தாளம் - ஆதி

மதிகுலபதி பரதன்வந்தானே அதிவிதரணகுண மிகவழகிய (மதி)
அதிபதிசஜபதிநரபதி யனைவருந்துதி புரிமகிபதி. .... (மதிகுல)
கண்ணுவர்முனிகண்களிக்கவே - இவன்வடிவழகினைக் ... .... ... *
கண்டுமன் மதன் கலங்கியொளிக்கவே ... ... ..... ... .. .....*
எண்ணரிய நற்றாயச் சகுந்தலை.... .... ....... ... ... .. ... *
இதயகமலந் தேன்றுளிக்கவே ... ... ... ... ...... ..... *
இறைவன் துஷ்டியந்த ராஜன் கீர்த்தி .... ... .... ..... ... ... *
ஏழுலோகமும் பரிமளிக்கவே ... ... ... (மதிகுலபதிபரதன்)

பரதன் - சொல் - கவி

இம் - ஆனந்தபைரவி

ஐயனேபோற்றி யருமறைபுணர்ந்த.... ... ...........*
மெய்யனேபோற்றி விமலனேபோற்றி......... .... *

இப்பனேபோற்றித் தொடர்வினைக்கடந்த... .... ....*
செய்யனேயுந்தன் திருவடிபோற்றி ... ......... ..... *

கண்ணுவர் - சொல் - விருத்தம் -

இம் - ஆனந்தபைரவி

அப்பனேவாராயென்றனழகுகண்மணியேவாராய் ... ... ... *
ஒப்பிலாதிலங்குஞ்சந்திர வுயர்குலக்கொழுந்தேவாராய்... ..... *
இப்புவியேழுதிவுக் கேகசக்ராசனுகி.... ... .. ... ... .... ...*
மெய்ப்புசெங்கோல்செலுத்திமேன்மேலும்வாழிவாழி..... ... *

வசனம்

சேளாய்பரதமகாராஜனே - உனக்கு - வயதைந்தாச்சுது - நீசகல கலைக்கியானங்களைச் சீக்கிரமாய்ப் படித்துக்கொள்ளுமப்பா (அப்படியே படித்துக்கொள்ளுகிறேன்சுவாமி) கண்ணுவர் - வசனம்) ஹரிநமோஸ்துசித்தம் - நமா - குருவாழ்க குருவேதுணை (அப்பா விவேகசிந்தாமணி)தம்முடைய பாதமகாராஜனுக்கு - வில்வித்தை கற்பிக்க வேண்டுமாதலால் - வில்லையும் - அம்பையும் - எடுத்துக் கொண்டு வாருமப்பா (அப்படியே எடுத்துக்கொண்டுவருகிறேன் சுவாமி - அப்பாபரதமகா ராஜனே (சுவாமி) இந்தவில்லை - இடது கையிற் - பிடித்துக்கொள் - இந்த - அம்பை - வலதுகையிற்பிடித்துக் கொள்மேன்மேலும்வாழிவாழி .... ... .... ..... .. ... .. *

பரதமகாராஜன் - வில்வளைக்குந் - தரு

இம் - செவுளிபந்து - தாளம் - ஆதி

இந்தவில்லெனக் கொரு பொருட்டோ ..... ..... ... .... ... *
தேவர்கிருபை யென்மேலிருக்க ........ ... ... (இந்தவில்லெனக்)
இந்தவில்லைப்பற்றியிதோவளைத்திடுவேன் - மச் ... ... ..... ... *
சேத்திரத்தையுங்கூடத்துளைத்திடுவேன் - மெச்ச .... ...... (இந்த)
மெத்தவுமித்தனையிதெனவரமோ - நான்சற்ற - வித்தைகட்கு ..... *
மகமேருகிரிதானெனக்கென்னவுரமோ - உபதேசமகிமையில்.....*
சத்ராதிகளையெல்லாந்தலைக்கட்டாமலடிப்பேன் ... .... ... .....*
தாவுபுலிசிங்கத்தைச்சமர்த்திலேபிடிப்பேன்.... ...(இந்தவில்)

கண்ணுவர் - சொல் - வசனம்

அப்பாபரதமகாராஜனே - வில்வித்தையி லுன்னை மெச்சினேன் உன்னைப்போல் - சாமார்த்தியமாணபிள்ளையை - நானிதுவரைக்குங் கண்டதில்லை - மேன்மேலும்வாழிவாழி (அப்பாவிவேகசிந்தாமணி)

நம்முடைய- அம்மாள் - சகுந்தலையை - அழைத்துக்கொண்டு - வாரு மப்பா (அப்படியே அழைத்துக்கொண்டு வருகிறேன்சுவாமி- அம் மாசகுந்தலை - ஐயா அழைத்துவரச்சொன்னார்வாருமம்மா (அப்படி யேவருகிறேனப்பா) சரணஞ்சரணமென்னையனே - தேவரீர் - அடி யேனை அழைத்தகாரியம்-அருளிச்செய்யவேண்டுஞ்சுவாமி.... .... *

கண்ணுவர் - சொல் - வசனம்

அம்மா சகுந்தலை - உன்மகனாகிய பரதமகா ராஜனுக்குச் - சகல சலைகளியானங்களுங் - கற்பித்துகொடுத்தேன் - திரிலோகத்திலும் இந்தப்பிள்ளைக்கு நிகர் ஒருவருமில்லை - உனக்கும் - யாதொருகுறை வுமில்லை நீசுகமாயிருப்பாயம்மாசகுந்தலை (சகுவச) தேவரீர்கிருபை அடியேனுக்கிருக்க யாதொரு குறைவுமில்லைசுவாமி.................*

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

தன்னிகரொருவரில்லாச்சகுந்தலைத்தாயேகேளாய் ..... .... ... *
மன்னவனுனையுன்னைவரவழைத்திடுவேனென்று .... .... .... *
சொன்னசொல்லிதுவரைக்குஞ்சுதனுக்குவயதேழாச்சு ...... *
இன்னமும்வரவுங்காணேனென்செய்வேன்சொல்லுமம்மா ... *

வசனம்

கேளுமம்மாசகுந்தலை - உன்னைநாளைத்தினம் - வரவழைத்துக்- கொள்ளுகிறேனென்று - சொல்லிப்போன - துஷ்டியந்தமகா ராஜன் - இந்தப் பிள்ளைக்கு - ஏழுவயதாகியும் - இன்னம்வரா திருப்பது-என்னகாரணமோ - தெரியவில்லை - இதற்கென்ன - செ ய்யலாஞ்சொல்லுமம்மா ... ..... ... .. ... ... ... *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - புன்னாகவராளி

பெற்றமாதாவுநீயே பிதாவுநீகுருவுநீயே .... .. ..... ... .... *
மற்றொருகதிவேறுண்டோ மாதவமுனியேபோற்றிக் ....... ..*
கொற்றவன்மறந்திருத்தல் கொடியவள்செய்தபாவம் ... ..... ....*
பற்றுமுன்சித்தமென்றன்பாக்கியமெப்படியோகண்டாய் ... *

வசனம்

கேளுஞ்சுவாமி- எனக்கு- மாதா - பிதா - குரு- தெய்வமுமாகநீ ரிருக்க - அந்தத்துஷ்டியந்தமகாராஜன் - என்னை மறந்திருப்பதற்கு

நானென்னசெய்வேன் - உம்முடையசித்தம் - என்பாக்கியமெப்படியோ - எனக்கொன்றுந்தெரியாதுசுவாமி ... ... ... ... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

பரதனுன்பிள்ளைதன்னைப்பரிவுடனழைத்துக்கொண்டே ..... ..... *
அரசியறழைக்குமந்தஅஸ்தினபுரிக்குச்சென்று .... ..... ... *
வரைநிகர்புயதுஷ்டியந்தமன்னவனிடத்திற்சேர்ந்து .... .. .... *
திரமுடனீயுமுந்தன்சிறுவனும்வாழ்குவீரே ... ... ..... ... *

வசனம்

கேளுமம்மா - சகுந்தலை - உன்குமாரனாகிய - பரதமகாராஜனை - அழைத்துக்கொண்டு - அஸ்தினபுரத்துக்குப் போய் - நீயும்உன்புருஷனுஞ் - சுகமாகவாழ்ந்து - கொண்டிருங்களம்மா.......... *

சகுந்தலை - சொல் - தரு

இம் - ஆனந்தபைரவி - தாளம் - திரிபுடை

ஐயா எப்படி உன்னைப் பிரிவேன்... ... ... ... .. .... ... *
ஐயா எனையெடுத்தே யருமையுடன் வளர்த்த .......(ஐயாஎப்படி)
கண்ணுக்கு நிமைபோலுங் கன்றுக்குப் பசுப்போலுங் .... ... *
கனிவா யிதுவனாக்கு மளித்தாயே .... .... ... ... ..... *
பெண்ணுக்கு ளெல்லாமொரு பெண்ணரசா யென்னைப் ... ..... *
பிரியமுடன் வளர்த்துக்களித்தாயே .. ... ... ..... .... .... *
என்றுமென்னாலேநீ யென்னபலனைப்பெற்றாய் ... .... ... *
எந்தையேயுன்னாலேநா னெல்லாப்பலனும்பெற்றேன் ...(ஐயா)
ஆகத்துக்குயிர்போலு மவனிக்குமழைபோலும் ... .... ... *
அல்லும்பகலு மென்னைக் காத்தாயே ... ..... ..... .. ..... ... *
தாகத்துறைதெரிந்து தமியேன் மனதின்படி ..... .. ..... ....*
சாற்றுமொரு நிலையிற் சேர்த்தாயே ..... ... ... ... .... ..... *
வகுத்திடுநீர்சொன்ன வசனந்தலைக்கணிந்து .... ... ..... .... *
மாதாபிதாவேயுன்னை மறந்துமனந்துணிந்தே.... .... .....(ஐயா)
மடியிலெனையிருத்தி மார்பினடைப்பயிற்றி ... .. ... ... *
வாகா யெனை வளர்த்த - ஐயாவே ... ... .. .... ... .. *
அடிசிற்கனியுமாராவமுதுமினிதுதவி ... .. .. .... ..... .... *
அருமைமிகவுஞ்செய்த ஐயாவே ..... .. ..... ... ..... *

அடியேனொருபெண்ணாக ஆகங்கொண்டதைத்தொட்டே.... ..*
அரவுமனதுதுணிவாகியுன்றனைவிட்டு......... ......... (ஐயாஎப்படி)

வசனம்

கேளுமம்மா - சகுந்தலை - என்னைவிட்டுப்பிரிதற்கு - விபசனப்படவேண்டாம் - மேலும் - தனுகரணபுவனபோகங்களை - ஆரார் - எந்தஎந்த இடத்திலிருந்து - எதைஎதை - அனுபவிக்கவேண்டுமோ அதனதையனுபவிக்கச்செய்யும் - ஈசுவராக்கினையெள்ளளவுந் தப்பாது நீ உத்தமியானபடியினாலே உனக்கொருகுறைவும்வராது - உன்னுடையபுருஷனைச்சேர்ந்து - சுகமாயிருமம்மா (சரணஞ்சரணம் - அப்படியேபோய்வருகிறேன்சுவாமி) ... .... ..... ..... ..... ..... *

கண்ணுவர் - சொல் - விருத்தம்

இம - ஆனந்தபைரவி

அப்பனேபரதாஎந்தனுசீர்வாதத்தினாலே ..... ..... .... ..... *
இப்புவியேழுதீவுக்கேகசக்கிரேசனாகி ... ... ... ..... ..... *
ஒப்புறவொருகுடைக்கீழுண்மைசெங்கோல்செலுத்தி... .... ....*
மெய்ப்புடன்வாழ்ந்திருந்துமேன்மேலும்வாழிவாழி..... .......*

வசனம்

அப்பாபரதமகாராஜனே - எந்தனுசீர்வசனத்தினாலே - சப்ததீவுக்குஞ் சக்கிரேஸ்பரனாகி - செங்கோல்செலுத்தி வாழ்ந்திருப்பாய்போய்வாரும் - அப்பாசிஷ்யாவிவேகசிந்தாமணி (சுவாமி) நம்முடைய அம்மாள்சகுந்தலையையும் - பரதமகாராஜனையும் - இட்டுக்கொண்டு போய் - துஷ்யந்த மகாராஜாவினிடத்தில் - ஒப்புவித்துவாருமப்பா (அப்படியேஒப்புவித்துவருகிறேன்சுவாமி .... .... .... .... *

சகுந்தலை - சொல் - வசனம்

அப்பாவிவேகசிந்தாமணி (ஏனம்மா) இந்த - அறியாதகுழந்தையையிட்டுக்கொண்டு காடுமலை கானாறுங்கடந்து எப்படிப்போகப்போகிறோம் - துஷ்யந்தமகாராஜனுடைய சத்தியவார்த்தையை - நம்பினவளானபடியினாலே - இப்படியாச்சுது - நானென்னசெய்வேனப்பா ... .... ..... .... ... ..... ..... ..... *

சகுந்தலை சொல் - தரு

இம் - காம்பூதி - தாளம் - ரூபகம்

நம்பிமோசம்போனனே இனி நானென்னசெய்வேனே..... ... *
அம்புவியறியாத ஐயோ இதென்னதொல்லை .... ... ... ... *

அமைச்சராலுனைவரவழைக்கிறேனென்றசொல்லை ...... ...(நம்பி)
கன்னியே சமயத்திற் கலக்கநீ பண்ணாதே ... ... .... .... ..... *
கலியாணம் வேறேநார் செய்வேனென் றெண்ணாதே.... . .... *
இன்னமுமேதேயென்னை யாரென்று நீபார்த்தாய் .... ..... .... *
மின்னேயுனைமறவேனென்றுசொன்னவார்த்தையை........(நம்பி)
உண்மையாயென்சொல்லை யுலகத்திலுட்டுவன் .... .... ... ..... *
உன்மகனுக்கேயென் னுளிர்முடி சூட்டுவன் ..... .. ..... ... *
வண்மையர்கச் சொன்னே னெனக்கேனிந்தப்பழி ........... *
மறவேன்மறவேனென்றுமன்னவன்சொன்னமொழி .....(நம்பி)
பூமிதேவி யாகாசவாணி சாட்சி .... ..... ... ... .... *
பொன்னே யுனக்கிது போதும்வே றென்னசாட்சி .............. *
தாமசமேனினி தழுவிவிது நிமித்தியஞ் .... ... ..... .... .... *
சதிசெய்யே னென்றவர் தலைத்தொட்டுச் சொன்னசத்தியம்(நம்பி)

பரதமகாராஜன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

எந்தனையீன்றதாயேயெனக்குத்தான்பசிக்குதம்மா..... ... .... ....*
எந்தனையீன்றதாயேயென்கால்கனோவுதம்மா ... ..... ... ..... *
எந்தனையீன்றதாயேயெப்படிநடப்பேனம்மா ..... ..... .... *
எந்தனையீன்றதாயேயெனையெடுத்துக்கொள்வாயே..... ...........*

வசனம்

அம்மாஎனக்கானல் - பசிக்கிறது - கால்கள்மிகவுநோவுது - நா னெத்தனைதாரம் - நடப்பேன் - என்னையெடுத்துச் சொள்ளுமம்மா (சிஷின்வசனம்) நானெடுத்துக்கொள்ளுகிறேனம்மா (சகுந்வசன) அப்படியேயெடுத்துக்கொள்ளுமப்பா... ... ..... ..... ... .... *

சகுந்தலை - சொல் - தரு

இம் - எதுகுலகாம்பூதி - தாளம் - ஆதி

என்னசெய்வேனேதுசெய்வேன் என்மகனேகண்மணியே.......*
என்னமாய்ப்பசிக்குதோவென்னிலஞ்சியமே மகனே... .... ....*
என்னபாவஞ்செய்தேனோ நான் இப்படியுனை வதைக்க... .....*
இதயந் துணிந்து தேயென் மகனே ..... .. .... .... ... ..... *
நிர்நிமித்தங்கானகத்தி லென்னை பழுது கேட்டால்....... .... .....*
நினைதத யோதே வருமோ மகனே ..... ...... ..... ..... *

மன்னன்துஷ்டியந்தராஜன் வாழஸ்தினபுரஞ்சேர்ந்தால் .......... ✻
அன்ன மளிப்பேன் வாராய் மகனே .... ..... .... ... .... ✻

சகுந்தலை-சொல்-வசனம்.

அப்பாவிவேகசிந்தாமணி - குழந்தை - பரதமகாராஜன் - அன்னாசாரமில்லாமல் - எத்தனைதூரம் நடந்துவருவான் - அஸ்தினபுரம்இன்னம் - எத்தனைதூரம் இருக்கிறது - சொல்லுமப்பா (சீஷன்வசனம்) அதோதெரிகிறதே - அதுதான் - அஸ்தினபுரமம்மா (சகுந்தலைவசனம்) அப்பாவிவேகசிந்தாமணி - நாமிந்த - வடவிருட்சத்தினிழலில் - சற்றுநேர மிருந்து இளைப்பாறிப் போகலாமப்பா (அப்படிசெய்யலாமம்மா .... ..... .... .... .... ... ✻

பொது-வசனம்

அகோதெப்படியென்றால் - கண்ணுவமகாரிஷியினுடைய - சீஷனாகிய-விவேகசிந்தாமணியுஞ் - சகுந்தலையும் - பரதமகாராஜனும் கண்ணுவர் - ஆசிரமத்தைவிட்டுக் காடுமலைகானாறுங்கடந்து - அஸ்தினபுரத்துக்கருகில்வந்திருக்க - இப்பால் - ஏகசக்ரோஸ்பரனாகிய - துஷ்டியந்தமகாராஜன் - கொலுவிலிருக்கும்போது - மகததேசாதிபதிவருகிறவிதங்காண்க ... .. ... .... .... ... ... ..... ... ✻

மகததேசாதிபதி-வருகிற-தரு

இம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்

மகததேசாதிபன்வந்தான் ஜய மகததேசாதிபன்வந்தான் ..... .... ✻
அகிலத்திலிசைபெற்ற அரசர்க்குநெறியுற்ற .... ..... .... ... ✻
அஷ்டமங்கல யோகவிதரண துஷ்டியந்த மகீபனருகினில் (மகத)
சென்னியிற்பொன்முடிசூட்டி - மார்பிற் ... .... ... .... .... ✻
நிகழுமதாணியைப்பூட்டி - தோளில் ..... .... ... ... .. .... ✻
மன்னும்புஜகீர்த்தியைமாட்டி - நல்ல ... ..... ... ....... ..... ✻
வாகானவுத்தரீயங்கூட்டி ..... .... ... ..... ..... ..... ✻
மின்னும்வச்ரகவசமார்பிற்றுலங்கக்காட்டி ... ..... .... ..... ✻
விளங்கும்வலதுகாலின்வீரமணியையாட்டி .... .... ..... ... ✻
வீரரணமுககூரனழகினின்மாரனெனவெகுதீரமுடனெதிர் .. .. ✻
விகடதடகடகரடமதகஜமனையபுஜபலசுமுகனதிசய.. ... ... ..... ✻
மிகுந்தற்புதநிஜவசனரசகுணன்பொற்பொரு ..... .... ..... ✻
சபைதனிலேயிதோ........ ..... ...(மகததேசாதிபன்வந்தான்)

கட்டியக்காரன் - சொல் - கவி
இம் - ஆனந்தபைரவி

ஏகமர்புலசேழு மாகநல்ல்ரசாளும் ....... ......*
மோகனமுடிவேந்தே மாகதர்பதிவந்தார் .... ..*

மகதர்தேசாதிபதி - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

மன்னவர்மன்னுபோற்றிமனுநெறியுள்ளாய்போற்றித்.... .. .....*
தன்மைக்குணறேபோற்றிச்சசிகுலத்தலைவாபோற்றி.... ..... . *
உன்னியவுலசோரேழுமொருகுடைநிழலிலாளும் ........ .......*
மன்னியதுஷ்டியந்தமகிபதிபோற்றிபோற்றி... ..... ..... ... ....*

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - காம்பூதி

மகததேசத்தோய்கேளாய்வளமிகுமுனதுநாட்டிற்... .. ... .....*
நிசமுநன்னீதியுண்டாதிங்கண்மும்மாரியுண்டா...... .. ..... ..*
மிகவும்வேளாண்மையுண்டாவேதியரொழுக்கமுண்டா.... .. ...*
மகிமைசேர்தேவதாயவகைமிகவுண்டோசொல்லாய்...... .......*

வசனம்

ஓய்மகததேசாதிபதி (சுவாமி) உமதுதேசத்தில் - நீதியுண்டா - மாதமும்மாரியுண்டா - விளைவுவேளாண்மை யுண்டா - பிராமண கிர்த்தியங்கள் - தவறுதுநடக்கின்றதா - தேவதாகைங்கிரியங்கள் - செவ்வையாய்நடக்கின்றதா - சொல்லும் - மகததேசாதிபதி........*

மகததேசாதிபதி - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

பூதலத்தரசேயுன்னிற்பொருந்துநன்னீதியுண்டு ... ... ... ...*
சாதனசாதுசங்கஞ்சத்தியசௌசமேயுண் ... ... .... ... ... *
டாதலாலென்னையாளுமரசனேயென்றேசத்தில் ... .... .. *
ஓதியவெல்லாமுண்டங்கொருகுறைவில்லையையா ... ... .... *

வசனம்

கேளும் - ராஜகெம்பீரா - நல்ல - நீதிமார்க்கம் - சத்ஜன - சங்கமம் சத்தியம - சௌசம் - இவைகளெல்லாம் - தேவரீரிடத்திலுண்டாயிருக்கிறபடியினாலேஇந்த - ஐம்பத்தாறுதேசத்திலுமுண்டு - யாதொருகுறைவுமில்லை - மகாராஜனே ... ... ..... ..... ... ... .... *

கேகயதேசாதிபதி - வருகிற - தரு
இம் - தோடி - தாளம் - ஆதி

கேகயர் பதிவந்தான் ஜய கேகயர் பதிவந்தான் ..... ....... .... *
தோகையர் மதனென மோகன மிகவுள ... ... .... .... ... *
துஷ்டியந்தனுற்றமர்ந்தகொலுவினில்........(கேகயர்பதிவந்தான்)
வெற்புவியெனும்வீரன் மிகு பொற்பினில்குமாரன் ..... ....... *
வெற்பெனும்புயதீரன், நல்ல விற்பனவதிகாரன் ....... ...... *
கற்பகமொத்திடு நற்கொடையிற்பொரு .... ... ... ... .... *
ளிற்றெருளிற்பல னிற்றலைமைக்கொரு ... .. ... .. ..... *
கருதியபிரபலதனகனகவரிசையனவரதமுமுளவதிகநிபுணனென
ஆட்சியுலகிலரசாட்சி செய்வதில்வெகுசூட்சி ..... .. .... ..... *
யுடையநிறைகாட்சியிலகுமொரு...... .... ..... ..... (கேகயர்பதி)

கட்டியக்காரன் - சொல் - கவி
இம் - ஆனந்தபைரவி

தோகையர்மடலெழுதும் வாகுளபுயவீரன் ... *
மாகனகம் மிகுசேர் கேகயர்பதிவந்தார் ..... ..... *

கேகயதேசாதிபதி - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

அணிமுடிவணக்கொப்பானவகல்மேவியவொன்னார்கள் ..... .... *
திணிமுடிவணங்குந்தாயதிங்களங்குலத்தோய்நீண்ட .... ... ... *
பணிமுடிதாங்கும்வையம்பரித்திடுமரசர்கோவே ... ... ... ... *
மணிமுடிதுஷ்டியந்தமகிபதிபோற்றிபோற்றி ..... .... ... *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

கருவமேமிகவுங்கொண்டகருதுகேகயனேகேளாய் ...... ... .. *
திரமிகுமுனதுதேசத்திறைப்பணங்கொடுவந்தாயா .... ... ..... *
நிரையுடன்செலுத்திடாமனீதடைசெய்வதென்ன ... .... ..... *
அருண்மையாமெனதுசெங்கோலாண்மையையறிந்திலாயோ .... *

வசனம்

ஓய்கேகயதேசாதிபதி - உன்தேசத்துப் - பகுதிப்பணமெல்லாங் கொண்டுவந்தையா - அதேது - உன்னுடையதேசத்துப் பணமாத்திரம் - பின்னிட்டுச் செலுத்துங் காரணமென்ன - சக்ரேஸ்பரனுடையஆக்கினைப்படிநடக்கவேண்டாமா - அரண்மனைப்பணத்துக்கு

அட்டியும் - அம்மான்மகனுக்கு முறையுமுண்டோ - என்னுடைய புஜபலபராக்கிரமத்தைக் காண்பிக்கவேண்டுமோ நல்லதாகட்டும் ※

கேகயதேசாதிபதி - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

அறைகழல்வீரர்போற்றுமரசருக்கரசேபோற்றி .... ...... .. ※
திறையெனுஞ் செம்பொனளைச் செலுத்துவன் திருகொன் றில்லை ※
பிறவுமூர்க்குருவியின்மேற்பிர்ம்மாஸ்திரந்தொடுத்தாற்போல .. ※
இறைவனேகோபஞ்செய்தாலெனக்கினிநிழல்வேறுண்டோ .... ※

வசனம்

கேளும் - ராஜபரமேஸ்பரர் - என்னுடையதேசத்துப் பகுதிப் பணமெல்லாம் - நாளைச்சூரியோதயத்திற்கொண்டுவந்து செலுத்திப் போடுகிறேன் - ஊர்க்குருவிமேற் - பிர்ம்மாஸ்திரந் தொடுப்பதுபோல - தேவரீர் - அடியேன்மீதிற் கோபங் கொண்டால் - எனக்குவேறேநிழலுண்டோமகாராஜனே ..... .. ..... .... ...※

கட்டியக்காரன் - சொல் - கட்டியம்

வங்கதேசாதிபதி மகததேசாதிபதி மச்சதேசாதிபதியுங் ... .... ※
கொங்குதேசாதிபதிகுடகுதேசாதிபதி குருதேசாதிபதியும்.... ※
அங்கதேசாதிபதி முதலான ராஜாக்களனைவரும்புடைசூழவே...※
மங்களாகரநித்யமுடிகொண்ட துஷ்டியந்தமகாராஜனே வெகு
[பராக்கு ....※

பொது - வசனம்

அகோதெப்படியென்றால் - ஏகசக்ரேஸ்பரனாகிய - துஷ்டியந்த மகாராஜன் - மந்திரிபிரதானிகளோடு - கொலுவிலிருக்கும்போது கண்ணுவமகாரிஷியினுடைய - ஆசிரமத்திலிருந்து - பாலசன்னுசியாகிய - விவேகசிந்தாமணியும் - சகுந்தலை - அம்மனும் - பிள்ளையாகிய பரதமகாராஜனும் - வந்தஇடத்தில் நடக்கிறவிதங்காண்க (சகுந்தலை சொல்வசனம்) ஆரப்பா - இங்கே ஆசாரவாசற் காவற் காரர்கள் - (கட்டியக்காரன்சொல்வசனம்) ஓகோநீங்களார் - ஆசாரவாசற் காக்கின்ற - நாங்களிருக்க - எங்களுத்தரவில்லாமல்துணிவுடன் - எங்கே போகிறீர்கள் - சொல்லுங்கள் (சகுந்தலைசொல்வசனம்) ஆனால் - உங்கள்ராஜாவுக்கு - நாங்கள்வந்தசமாசாரஞ் சொல்லிவாருமப்பா (என்னசமாசாரஞ்சொல்லுங்கள்) (சகுந்தலைசொல்வசனம்) உங்கள்

ராஜனிடத்திற்குப்போய் -உமது பெண்சாதியும்-பிள்ளையும்--வந்திருக்கிறூர்களென்று-சொல்லிவாருமப்பா... ..... ..... ..... ... *

கட்டியக்காரன் -சொல்-விருத்தம்

இம்-ஆனந்தபைரவி

திருமகள்போலுமோர்தாய்சித்தஜன்போலோர்பிள்ளை .. ... *
இருவரும்வந்தார்நீங்களாமெனவடியேன்கேட்க ... ... ..... ...*
மருவுநானரசன்றேவி மைந்தனேவரசன்மைந்தன் .... ..... .... *
அருமையாய்வந்தோமென்றேயுறிவிக்கச்சொன்னுளையா ... ... *

வசனம்

கேளும்-ராஜபரமேஸ்பரா- நம்முடையஆசாரவாசலிலே - திருமகளைப்போலொருதாயும் - திவ்யசொரூபம்பொருந்திய - மன்மதனைப்போல் - ஒருபிள்ளையும் - ஒருபால சன்னுசியும். - வந்தார்கள் - அவர்களை - அடியேன் - ஆரென்றுகேட்க தேவரீர் - பத்தினியும்பிள்ளையும் - வந்திருக்கிறுமென்று - தெரிவிக்கச் சொன்ஞர்கள் சுவாமி (இராஜன்வசனம்( ஆ- ஆ - ஆ - இதென்ன ஆச்சரியம் - ஓய்மந்திரிகளே - இராஜராஜாக்களே - இதென்ன காரணம் சேட்டீர்களோ - நம்முடைய- ஆசாரவாசலிலே - என்பெண்சாதியென்றும் - பிள்ளையென்றும் - இருவர் - வந்திருக்கிறூர்களாம் - மிகவும் நன்ருயிருககிறது - இராத்திரி - எவளாகிலுங் கனவுகண்டு வந்தாளோ - அல்லது - ஆராகிலுந்தந்திரஞ் சொல்லியனுப்பினுர்களோ - தெரியாது - ஆகிலும் - அவர்களை வரச்சொல்லும் பார்ப்போம்- அநதவிந்தையானசகதையைக்கேட்போம்(அப்படியேவரச்சொல்லுகிறேன்சுவாமி) (கட்டியக்காரன் சொல்வசனம்) ஆரம்மா ஓய்பாலசன்னுசியே-உங்களை- எங்கள்-மகாராஜன் -வரச்சொன்னூர் வாருங்கள்(அப்படியேவருகிறேமப்பா) ... ... ... ... *

பாலசன்னுசி-சொல்-விருத்தம்

இம்-மத்தியமாவதி

மதிகுலபதியேவரகுணநிதியே ..........*
துதிபெறுமுதலேதொடுசமூலரசே ... .... *
பதிமுழுதாளும்பார்த்திபர்வணங்கும் ... *
அதிபதுஷ்டியந்தஅண்ணலேவாழி ........ *

இராஜன்-சொல்- வசனம்

சரணஞ்சரணமையாபாலசன்னுசியே-ஆரடா-ஆசாரவாசற்காவ

வர்ளிகள் - நம்முடையபாலசன்னுசிக்கு ஒருஆசனங்கொண்டுவந்து போடும்பிள்ளாய் அப்படியேபோடுகிறேன்சுவாமி .. ................*

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மன்னனேசரணமகிபனேசரணம் ... ..... .....*
மின்னியநெடுவேல்வேந்தனேசரணம்..... .......*
என்னையாளுடையவிறைவனேசரணம்..... .......*
நன்னயபிரானைநாதனேசரணம் .... .... .....*

பரதமகாராஜன் - சொல் - கவி

இம் - ஆனந்தபைரவி

சந்திரகுலத்தில் வந்தவதரித்த ..... ... .... *
எந்தனையளித்த தந்தையேசரணம்..........*

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - பந்துவராளி

ஆரடிபெண்ணே நீதானெங்கிருப்பதுவேவாவுந்தன் .... ............*
பேரென்னவூர்தானென்னபிறந்திடமெவிடங்கண்டாய் .... ...*
தார்குழலுனக்கிராஜசபைதனில்வேலையென்ன ..... .... ..... ....*
சீர்தருங்கொலுவில்வந்தசெய்தியைச்சொல்வாய்பெண்ணே.......*

வசனம்

ஆ - ஆ - ஆ - மந்திரி - மதிமந்திரி - இவளார் - நீங்களறிவீர்களா - (நாங்களறியோமையா) ஆரடிபெண்ணே - நீயெங்கேயிருப்பது உன்னூர்ப்பெயரென்ன - உன்பெயரென்ன - பிறந்த - இடமெங்கே உனக்கு - இந்தராஜசபையிலே - வரவேண்டியகாரிய மென்ன வந்தகாரியத்தைத்தெரியச்சொல்வாய்பெண்ணே ..... ... ... ...*

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - சாவேரி

சொல்லுமென்றெனக்குரைத்தசுடர்முடிமன்னாகேளாய் .......*
வல்விநானுந்தன்றேவிமைந்தனுன்மைந்தன்கண்டாய். .. ........*
வல்லகண்ணுவர்வளர்த்தமகள்சகுந்தலைநானிந்த ... .... ... .... *
எல்லையிற்சிறுவன்றன்பேரொழின்மிகுபரதன்மன்னே .... ..... .....*

வசனம்

கேளும் - மகாராஜனே - நானுன்பெண்சாதி - இந்தப்பிள்ளை உன் பிள்ளை - மேலும் - அடியாள் - கண்ணுவமகாரிஷியினுடையபுத்திரி

என்பேர் - சகுந்தலை - பிள்ளையின்பேர் - பரதன் - இதுதான்வரலாறு மகாராஜனே ..... . .... ..... ..... ..... ..... ... ... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

இவண்மனையாளாமிங்கேயெதிர்நிற்குமெவளுடையயல் ... .....*
அவனியையாளப்பெற்றவருமையென்மகனுமிந்த .. ..... ... *
உவமையிலுலகின்மன்னருயர்ந்தவருற்றார்பெற்றார் ..... .... *
எவர்களுமறியவந்தவென்மனையாளைப்பாரீர் ... .. ..... ..... *

வசனம்

ஆ - ஆ - ஆ - ராஜராஜாக்களே - இதுஎன்ன - ஆச்சரியம் - இவளென் மனையாட்டியாம் - அதோ நிற்கிறானே - ஆமோ - ஒருவையல் - அவ னென்னரசையாளப்பட்ட - தவபுத்திரனும் - பூலோகத்திலுள்ள - ஐம்பத்தாறுதேசத்து - இராஜாக்களும் - வேதவேதியரும் - உற்றார் பெற்றார் - உறவின்முறையார் - மற்றுமுண்டானபேர்களு மறியும் படிநேற்று - நான் - மனையில்உட்கார்ந்து - மாங்கலியந்தரித்தேனே அந்தமனையாளாமிந்தமனையாள் - இவளை - எல்லோரும்பாருங்கள் இராஜராஜாக்களே - மந்திரிகளே .... ... .... ... ... ... .. *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - மத்தியமாவதி

மனைவியென்றதுவுமெய்யேமகனை நீபெற்றாயானால் ............ *
இனிதுலகாளச்செய்வேனென்றுசொன்னதுவுமெய்யே... ........*
அனைவருமறியவிந்தவவையினிற்பங்கஞ்செய்து ..... ..... ..... *
நனிநகைசெய்வாயென்றுநானறிவேனுமன்று ..... ..... .....*

வசனம்

கேளும் - மகாராஜனே - நீயே - என்பெண்சாதி யென்றுசொன் னதுவுமெய்யே - நீயாண்பிள்ளையைப் பெறுவாயானால் - அந்தப் பிள்ளைக்கு - இந்த - உலகத்தையாளும்படி - பட்டாபிஷேகஞ்செய் கிறேனென்று சொன்னதுவுமெய்யே - இப்போது - இந்தச்சபை யிலே - நீஎன்னைப்பங்கம்படுத்தி நகைசெய்வாயென்று - நானறியா மற்போனேன்மகாராஜனே ..... ..... ..... ..... ..... ..... ..... *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - சாம்பூதி

மதிமந்திரிகேளாய்முன்னேமடிமாங்காய்ப்போட்டதென்று .... *
கதையொருகதையுண்டிந்தக்கதைக்கந்தக்கதையொவ்வாதே ..... *
இதுவுமுன்பழியோசும்மாயிடியிடித்ததுபோலிந்த .... ........ *
மதிநுதன்மாதுசொன்னவல்லடிவழக்கைப்பாராய் ..... ..... ..... *

வசனம்.

கேளும் :- மதிமந்திரி - முற்காலத்திலே - மடிமாங்காய்ப் போட்டதென்று - ஒருகதையல்லவோ - இப்போது - இவள் - சொல்லுகிற கட்டுக்கதைக்கு - அந்தக்கதை - நிகரல்ல - ஆ - ஆ - இது முன்செய்த பழியோ - நிர்நிமித்தமாய் - இடியிடித்தாற் போல இவள்வந்துசொல்லுகிற - வல்லடிவழக்கைப்பார்த்தையா மதிமந்திரி

மந்திரி - சொல் - விருத்தம்
இம் - ஆனந்தபைரவி

தொடுமுழுப்பூசனிக்காய்ச்சோற்றுடேமறைத்தவார்த்தைப் *
படிமிசைகேட்டதுண்டுபார்த்தவரில்லையையா .... ..... .... *
உடனிவளதுவுஞ்செய்வாளுலகையுமறைப்பாளிந்த ..... .... .....*
அடருஞ்வில்லங்கக்காரியாரொன்றுமறிகிலேனே ..... ..... ..... *

வசனம்

கேளும் - மகாராஜனே - முழுப்பூசனிக்காயைச் சோற்றுடே மறைத்தவார்த்தையை - உலகத்தார்சொல்லக்கேட்டதுண்டு - கண்ணாரக் கண்டதில்லை - இதோ நிற்கிறாளே யிவள் - பருத்தமுழுப் பூசனிக்காயை - பிடிசோற்றினுள்ளே - மறைத்துப்போடுவாள் - இந்தபூலோகத்தையுமறைப்பாள் - மகாவில்லங்கக்காரியை யாதொன்றுந்தெரிகிலேன் - மகாராஜனே (இராஜன்வசனம்) சபாசுநன்றாய்ச் சொன்னீர் - இப்படிக்கல்லவோ சொல்லவேண்டுமந்திரி ..... .....*

சகுந்தலை - சொல் - விருத்தம்
இம் - மோகனம்

காரியாகாரியங்கள்கண்டுகாவலருக்கோதுஞ் ..... ..... ..... ..... *
சீரியவறிவினோடுந்தெளிவுளவமைச்சரென்பார் ..... ..... ..... *
நேருமுன்றாளியென்றுணிர்த்தாளியென்றுசொல்லுங் .... ..... *
கூரியவமைச்சருன்போற்குவலயத்தினிற்காணேனே ..... ..... .... *

வசனம்

கேளுமப்பாமந்திரி - உலகத்திலே - புத்தியிலேயுயர்ந்தமந்திரியாரென்றால் - உன்னையேசிறப்பித்துச் சொல்லுகிறார்கள் - அதேதென்றால் - இராஜாக்களிடத்திலிருந்து - காரியாகாரியங்களை பூதபௌஷிய வர்த்தமானந்தெரிந்து சொல்லுகிறது - மந்திரிகளுக்குரிய கடைமை - அதுநிற்கஇராஜா தூளியென்றால் நிர்த்தூளியென்று சொல்லப்பட்ட மந்திரியை உன்னைப்போல் - நானெங்குங் கண்டதில்லையப்பா மந்திரி ..... ... ..... ..... ... .... ..... ..... *

மந்திரி - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

பொன்னினைத்திருடுவார்கள்பொருளினைத்திருடுவார்கள் ..... .... *
மன்னியவுலகிலின்னமற்றொன்றைத்திருடுவார்கள் ..... ..... .... *
தன்னிகரில்லாவேகசக்ரபூபதிகளான .. ..... .... ..... .... .... *
மன்னரைத்திருடவந்தமாதங்கியிவள்தானையா ..... ..... ..... ..... *

வசனம்

கேளும் - ராஜபரமேஸ்பரா - உலகத்திலே பொன்னைத் திருடுவார்கள் - பொருளைத்திருடுவார்கள் - இன்னம் - எதையாகிலுந்திருடுவார்கள் - இந்தஉலகத்தையெல்லாம் - ஒருகுடையிலாளப்பட்ட - இராஜாக்களைத்திருடவந்தமாதங்கி - யிவள்தானமகாராஜனே ..... ..... ..... *

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - கலியாணி

மன்னவனரக்கனுற்றமந்திரிகொடியவேங்கை ..... ..... ..... *
நன்னயபரிவாரங்கள்ஞாளிகளாகுமானால் ..... ..... ..... ..... *
அன்னமன்னவனெவ்வாறோவவ்வாறேபிரஜைகளென்று ..... ..... *
சொன்னசாஸ்திரத்தைநன்றாய்ச்சோதித்தீரமைச்சர்மாரே .......... *

வசனம்

கேளும் - மந்திரிகளே - இராஜாவானவன் - ராட்சதனும் - மந்திரிகள் - வேங்கையாகியமிருகங்களாம் - மற்றைச்சேனைகளெல்லாம் - அவைகளாம்(பரதன்சொல்வசனம்) எவைகளம்மா - வாலைக்குழைத்துக்கொண்டுவருகின்ற - அவைகளா - அம்மா - அப்படிக்கு - நாமேன் சொல்லவேண்டும் - மேலும் - எதாராஜோ - ததாபிரஜாவென்று - சொல்லப்பட்டதர்மசாஸ்திரத்தை நீங்கள் - நன்றாய்ப்பரிசோதித்ததில்லைப்போற்காண்கின்றதப்பாமந்திரிகளே ..... .............. ..... *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - காம்பூதி

அடியென்னையறிவையா நானறிவனோவுன்றனைத்தான் ....... ......*
குடியிருந்தோர் நாள்கூடிக்குலாவி நாம்வாழ்ந்ததெப்போ ......*
முடிபுனைமன்னர்மன்னர்முன்னின்றுமுழுவில்லங்கத் ..... .........*
தொடுவழக்கிடவேகற்றதோகைநீயெவளோகண்டாய் .... ..... . *

வசனம்

அடியென்னை நீயறிவையா - உன்னை நானறிவனோ - ஒருநாளாகி லும் - நாமிருவருங் - கூடிக்கொஞ்சி - குலாவினப்போது - வாழ்ந் தோம் - நன்றுயிருந்தது - பெண்ணாகப்பிறந்தவள் - இந்தராஜசபை யிலேநின்று - தொடுவழக்குப்பேச - எங்கேகற்றுக் கொண்டுவந் தாய்போபோபயித்தியக்காரி ... .. ..... ... ... .... ... ... *

சகுந்தலை - சொல் - விருத்தம்
இம் - காம்பூதி

உன்னை நானறிவேன்காட்டிலொருத்தனாய்த்தனித்துவந்தே ..........*
பன்னுமென்மேன்மோகித்துப்பட்டபாடறிவேன்மேலுந் ......*
தன்னமைவுடனேசெய்தசத்தியமறிவேனிப்போ ... ... ... .... *
தென்னை நீமோசஞ்செய்வாயென்றறியாமற்போனேன்....... .... *

வசனம்

கேளும் - மகாராஜனே - உன்னை நானறிவேன் - ஒருநாள் - என்பிதா வாகிய - கண்ணுவமகாரிஷியினுடைய - ஆசிரமத்தில் - தனித்துவந்து என்னைக்கண்டுமோகித்து - அப்பொழுது - நீபட்டபாடெல்லாமறி வேன் - எனக்குச்செய்துகொடுத்த பிரவசத்தையுமறிவேன் - என்னை மோசஞ்செய்வாயென்று - அறியாமற்போனேன் - மகாராஜனே *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - தோடி

உன்னை நானறிந்ததென்னவொருத்தனாய்வந்ததென்ன ...... ...*
கன்னியேயுன்னைக்காட்டிற்கண்டுமோகித்ததென்ன ... .... ...*
தன்னமைவுடனேசெய்தசத்தியமானதென்ன ..... .... .. .....*
இன்னதென்றறியநன்றாயெனக்கவையுரைசெய்வாயே ... ..... ...*

வசனம்

சபாசடிபெண்ணே - நன்றாய்ச்சொன்னாய் - நன்றாய்ச்சொன்னா ய்உன்னை நானறிந்ததும் - காட்டிலே - தனித்துவந்ததும் உன்னைக்

கண்டுமோகித்ததும்-சத்தியஞ்செய்துகொடுத்ததும்அவையெல்லா ம்-எனக்குநன்றாய்த் தெரியச்சொல்லடி-பெண்ணே .... ....... ※

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-சாவேரி

கண்ணுவரிருப்பிடத்திற்காந்தர்வவிவாகஞ்செய்தே ..... ..... ....※
என்னமாயென்னைக்கூட்டியின்றையத்தினம்போய்நானே .... .... ※
வண்ணமந்திரிகளாலேவரவழைத்திடுவேனென்று..... ..... ... .... ※
மண்ணும்விண்ணறியச்சொன்னவகைமறந்தாயோமன்னா..... .... ※

வசனம்

கேளும்-மகாராஜனே- நீவனவேட்டையாடவந்தபோது-கண் ணுவருடைய-ஆசிரமத்துக்குவந்து-என்னைக்காந்தர்வ விவாகஞ்செ ய்தபின்பு- நாளைத்தினம்- மந்திரிகளால்- உன்னை -வரவழைத்துக் கொள்ளுகிறேனென்று- பூமிதேவி- ஆகாசவாணியறிய -என்தலை யைத்தொட்டுச் சத்தியஞ்செய்ததை- மறந்துபோனையோ- மகா ராஜனே (இராஜன்சொல்வசனம்) ஆரட்டா அடா ஆசாரவாசற் காவற் காரர்கள்(ஐயா)அதோநிற்கிறகுழந்தையாரோ-தெரியவில்லை-இந் தமாரீசக்காரி-மாயப்பொடியைத்தூவி-அழைத்து வந்தாற்போற் காண்கிறது-ஐயையோ-அந்தக்குழந்தை- வெகுநேரமாய் நிற்கிற தைப்பார்த்தால்-எனக்குமிகவும்பரிதாபமாயிருக்கின்றது அப்படி எங்கேயாகிலும்-எட்ட-உட்காரச்சொல்லும்பிள்ளாய்(அப்படியே சொல்லுகிறேன்சுவாமி) அப்பாபரதமகாராஜனே (ஏனப்பா) எங் கள்-ராஜா-உன்னைஅப்படி-எங்கேயாகிலும்- எட்டவுட்காரச்சொ ன்னாரப்பா(பரதன்வசனம்) அப்படியே உங்கள்ராஜாவைப்போய் உட்காரச்சொல்லுமப்பா(இராஜன்சொல்வசனம்) ஏது இந்தத்துஷ் டப்பையல்- மிஞ்சினவனாகஇருக்கிறான் -சத்திரிக்காயிற்- கைகால் முளைத்தாற் போற்காண்கிறதே - நான்- நல்லதுசெய்தால் - பொ ல்லாங்கு விளைகின்றது - பார்த்தீராமந்திரிகளே- சபாசுநன்றாய்ச் சொன்னான் ... ..... .... ..... ... ..... ..... ... ※

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-தோடி

புளுகக்கற்றாலுநன்றாய்ப்பொருந்தவேபுளுகவேண்டும். ..... .. ※
களவுகற்றாலுந்தன்னைக்காக்கவேகற்கவேண்டும் ..... ..... ..... ※

பிள்ளிதுவேபெண்புத்திப்பின்புத்தியாகையாலே ... .... .... *
உளவிதற்கொருத்தர்வேண்டுமொருத்தியாய்வரலொண்ணாதே.. *

வசனம்

கேளும்- ராஜராஜர்க்களே- மந்திரிகளே- புருஷகக்கற்றால் - நன்றாய்ப்பொருந்தப்புருஷகவேண்டுங்- களவுகற்றால்- தன்னைக்காக்கும்படியாய்க்கற்கவேண்டும்- இவளென்ன சமர்த்தாய்ப் பேசினாலும் பெண்புத்திபின்புத்தி - பென்றுசொல்லுவார்களோ- அதற்குச்சரியாய்ச்செய்தாள் - ஆனாலின்னமொருகாரியஞ்செய்யாமல்- மறந்துவிட்டாள்- அதுவுனக்குத்தோற்றுகிறதா- மந்திரி -அல்லது- உனக்குத்தோற்றுகிறதாமதிமந்திரி(எங்களுக்குத்தோற்றவில்லை சுவாமி) ஆனால்-நான் சொல்லுகிறேன்கேளுங்கள்- அதென்னவென்றால் - அவளுந்பெண்சாதிதான் -அந்தப்பிள்ளையும்பிள்ளைதான் - இதுநானறிவேனென்று - ஒருசாட்சியை -யிட்டுக்கொண்டுவராமற்றனித்து வந்தாளே - இதுதான்-இவள்பேரிற்- குற்றம்- மற்றதெல்லாஞ்சரியாயிருக்கின்றது-மந்திரிகளே .... ... ..... ... ........ .... .... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

பொருத்தமாயந்தரத்தைப்பூமியைச்சாட்சிவைத்துக்...... ... .. *
கருத்துடன்சேர்ந்தபின்புகைவிட்டாயிதுபோதாதோ.... ..... *
இருத்துமோர்மனையாளுண்டென்றெதிர்காட்டிவெல்லவேண்டும்
ஒருத்தனீயறியேனென்றதுன்னிலேகுறைவுமன்று ..... ... ...*

வசனம்

கேளும்-மகாராஜனே-ஆகாசவாணி-பூமிதேவியறிய-நீயேயென்பட்டத்துத்தேவியென்றுகாந்தர்வவிவாகஞ்செய்து-இப்போது நானறியேனென்று சாதிக்கிறீரோ - இதுபோதாது - ஆனாலின்னமொரு காரியஞ்செய்ய மறந்துவிட்டீர் - அதென்ன வென்றால்- எனக்குப்பட்டத்துத்தேவி இல்லையா-இதோ- இருக்கிறாளேயென்று-ஒருபெண்சாதியைபழைத்து-அவளைக்கொண்டு-என்னை -அடி நீயெங்கேயிருந்தவள் -உனக்குமென்புருஷனுக்குஞ் சம்பந்தமென்னவென்று -பேசுவிக்கமறந்து போய்விட்டீர் - இதுதான்-உம்மிடத்திலுண்டானகுற்றம்-மகாராஜனே .... .... ... ..... ..... .... *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - காம்போதி

பண்டரிச்சந்திரன்றேவிப்பாலனைக்கொன்றாளென்று ..... .. ..... *
விண்டவோர்பழிபெண்மீதில்விளைவித்தார்புருஷராஞேர் ... ...*
ஒண்டொடிபுருஷர்மீதிலுறுபழிபோடலெங்குங் ..... .... .....*
கண்டதுமிலையேயின்றுக்கண்ணாரக்கண்டோம்பாரீர் ..... .... .... *

வசனம்

சேளுங்கள் - இந்தச்சபையிலுள்ளவர்களே - முற்காலத்திலே - அரிச்சந்திர மகாராஜன் மனைவியான - சந்திரமதியென்பவள் - காட்டிலேசர்ப்பந்தீண்டி - இறந்துபோனதன்பிள்ளையை - மயானத்திற் கொண்டுபோய்ச்சேர்த்து - கொள்ளிக்காசுக்கும் - வெள்ளைத்தாசுக்கும் - காசிபட்டணத்துக்குள்ளே போகிறபோது - வழியிலிறந்துகிடந்தஒருபிள்ளையை - அவளேகொன்றாளென்றல்லவோ - ஆணாப்பிறந்தவர்கள் - பெண்ணாப்பிறந்தவள்பேரில் - பழிபோட்டார்கள் அப்படியிருக்க - இப்போது - ஆணாப்பிறந்தவர்கள்பேரில் - பெரும்பழிபோடப்பட்ட - இந்தப்பெண்பிள்ளையை யெல்லாரும் - பார்த்தீர்களா - சபையிலுள்ளோர்களே .... .... .... ...... .... .... *

சகுந்தலை - சொல் - விருத்தம்
இம் - சாவேரி

துதியரிச்சந்திரனோர்பொய்சொல்லமாட்டாமன்முன்பு .... ....*
பதிமனைமகவிழந்துபறையனுக்கடிமையானான் .... .... .... *
சதியொடுமன்னனும்விண்ணுங்காட்டியென்றலையைத்தொட்டுத் .. *
துதியிற்பொய்சொன்னாருன்போற்றரணியிற்காணேன்மன்னா *

வசனம்

சேளும் - மகாராஜனே - அப்படிக்கல்லவோசொன்னீர் - நான் - சொல்வதைக்கேளும்ஆதியிலே - விசுவாமித்திரமகாரிஷிக்காக அரிச்சந்திரமகாராஜன் ஒருபொய்சொல்லமாட்டாமல்நாடுநகரிழந்தும் பெண்சாதிபிள்ளையைவிற்றும் - தானும்புலையனுக்கடிமைப்பட்டும் பொய்சொல்லாத சத்தியகீர்த்தி யென்றல்லவோ - பேர்பெற்றான் அப்படியிருக்க - பேதைமைக்குணமுள்ள - பெண்பிள்ளையைத்தேற்றி - நீயேயென்பெண்சாதி - நானேயுன்புருஷனென்று சொல்லிப்பின்புமோசஞ்செய்த - இராஜாக்களை - இதுவரைக்கும் - யாருங்கண்ணாரக்கண்டதில்லை (பரதன்சொல்வசனம்) எனம்மா நான்பார்த்தேன்

(ஆர்ப்யா) இதோஇருக்கிறுரோ- சந்திரவமிசத்திலே பிறந்துதெய் வமறியப் -பொய் சொல்லப்பட்ட -மகானுபாவரிவ ரொருவர்தா னம்மா .... ... ... ..... .... ..... .... ,.... .... . *

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

கண்ணுவர்மகளென்றுண்முன்சுழறறியாமலேபின் .... ... ...*
பெண்ணமரம்விசுவாமித்திரனீன்றிம்கணுவென்றுள் .... ........ *
திண்ணமாயினிமேலென்மெள்ளச்சேர்ந்தசம்பந்தங்காட்டி .... ...*
வண்ணமாயெனக்குச்சொந்தமாமனுர்மகளென்யாளே .... .... ...*

வசனம

கெளுங்களிந்தச் சபையிலுள்ளவர்களே- என்னறக்கற்றுஎழுத் துறவாசித்தாலும்-பெண்புத்தி-பின்புத்தியென்று- சொல்லுவார்க ளே-அதற்குத்திஷ்டாந்திரம்-பார்த்தீர்களா-முன்பு- நீயாரென்று கேட்டால்-கண்ணுவமகாரிஷியினுடைய - மகளென்றுசொன்னுள் முழுதிலும்-அப்படியேசொல்லாமல்-பின்பு - விசுவாமித்திரமகா ரிஷியினுடைய-மகளென்றுசொன்னுள்-இதிலேயிரண்டுபேச்சாய் ப்புரட்டிப் பேசினதை - எல்லோரும் கேட்டீர்களே - நல்லது- இனிமேலாகிலும் விடப்போகிருளா - சாட்சாத்துன் - தாயாருட னே- கூடப்பிறந்த நல்லம்மான்மகளென்று-சொல்லிச்சாதிக்கப் போகிருள்-பாருங்கள் சபையிலுள்ளோர்களே ....... ...............*

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-மோகனம்

கதிர்குலத்துதித்தபேர்க்குங்கனத்தில்விளங்குந்தூய..... ..... ....*
மதிகுலத்துதித்தபேர்க்கும்வரன்முறையுள்ளதன்றே .... ... .... *
துதிபெறுவிசுவாமித்திரன்சுடர்குலத்தரசனென்றும் ... ..... .... *
வதியுமுன்மாமனென்றுமழுவைபுமெடுப்பேன்கண்டாய்......... *

வசனம்

கேளும்-மகாராஜனே-சூரியவமிசத்துரா-ஜாக்களுக்குஞ்-சந்திர வம்சத்து- ராஜாக்களுக்கும்- பெண்களைக்கொள்ளல் -கொடுத்தலா கிய-சம்பந்தத்தில்- விசுவாமித்திரமகாரிஷி -சூரியகுலத்தரசனென் றும்-அவரெனக்குத்தந்தையென்றும்-உனக்கவர்மாமனுரென்றும் எனக்குநீகணவனென்றும்-மழுவைபுமெடுப்பேன்மகாராஜனே*

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

தொழுதுவிழ்திரிசங்குக்குச்சொர்க்கத்தையுண்டுபண்ண... .......*
கொழுமையாம்விசுவாமித்திரன்குடிகேடன்மகளீயானால் .........*
மழுவையுமெடுப்பாயிந்தவையகத்தையுங்கவிழ்ப்பாய் .... .........*
வழுவிலாவுள்ளங்கையில்வைகுந்தமுங்காட்டாயா ... ..... .. .....*

வசனம்

ஆ - ஆ - கேளும்பெண்ணே - அந்தவிசுவாமித்திரமகாரிஷி யென்பவர் - ஒருதிரிசங்கு - மகாராஜாவை - இந்தப்பூமிக்கும் - அந்தச்சொர்க்கத்துக்கும் - ஆகவொட்டாமல் - அந்தரத்திலலையவிட்டு - திரிசங்குசொர்க்கமொன்றுண்டாக்கி - அவனைத்தலைகீழாய் நட்டுக்கொண்டிருக்கச்செய்தான் - அவருடையபிள்ளையான - அரிச்சந்திரமகாராஜனுக்குப் பெண்சாதிபிள்ளையுதவாமலும் - பெண்சாதிபிள்ளைக்குத்தானுதவாமலும் - தனித்தனி அலைபதைக்கதாக - அவனைக்கெடுத்துவிட்டான் அப்படிப்பட்ட - விசுவாமித்திரமகாரிஷிக்கு - நீமகளென்று சொல்லுதலால் - மழுவைமாத்திரமாயெடுப்பாய் - இந்தப்பூலோகமுழுமையுங் கவிழ்த்துப்போடுவாய் - இனியுள்ளங்கையிலே - வைகுந்தமுங்காட்டுவாய் நீசும்மாவிடப்போகிறாயாநல்லது ஆ ஆ ஆ*

சகுந்தலை - சொல் - தரு

இம் - எதுகுலகாம்பூதி - தாளம் - ஆதி

ஐயோபாவிதெய்வமே நானிந்த - அவதிப்பட விட்டாயே தெய்வ
வையகத்தை யாளவிந்த மகனை நான் பெற்றெடுத்து ............[மே
வலக்கார மாய்வந் தேனே தெய்வமே .... ..... ..... .... .... *
மணிமுடி சூடவந்த மகனை நான் பெற்றே னென்று .... ..... ....*
மனமகிழ்ந் திருந்தேனே தெய்வமே .... .... ... ..... .... *
மணிமுடி சூடவந்த மகவினுக் கிந்தவிதி .... ..... ..... ..... *
வருமென் றறிகிலனே தெய்வமே .... ..... ..... ..... ..... ..... *
அண்ண னுடனேகூடி யருமையாய் விளையாடி .. ..... .... ..*
அகமகிழ்ந் திருந்தேனே தெய்வமே .... .... ..... ..... .... *
அண்ண னிடத்திலிந் தவதர்ம மிருக்குமென்றே .... ..... ..... *
அறியாமற் போனேனே தெய்வமே ..... ..... ..... ..... ..... *

சகுந்தலை - சொல் - விருத்தம்
இம் - எதுகுலகாம்பூதி

அரிகரியென்னபாவமராசனார்சொன்னவார்த்தை .... .... .... *
எரிகிறநெருப்பின்மீதிலெண்ணெய்விட்டாப்போலாச்சு .... .... *
தரணியையாளுமன்னர்சத்தியமறந்தாராகில் ..... .... .... .... *
அரிவையரென்னசெய்வாரநீதிக்கென்செய்குவேனே .... .... .... *

வசனம்.

அரிகரி - நாராயணா - ஈதென்னபாவம் - இந்தமகாராஜன் - சொல்லுகிறவார்த்தை - எரிகிறநெருப்பிலே - எண்ணெய்விட்டாற்போலாச்சுது - நீதிநெறிவழுவாமல் - உலகையாளப்பட்ட ராஜாக்களே - அசத்தியம்பேசினால் - ஸ்திரீகள் - என்னசெய்யப்போகிறார்கள் - இந்தஅநீதத்திற்குநானென்னசெய்வேன்கர்த்தனே .......... ..... .... ..... .. *

இராஜன் - சொல் - விருத்தம்
இம் - காம்பூதி

பெண்களிலுன்னைப்போலும்பெருநிந்தைச்சொன்னபேனா .... *
கண்களிற்கண்டதில்லைக்கதையிலுங்கேட்டதில்லை ... ..... ..... ... *
மண்களிற்பிறந்தாருன்போல்வன்னெஞ்சம்படைத்தாரில்லை .... *
எண்களிமன்னர்மீதில்விடிநிந்தைபோடலாமோ ... ..... .... .... *

வசனம்

ஆ - ஆ - இந்தப்பூலோகத்தில் - உன்னைப்போல் நிந்தைச்சொல்லப்பட்ட பெண்களைக் கண்களிலேயுங் கண்டதில்லை - கதைகளிலேயுங்கேட்டதில்லை - ஆயினு நீ - வலிய நெஞ்சுபடைத்துச் - சற்றுமெண்ணாமல் - இராஜாக்கள் - பேரிற்றூறு நீநிந்தையைச் சொல்லுகிறது பளாபளாதன்றாயிருக்கின்றது - போபோ - பயித்தியக்காரி ... .... *

சகுந்தலை - புலம்பல் - தரு
இம் - கண்டா - தாளம் - ஆதி

கண்ணுவ ரிருப்பிடத்தி லெண்ணமுட னன்றுவந்தீர் மன்னவனே என்னைக் - கண்டவுடனேவிரகங்கொண்டுபிர்மமையாகிநின்றீர் மன்னவனே - கண்ணுவரறியாதென்னைக் கலியாணஞ்செய்தபின்புமன்னவனே - இப்போ - காதலுடனேயணைந்தா னீதியதேயென்றுசொன்னீர்மன்னவனே - கண்ணுவர்வருமளவுமென்னுயிர் தரியாதென்றீர்மன்னவனே - நாம் - கந்தருவமணமாக விந்தையாய்க் கூடுவோமென்றீர்மன்னவனே - பெண்ணரசாள் கலியாணப் பெண்ணினல்

லாருண்டோவென்றால்மன்னவனே - சேளாய்ப் - பெண்ணேயுனை யல்லால் வேறு பெண்ணைக் கொள்வதில்லையென்றீர் மன்னவனே - பண்ணுமெனை யல்லால்வேறு பெண்ணைத் தேடுவீரென்றால் மன்னவனே - பெண்ணே - பண்ணுவதென்னடி நீயென்பட்டத்துத்தேவியென்றீர் மன்னவனே - உனையணைந்தா லென்மகனுக் கென்ன வழி யென்றுகேட்க மன்னவனே - அடி - உன்மகனுக்கே யெனது பொன்முடிசூட்டுவேனென்றீர்மன்னவனே - மயறலைக்கேறிமிகமயக்கங்கொண்ட வேளையின்மன்னவனே - நான் - வசப்படவேண்டுமென்று பசப்புவார்த்தையியன்றீர்மன்னவனே - வையகத்தையாளுஞ் சந்திரவம்சபதிநானென்றீர்மன்னவனே - வேத - வாய்மைதப்பினுலுமெந்தன்வாக்குத்தப்பாதென்றுசொன்னீர்மனனவனே - செப்பமுடனே சத்தியஞ் செய்புமென்று சொன்னவின் மன்னவனே - பூமிதேவியாகா யத்தைக்கூவியே சாட்சியிட்டீர்மன்னவனே - தப்பிதம் வராதுன்றனைச் சதிசெய்யே னென்றுசொன்னீர்மன்னவனே - அன்று - சட்டமுடனென்றலையைத் தொட்டுச் சத்தியஞ்செய்தீர் [மன்னவனே *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

மந்திரிமாரேயிந்தமாரீசக்காரிகற்ற ... .... ..... ..... .... ..... *
தந்திரவிந்திரஜாலச்சமர்த்திற்கேமெச்சவேண்டும் ..... ..... .... *
விந்தையிதெவர்கேட்டாலுமெய்யென்றேநினைப்பாரிந்த .... .... *
நிந்தைச்சொல்வலுதிருட்டுநீலியைநாமென்செய்வோம் .... .... *

வசனம்

கேளுங்கள் - ராஜராஜாக்களே - மந்திரிகளே - இந்தமாரீசக்காரிகற்றிருக்கிற - இந்திரஜாலம் - மகேந்திரஜாலம் - ஜகஜாலம் - செப்பிடுவித்தை - இவைகளுக்கே - மெச்சவேண்டும் - ஆனாலும் - இவள் சொல்லுகிற - கட்டுக்கதையைக் - கேட்போர்க்கெல்லாம் - மெய்யென்றே - தோற்றப்படும் - இப்படிப்பட்ட - நிந்தையைச் சொல்லுகிறவளை - நாமென்ன செய்யலாம்மந்திரிகளே - ராஜராஜாக்களே.

மகததேசாதிபதி - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

பூதலத்தரசேநீயும்பொய்யொருக்காலுஞ்சொல்லாய் .......... .... *
வேதம்பொய்த்தாலுமிந்தமெல்லிபொய்சொல்லாளையா ... ..... *

எதிலாமுடவனுக்குமெருதுக்குங்கோபமான .... ..... ..... .... *
நீதியீதானாலிந்தநிந்தையார்சொள்வாரையா ..... ..... ..... ..... *

வசனம்

கேளும் - ராஜபரமேஸ்பரா - தேவரீர் - ஒருக்காலும் - பொய்சொல்லாச்சத்தியகீர்த்தி - இந்தஅம்மாளுடைய - முகவிலாசத்தையும் - வசனத்தையும் - பார்த்தால்வேதம் - பொய்த்துப்போனாலும் - ஒருகாலத்திலும் - பொய்சொல்லாதவள்போற்றோற்றுகின்றது - நாம் - யாருக்கென்றுசொல்லலாம் - ஏறச்சொன்னாலெருதுக்குக்கோபம் - இறங்கச்சொன்னால் - முடவனுக்குக்கோபம் - இதையார் நடுவுநிலைமைபாகச்சொல்லப் பட்டவர்கள் - மகாராஜனே (இராஜன்சொல்வசனம்) ஆ - ஆ - இப்படியல்லவோ சொல்லவேண்டும் - ஒய்மகததேசாதிபதி - இந்தச்சபையிலேவந்து நிந்தையைச் சொல்லுகிறநீலியாகிய இவளை - என்னசெய்யலாமென்று நான்கேட்டால்இது - சத்தியம் இது அசத்தியமென்று - கண்டித்துச் சொல்லவேண்டும் - அதைவிட்டு - நீயும்பொய்சொல்லாய் - அவளும் - பொய்சொல்லாளென்றுசொன்னால்என்னிடத்திற்பொய்மையுண்டென்றல்லவோகாண்கின்றது - ஈமுண்டனு பட்டினக்கண்டமாவா - உனக்கேனேபட்டுதென்று - சொல்லுவார்களே அதுபோல - கொஞ்சம் - ஒட்டவைக்கிறாய் - ஏதுகாணும் - நீயேநடுக்கண்டதைச்சொல்லிப் போட்டாய் - சபாசு இவளையென்னசெய்யலாமோசொல்லுங்காணும்ஓய் - கேகயதேசாதிபதி

கேகையதேசாதிபதி சொல் - விருத்தம்

இம்: ஆனந்தபைரவி

உந்தனைப்பார்த்துப்பிள்ளையுருவத்தைப்பார்த்தாலிந்த..... ........*
மைந்தனுன்மைந்தனென்றேவையசமுழுதுஞ்சொல்லும்.... .... *
வந்திடுமாதைநீயென்மனைவியென்றேசொன்னாலும்.............*
இந்தநல்லுலகிலுள்ளோரியாவருமிதையொவ்வார் .... ..... .....*

வசனம்

கேளும்ராஜபரமேஸ்பரா முப்பத்திரண்டிலக்கணங்களும்வாய்ந்த உமதுருவத்தையும்பார்த்து இதோவந்திருக்கிறபிள்ளையினதுஉருவத்தையும்பார்த்தால் - தேவரீருடைய மைந்தனென்றேஉலகத்தார் சொல்லுவார்கள்மேலும்இந்தக்கற்புள்ளமாதைநீயென்மனைவியென்றேசொன்னாலும்யாவரும் - ஒப்புக்கொள்ளார்கள் மகாராஜனே.

முதல்-மந்திரி-சொல்-விருத்தம்
இம்- ஆனர்த்பைரவி
தோகைசூர்ப்பநகைமுன்னாடிலங்கிராகவனைக்கண்டு ..... ..... ...*
மோகங்கொண்டதற்சேசாதுமூக்கும்போய் வசையுங்கொண்டாள்
ஆகவுன்றனையுமுன்றனரசையுஞ்சமர்த்தினாலே .... ..... .... .. *
ஏசமாய்க்கொள்ளவந்தவிவளையென்செய்வதையா ......... ..... ...*
வசனம்
ஆ-ஆ-சுவாமி- முற்காலத்திலே- சூர்ப்பநகையானவள் - தசரத
ராமனைக்கண்டுமோகித்து- என்னை அணையவேண்டுமென்று - சொ
ன்னமாத்திரத்திலல்லவா-மூக்குங்காதும்-போய்ப்பங்சப்பட்டது
மன்றிநிந்தைக்கிடமானாள்-அப்படியிருக்க-நீயேயென்புருஷன்-
நானேயுன்பெண்சாதி-நீயாளப்பட்ட அரசாட்சி - என்பிள்ளைக்கே
காணியாட்சியென்று-உடைவாரம்புரட்டவந்த-இந்த-உத்தமியை
என்னசெய்யலாஞ்சுவாமி ... ... .... ... ... .... ... ..... *
உ-வது-மந்திரி-சொல்-விருத்தம்
இம்-ஆனந்தபைரவி
மழுவையுமெடுப்பார்பாம்பின்வாயிற்கையிடுவார்மூளும் .... ...*
அழலினிற்குளிப்பாராணையாக்கினைக்கஞ்சார்பொல்லாப் ...... ....*
பழியென்று நாணாரிந்தப்பாரினிற்பெண்களானோர் ..... ... ... *
எழுமனத்தவரைவெல்லவெவராலுமுடியாதையா ..... ..... ... *
வசனம்
சேளும்-ராஜபரமேஸ்பரா-இந்தஉலகத்திலுள்ள- பெண்களான
வர்கள்-மழுவையுமெடுப்பார்கள் -பாம்பின்வாயிலுங் கையிடுவார்
கள் - எரிகிறதணலிலுங்குளிப்பார்கள் - ஆக்கினைக்குமஞ்சார்கள்-
பழிக்கும்நாணார்கள்-அவர்களை-வெல்லுதற்கு-எவராலு முடியாது
மகாராஜனே(இராஜன்சொல்வசனம்) சபாசு-மந்திரி- நீசொன்ன
து-மெய்தான்-மெய்தான்- நன்றாய்ச்சொன்னீர்- நன்றாய்ச்சொ
ன்னீர்-இப்படியல்லவோசொல்லவேண்டும்-பளா-பளா .... ....*
சகுந்தலை-சொல்-தரு
இம்-புன்னாகவராளி-தாளம்-ரூபகம்
ஐயையோ ஈதன்யாயம் எனக்கார் சொல்லுவார் ..... ... .... *
உமக்கே சொல்லுவார் ஞாயம் ஐயையோ ஈதநியாயம் .... ..... *
அறியாதவென்னையேமாற்றி- கலியாணமென்றுபொம்மலேற்றி*

உன்மேலாசை கொள்ள மிகத்தேற்றி ... ... ... ...... ... *
கழுத்தறுத்தா யிதல்லவோ நேத்தி ..... ..... ... ... ... ..... *
குறியாமலென்சொல்லைச் சொள்ளாமலேதேதோ ...... ..... ....*
கூறுகிறீர் மடை மாறுகிறீர் போம்போம் ........ ...(ஐயையோ)

இராஜன்-சொல்-தரு

ஷெ-இராகம்-தாளம்

போபோயபித்தியக்காரி வாய்ப்பூசவந்தாய் மக ..... ... ..... *
ராஜன்சபைப்பேறிப் போபோபயித்தியக்காரி .... ... .. ....*
ஆரடிநீபடுநீலி யுன்னை யார்தொட்டுக் கட்டினார்தாலி-சற்றும்..*
அஞ்சாமற்செய்கிறாய்சேலி-நான்-அறிகிலனே யிந்தச்சோலி...*
பேரான மன்னர் சபைதனிலே நின்று ..... ... ..... ..... ... *
பேதிக்கிறாய்முற்றுஞ்சாதிக்கிறாய்ச் சீசீ .. ... .. ...(போபோ)

சகுந்தலை-சொல்-தரு

மண்ணின்மேனின்றுபெண்ணோரஞ் சொல்லி .... .. ..... ... *
வாழ்ந்தவருண்டோ விஸ்தாரம்-மன்னர் ....... ... ..... .... *
வாழ்க்கையெல்லா நீதிசாரம்-அதை-மறந்தாலுண்டோபரிகாரஞ்*
சொன்னமொழியெல்லா மில்லையென்றிப்போது . ... .... *
சொல்லுகிறீர்வாயால்வெல்லுகிறீர் போம்போம்.... (ஐயையோ)

இராஜன்-சொல்-தரு

விஞரவிணி நீபோடி புவி வேந்தன்மேல் வில்லங்கந்தேடி-தலை*
வெட்டவந்தாய்வாயைமூடி-உன்சொல்-வெல்லாதடி குடிகேடி*
ஆணையபேர்முன்னே பெண்ணுடைகங்கட்டி .... ..... ..... ..... *
ஆடுகிறாய் பழிபோடுகிறாய்ச் சீசீ .... .... ..... ..... (போபோ)

சகுந்தலை-சொல்-தரு

பொய்வந்துமெய்யைவெல்லாது-மன்னர் ... ..... .... .. .... *
பொய்சொன்னாற்செங்கோற்செல்லாது-அவர் .. ... ... .... *
பூமியும்வாழ்வு நில்லாது-விட்டுப்-போமோபெண் பாவம்பொல்
செய்வனத்தினிலென்னுடனீர்சொன்ன .. .... ... .... [லாது
சேதியெங்கேமனுநீதியெங்கேபோம்போம் .......(ஐயையோ)

இராஜன்-சொல்-தரு

எங்கேகற்றாயிந்தவித்தை-ஒகோ ... .... ... .... ...... *
என்சொல்வேனுன்றன் சமர்த்தை-பெண்க .... ... ..... ..... *
ளார்சொன்னார்முன்பினிஜத்தை-நீ-எடுத்துச்சவிழ்ப்பாய்ஜகத்தை*

பங்கம்வருமென்றுசற்றுகிலுமெண்ணிப் ..... ..... ... ... .... *
பாராமல்விசுருய்த்தோராமற்பேசுருய்.... ............ (போபோ)

சகுந்தலை - சொல் - தரு

வனத்திற் றனித்துநீவந்தாய் - என்மேல் ..... .. .... ... ..... *
மையல்கொண்டுசிந்தைநொந்தாய் - நல்ல .... ... ... ..... [தாய்
வாய்மைப்பாவசந்தந்தாய் - இன்று - வல்லாண்மை காட்டத்துணிந்
சுனத்தவுன்வார்த்தையை நம்பினேனட்டாற்றிற் ..... .... ... *
கையைவிட்டீர் சொன்ன மெய்யை விட்டீர் போம்போம் (ஐயை)

இராஜன் - சொல் - தரு

வனவேட்டைதான்வந்தபோது - உன்னை ... .. ..... ..... .... *
வழியிலே நான்கண்ட தேது - மட ..... ... .... ... ...... ... *
மாதனைநம்பவொண்ணாது - உந்தன்வார்த்தை யெல்லாம் வெறுஞ்
சுனமானவுன்னுடைத்திராணியெல்லாமிங்கே .... .. ..... [சூது
காட்டுகிருய்சும்மாநீட்டுகிருய்ச் சீசீ ..... ..... .... ..... (போபோ)

சகுந்தலை - சொல் - தரு

சதிபுருஷிர்க்கிந்தவாதா - இந்தத்தரணியெல்லாம்பழிக்காதா - மனஞ்
சற்றுகிலுமிரங்காதா - இது - தர்மமோவென்பிராணநாதா .. .... .. *
புதுமோகந்தன்னிலேயே திக்தவெல்லாம்போய்ப் ..... ... .... *
போர்செய்கிறீரென்னைத்தூர் செய்கிறீர்போம்போம்(ஐயையோ)

இராஜன் - சொல் - தரு

ஆனாலுநீயேசமர்த்தி - உனக் - கார்சொன்னதோவிந்தப்புத்தி - உற *
வாடவந்தாய்மெல்லஎற்றி - பெண்க - ளானவர்க்கேவரும் வெற்றி *
தானாகவேவந்திங்கில்லாதும்பொல்லாதுஞ் ............ ..... ..... *
சண்டிக்கிருய் மெய்போற் கண்டிக்கிருய்ச் சீசீ.... ..... (போபோ)

சகுந்தலை - சொல் - தரு

வலியவென்மேலாசைப்பட்டாய் - நீயென் ..... ..... .... .... *
மனையாளென்றேதலைத் தொட்டாய் - பூமி ..... ..... ..... ..... *
வானத்தையுஞ்சாட்சியிட்டாய் - அந்த - வார்த்தையெங்கேவிட்டுவிட்
மெலியோர்க்கிரங்காமலுன்சபையோர்க்கெல்லாம் .... .....[டாய் *
மெய்க்கச்சொன்னீர் தூரநிற்கச்சொன்னீர்போம்போம்...(ஐயை)

இராஜன் - சொல் - தரு

அபுரூபமான பெண்டாட்டி - உன்னை ..... ..... ..... ..... ..... *
யெல்லாமற்கிடைடாதோநாட்டில் - முன்பின் ..... ..... ..... ..... *

அறிந்தாப்போலொருசொல்லைக்காட்டி - கொட்டி ..... ..... ..... *
யாக்கிரு யேசையைநீட்டி - விவகாரமேதுவழக்கேதுநீயேது..... *
வெற்றிக்கொண்டாய்சண்டைப்பத்திக்கொண்டாய்ச்சீசீ (போபோ

சகுந்தலை - சொல் - தரு

ஏறவிட்டேணியைத்தாழ்த்தி - மெல்ல ..... ..... ..... ..... ..... *
இறக்கிவிட்டாய்முன்சொன்மாற்றி - இப்போ ..... ..... ..... ..... *
தெளிதஞ்செய்வதோநேத்தி - ஈ - தேற்குமோமன்னர்க்குக்கீர்த்தி *
நிறையாசவுன்சொல்லை நம்பினேனைத்தெருவில் ..... ..... ..... *
நிற்கவிட்டீருந்தன்வெட்கங்கெட்டீர்போம்போம்...(ஐயையோ)

இராஜன் - சொல் - தரு

எப்போதுநீயென்னைக்கண்டாய் - சும்மா ... ..... ..... ..... *
ன்ருசையேனடிகொண்டாய் - மான ..... ..... ..... ..... [டாய்
ஈனமெல்லா முற்றும் விண்டாய் - வெட்டி - எதிருவன் பாரிருதுன்
தப்பானகாரியமென்றெண்ணிப்பாராமற் ... ..... ..... ..... *
சாதிக்கிறாய்மெய்போல்வாதிக்கிருய்ச்சீசீ..... ........ .... (போடோ)

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - ரூகாரி

பொற்கொடிநீயேயென்றுபொருந்தவேயிதவுசொல்லிச் ... ..... *
சர்க்கரைக்கஞ்சிவார்த்துத்தழுவினகாலம்போச்சு..... ... ..... ... *
தொக்கவோடங்கடந்தாலோடக்காரனுக்கோர்சொட்டென் ..... *
றிக்கதையெனக்கேசெய்தாயிதுவோவுன்னீதிமன்னு..... .. .. *

வசனம்

சேளும்மகாராஜனே - நீயேயென்பெண்சாதிநானேயுன் - புருஷ னென்று - இதுவுவார்த்தைகளைச்சொல்லிச் - சர்க்கரைக்கஞ்சிவார்த்துத் - தழுவினகாலம்போய்விட்டது - அதுஎப்படியென்ருல் - ஓடங் கடந்தால் - ஓடக்காரனுக்கு - ஒருசொட்டென்று - சொல்லுவார்களோ அந்தக்கதைஎனக்கேகிடைக்கச்செய்தாய் - இதுதானு - உன்னுடைய மனுநீதிமகாராஜனே..... ..... ..... ... .. ..... ..... ... ..... ... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

பழிமொழியெழுதிக்கற்றுப்படிக்கின்றபசப்புக்கள்ளி ..... ..... *
மொழியுமுன்சமர்த்தாலிங்கேமோசம்போவார்களில்லைப்..... ..... *

பிழையிலாவேடம்பூண்டென்பிள்ளையென்றழைத்துவந்தாய்..... ❈
இழிவுறுபயலுநீயுமிவிடம்விட்டேகுவீரோ... ... ... ... ..... ..... ❈

வசனம்

ஆ - ஆ - சபாசடிபெண்ணே - நிந்தைவார்த்தைகளை - யெல்லாம்எழுதிக் கற்றுக்கொண்டு - இந்தச்சபையிலே - துணிந்துப் பேசவந்தா - யென்னடிபசப்புக்கள்ளி - உனது சமர்த்தினாலே - இங்கேமோசம் - போவார்களொருவருமில்லை - என்பிள்ளையென்று - மாயவேடம்பூண்டு - அழைத்துவந்தாயே - அந்தப்பிள்ளையை - இட்டுக்கொண்டு - இந்தச்சபையைவிட்டு அப்புறம்போடிபயித்தியக்காரி ❈

சகுந்தலை - சொல் - விருத்தம்

இம் - தோடி

அள்ளளித்தசரதன்முன்பறுபதாயிரநல்லாண்டு ..... ..... ..... ..... ❈
பிள்ளையில்லாமலேங்கிப்பெருமகமுடித்துப்பெற்றான் ..... .... ❈
எள்ளறுகுலம்விளங்கவெய்தியமைந்தன்றன்னைத்.... ..... ......... ❈
தள்ளிவிட்டவரையிந்தத்தரணியிற்காணேன்மன்னா ..... .... ..... ❈

வசனம்

கேளும் - மகாராஜனே - ஆதியிலேயொருதசரதமகாராஜா வானவர் தமக்குப் பிள்ளையில்லையென்று - அறுபதினாயிரம் வருஷம்வருந்தி பின்புவேள்வியைச்செய்து - பிள்ளைகளைப்பெற்றார் - அப்படியிருக்க - தான்முன்செய்த தபோபலத்தினாலே - பிறந்தபிள்ளையைத் - தள்ளிவிடப்பட்டபேர்களை - இந்தவுலகத்தில் - உன்னையல்லாமல் - நான் வேறொருவரையுங் கண்டதில்லை - மகாராஜனே (இராஜன் வசனம்) ஆ - ஆ - மந்திரி(சுவாமி)மதிமந்திரி(ஐயா)இவளிந்தகுதியாகக் கொண்டுவந்தகட்டுக்கதையைப் பார்த்தீர்களா - அப்பா - மிகவுஞ்சமர்த்தியாயிருக்கிறாள்(ஆம்) (சுவாமி) ... ... ... ... ..... .... ... ❈

சகுந்தலை - சொல் - தரு

இம் - புன்னாகவராளி - தாளம் - ரூபகம்

வள்ளலின்பேர்சொல்லப் பிள்ளைவேண்டுமென்று ..... .... ........ ❈
மாதவத்தைப்புரிவார்கள் இந்தப் பூதலத்திற்றிரிவார்கள் - பெற்றப்
பிள்ளைவேண்டாமென்று தள்ளிவிடுவது ..... ....... .... .... ❈
பேருலகிலுண்டோ மன்னவா ..... .... ..... .... ..... ..... ❈

இராஜன் - சொல் - தரு - ஷ - இராகந்தாளம்

பிள்ளைவேண்டுமென்பதுள்ளதேயானாலும் ..... .... ..... ..... ❈

பிள்ளைதானேனுவென்பேர்சொல்வது-உன்றன் ......... ..... ..... *
கிள்ளாக்கோவிங்கெலாஞ்செல்வது-அடி ..... ... ..... ..... *
பள்ளவழக்கிட்டுமெல்லவெல்லவந்தப்-பழிகாரிநீலிநீயாரடி ..... *

சகுந்தலை-சொல்-தரு

சட்டமாகிநீயேபட்டத்துத்தேவியென் ..... ..... .... ..... ..... *
கண்ணேயென்றன்புடனுரைத்தீர்-அடி ..... ..... ..... .... .... *
பெண்ணேயென்றெந்தனைக்கணைத்தீர்-இப்போ .... ..... ... *
கிட்டவரவேண்டாமெட்டநில்லென்றெனைக் .... ..... ..... *
கேலி செய்ய லாமோ மன்னவா ... ... ... ... ... ... ... *

இராஜன்-சொல்-தரு

இஷ்டமாய்த்தேடினுமஷ்டதிசையிற்பெண் ... ... ..... *
ணங்கனுமேகிடையாதோ-என்றன் ..... .. ... ... ... *
சொந்தத்திற்குத்தடையேதோ-இந்தக் ... ...... ......[யாரடி
சட்டுக்கதைக்கொண்டு கிட்டவந்தாய்ப்போபோ - கள்ளச்சிறுக்கிநீ

சகுந்தலை-சொல்-தரு

ஆதிமனுமுறைநீதிசெப்புமன்னர்க் ... ..... ... ... ... ... *
காகாதையோபொய்விசேஷம்-விட்டுப் ... ... ... .... .... *
போகாதுகாண்பெண்ணின்ரோஷம்-இந்தப் ... ... [மன்னவா *
பேதைமனநோவவேதைசெய்தான்மழை-பெய்யுமோவையத்தின்

இராஜன்-சொல்-தரு

நீதிநெறியெல்லாஞ்சாதகமாய்க்கற்ற .... ... ... .... ... *
நீலியென்பார்மெய்தான்போடி-இந்திர ... ..... .... ..... ..... *
சாலமே னடிகுடி கேடி - உன்றன் ..... .... .... ..... ..... ..... *
வேதனைவந்தென்றன்மேன்மையைவெல்லாது ..... .... ..... *
வீண்பேச்சுப் பேசாதை போடி ..... ..... ..... ..... ..... ..... *

சகுந்தலை-சொல்-வசனம்

அப்பா-மகனேபரதா-என்கண்மணியே (எனம்மா)நானும்மெய்யானபதிவிரதையுமாகி-நீயும்-இந்தமகாராஜனுக்குப்பிறந்தபிள்ளையுமானல்-இந்த-அரசன்சொல்லுகிறபொய்மைமொழிக்கு-அண்டமடமொன்றுவெடிக்காதா - இனியென்னசெய்வேன்கர்த்தனே *

இராஜன்-சொல்-விருத்தம்

இம்-காம்பூதி

என்னதான்கற்றுளித்தவிந்திரஜாலநீலி ..... ..... ..... ..... ..... *

இன்னமும்பொறுத்திருந்தாலிதைவிடவனந்தஞ்சொல்வாள் ...... *
பன்னியவீரரேயிப்பயலையுமிவளையுந்தான் ..... ..... ..... ..... *
மென்னியைப்பிடித்திழுத்துவெளியிலேத்தள்ளுவீரே..... ..... ..... *

வசனம்

ஆ-ஆ-இந்தநீலி- இந்திரஜாலம்-மகேந்திரஜாலம்- என்னதான் கற்றாள்காணும்-இன்னமிவள்வாயைப்பார்த்துக் கொண்டேயிருந்தால்-இவள்- திராணியை- எல்லாமிங்கேசெலுத்துவாள் - ஆரடா-அடாபோர்வீரரே - இந்தப்பையலையும் - இவளையும்- கழுத்தைப் பிடித்துச் சீக்கிரமாய் வெளியிலே தள்ளிவிடுங்கள் (போர்வீரன் சொல்வசனம்)ஆரம்மா(ஏனப்பா)எங்கள்- இராஜா உங்களைக்கழுத்தைப்பிடித்து-வெளியிலேதள்ளி விடச்சொன்னார்- போகிறீர்களா இல்லையா (சகுந்தலைசொல்வசனம்) அப்பா நீங்களெங்களைத் தள்ள வேண்டாம்-நாங்களேபோய் விடுகிறோமப்பா.................... *

சகுந்தலை-சொல்-விருத்தம்

இம்-கண்டா

பெரியோரில்லையோபெண்களையும்பெற்றோ ரில்லையோமானமுள்ள *
உரியோரில்லையோவென்றனுக்கிங் கொருதிக்கில்லையோ நீதிசொல்லும்
அறிவோரில்லையோவொருவருக்குமருளோயில்லையோ யாதொன்றுந் *
தெரியாவேழையென்பங்கிற்றெய்வமில்லையோவோவிதியே ..... *

சகுந்தலை-சொல்-தரு

இம்-கண்டா-தாளம்-ஆதி

அவனிதனிலொருவரக்கிரமஞ்செய்தாரானால் ..... ..... ..... ..... *
அரசர்தண்டிப்பதுண்டுதெய்வமே .... ..... ..... ..... ..... *
அரசர்களேயிப்படியநியாயஞ்செய்வாரானால் .... .... .... *
ஆருடன்சொல்லுவேன்தெய்வமே ..... .... ..... ... *
மிதித்தக்கொம்புமுறிந்துபிடித்தக்கொம்புமொடிந்து .... ........ *
விழுந்தவர்போலானேனதெய்வமே ..... ..... ..... ..... *
வேந்தன்சொன்னவார்த்தையைநம்பினேனெனக்கிந்த ........ .... *
வீதிவருமென்றறியேன்தெய்வமே ..... .... ..... ..... *
விளைந்தபயிரின்மாடுவிட்டுமேய்ந்துதானால் ..... ..... ..... *
வேலியிடுவாருண்டுதெய்வமே ..... ..... .... ..... ..... *
வேலிதானேயிட்டப் பயிரை மேய்ந்து தேயானால் .... .... ... *
வேறென்னசெய்வதுதெய்வமே ..... .... ..... ..... .... *

ஆனை நிழலைப்பார்த்தே யாங்காரங் கொண்டாப்போல்...... ...........*
அகமகிழ்ந் திருந்தேனே தெய்வமே ..... ..... ..... ..... *
ஆனை நிழலுமொருவனுவாகப்போகுமேயென் ..... ..... ..... *
றறியாமற்போனேனே தெய்வமே ..... ..... ..... ..... *
மரத்திலிருந்தகொம்பைமேற்படர்ந்துதென்று ..... ..... ..... *
மகிழ்ச்சியாயிருந்தேனேதெய்வமே ..... ..... ..... ..... *
மாமுங்காணுமலர்ந்தமலையுங்காணுமன்மண்ணில் ..... ..... ..... *
வாடுங்கொடிபோலானேன்தெய்வமே ..... ..... ..... ..... *
நீதியில்லையோநல்ல நிலைமையில்லையோபாரில் ..... ..... ..... *
நிஜமுமில்லையோவையோதெய்வமே ..... ..... ..... ..... *
நீதிநிலைமைவார்த்தை நிஜமாய்ப்பேசினவெல்லாம் ..... .... .... *
நீயறியாயோவையோதெய்வமே ..... ..... .... .... .... *
அண்டநிழலில்லாமல்பரதவிர்த்திடுதலன் ..... ..... ..... ..... ..... *
றயனார்விதிப்படியோதெய்வமே .... ..... ..... ..... ..... *
ஆதியிற்சாட்சியாகவிருந்தவாகாசவாணி ..... ... ..... ..... ..... *
அபயமபயமையோதெய்வமே ..... ... ..... ... ... *

பொது-வசனம்

அகோதெப்படியென்றால்- ஆதியிலே துஷ்டியந்தமகாராஜனுக்குஞ் -சகுந்தலையம்மனுக்கும்- நடந்த -விருத்தாந்தங்களுக்கெல்லாஞ்சாட்சியாகவிருந்த - ஆகாசவாணிவந்துசொல்லுகிறவிதங்காண்க

ஆகாசவாணி- சொல்லுகிற- விருத்தம்

இம்- ஆனந்தபைரவி

மன்னனேசேளாயுன்னுவனத்தினிற்சகுந்தலைக்காய் .... .... ..... *
என்னைநீசாட்சிவைத்தேயியம்பியவாய்மைக்கெல்லாம் .... .... *
இந்நிலமாதுசாட்சியிமையவர்சாட்சிபந்த........ ..... ..... ... *
நன்னிலைத்தவிர்த்துப்பேசல்ஞாயமோமன்னர்மன்ன .... ..... ....*

வசனம்

அகோசேளுந் துஷ்டியந்தமகாராஜனே- ஆதியிலே நீவனவேட்டையாடவந்தபோதுகண்ணுவமகாரிஷியினுடைய- ஆசிரமத்துக்குத்தனித்துவந்துஇந்தச்சகுந்தலையைக்கண்டுமோகங்கொண்டு- நீயேயென்பட்டத்துத்தேவியென்னும்- உன்வயிற்றிற்பிறக்கும் பிள்ளைக்கு- முடிதரிக்கிறேனென்றும் பூமிதேவியையும் -என்னையும்- சகலதேவர்களையுஞ்- சாட்சிவைத்து-இந்தப்- பெண்ணைக்காந்தர்வ

விவாகஞ்செய்து - நாளைமந்திரிகளாலே - வரவழைத்துக் - கொள்ளு கிறேனென்றுசொல்லி - அஸ்தினபுரத்துக்குவந்து - விட்டாய் - அது முதல் - எழுவருஷகாலமாயிருந்து - யிப்போது - உன்னிடத்திற்கு - உனதுகுமாரனுன - பரதமகாராஜனை - அழைத்துக் கொண்டுவந்த மகாபதிவிரதையை - இந்தராஜசபையிலே - பங்கப்படுத்துகிறதுதர்மமல்ல - நான் - திருவுளமறியச்சொல்லுகிறேன் - இவளே - உன்மனையாள் - இந்தப்பிள்ளையே - உமதுகுலசிரோஷ்டனுகியபுத்திரன் - இவர்களுடன் கூடிவாழ்ந்திருப்பையேயாகில் - ஆச்சர்திரார்க்கமாய் - எல்லா நன்மைகளையும் பெற்றுச்சுகமாயிருப்பாய் - துஷ்டியந்த மகாராஜனே ... ... .... .... ..... ... ..... ..... .... ..... *

. பொது - விருத்தம்

இம் - தோடி

வந்தவாகாசவாணிவழுத்திடக்கேட்டபோதே ..... ..... .... .... *
மந்தரப்புயத்துவேந்தர்மனமகிழ்கூரத்தேவ ..... .... ..... .... *
துந்துமிமுழங்கவாணிற்செறுகடல்வையமெங்கும் .... .. ..... *
அந்தரத்திமையோரெல்லாமலர்மழைசொரிந்திட்டாரே ... .... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - சாம்பூதி

அப்பனேவாராயென்றனழகுகண்மணியேவாராய் ... .... .... *
இப்பெரும்புவியையாளுமென்குலக்கொழுந்தேவாராய் ... .... *
ஒப்பிலாப்பரதனென்னுமொளிர்மணிக்குன்றேவாராய் ... ..... *
செப்புமென்மகனேவாராய்ச்செல்வனேயருகில்வாராய் ...... .... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்பூதி

எந்தனுருயிரேயின்னேயென்னிருகண்ணேபொன்னே ... ..... *
உந்தனுக்குளாத்தவெல்லாமுன்னமையேமேலுமிந்த ....... ....... *
மைந்தனிவ்வுலகையாளமனதினிலெண்ணிலேதக ... .... .... *
நிந்தையில்லாமற்செய்தேனீபொறுத்தருளுவாயே .......... .... *

வசனம்

சேளும்மென்னுருயிரே - என்னிருகண்மணியே - எனதுகாமரசமே - நான் - உனக்குச்சொன்ன வார்த்தைகளெல்லா மெய்தான் - ஆகிலும் - நீவந்தமாத்திரத்தில் - என்பிள்ளைதான் - பெண்சாதிதானென்று - ஒப்புக்கொள்வனேயானுல் - உலகத்திலொருத்தரும் - நம்பார்

ன் - இந்தப்பிள்ளைக்கு - நாளைமுடிசூட்டச்செல்லாது - ஆதலால் - நிந்தையில்லாதிருக்கச் - செய்தேனேயல்லாது - வேறொன்றுமில்லை - நீபொறுத்துக்கொள்ளவேண்டும்பெண்ணே - ... ..... ..... ..... *

இராஜன் - சொல் - விருத்தம்

இம் - காம்போதி

அனைவருங்கேளீர்முன்னேயடவியிற்றனித்தேயிந்த... ..... .. ... *
வனிதையைச்சேர்ந்ததுண்டுமற்றவரறியாரெந்தன்........... .... *
மனைவிதான்மகன்றானிந்தவழுத்துமைந்தனுக்குநாளைப்... ..... *
புனைமணிமகுடஞ்சூட்டப்புனிதமோபுகலுவீரோ............. .... *

வசனம்

கேளுங்களிந்தச் சபையிலுள்ளவர்களே - ஆதியிலே - வனவேட்டைக்குச் சென்றபோது - நான்மாத்திரந் தனித்துக்கண்ணுவமகாரிஷியினுடைய - ஆசிரமத்துக்குப்போய் - இந்தப் பெண்ணைக்கண்டு மோகித்துக் - காந்தர்வ விவாகஞ்செய்து கொண்டதுமெய்தான் - அப்போது - பூமிதேவியையும் - ஆகாசவாணியையுஞ் சாட்சிவைத்ததுண்டு - அவர்கள்வந்து - யாவருமறியச்சொல்லவேண்டுமென்று - நானறியமாட்டேனென்றுவாதித்தேனேயல்லாது - வேறேயாதொருசந்தேகமில்லை - இப்பவும் - நாளைத்தினம் - எனதுபுத்திரனாகிய பரத மகாராஜனுக்கு - மகுடாபிஷேகஞ்செய்ய நினைத்திருக்கிறேன் - செய்யலாமா - சொல்லுங்கள் - இந்தச்சபையிலுள்ளோர்களே *

சபையிலுள்ள - அரசர்கள் சொல்லுகிற - விருத்தம்

இம் - ஆனந்தபைரவி

மகிபதிதுஷ்டியந்தமகராஜேகேளீர்நாளை ... ... ..... ... ... *
அகமகிழ்ந்தினிதாய்ப்பெற்றஅருமைநின்மைந்தனுக்கு.... ...... *
வகையுடன்மகுடஞ்சூட்டிமண்டலத்தரசுசெய்ய.... ........... .... *
விகிதமேசமிசையில்லைவினவினபடிச்செய்வீரோ ..... ..... ..... .... *

வசனம்

கேளும் - ராஜபரமேஸ்பரா - இந்தப்பிள்ளை - உமது - பிள்ளைதான் இந்த - அம்மாள் - உமது - மனைவிதானென்று - மெய்த்தெய்வமாகிய ஆகாசவாணிவந்து - யாவருமறியச்சொன்ன - பின்பு - உமதுமனதிற் சந்தோஷமானதுபோல - நாங்கள்மிகவுஞ் - சந்தோஷத்தையடைந்தோம் - தேவரீரெண்ணப்படியே - நாளைத்தினம் - பரதமகாராஜனு

சகு-மகுடாபிஷேகஞ்செய்யலாம்-ராஜபரமேஸ்வரா........ ..... ✻

மந்திரிகள்-சொல்-விருத்தம்

இம்-ஆனந்தபைரவி

இத்தைநாமறியோமையையோவிவளவளென்றேசொல்லி ... ...... ✻
உத்தமிபெற்றதாயேயுன்றனையிகழ்ந்தோமம்மா ........ ...... ✻
எத்தனைப்பிழைசெய்தாலுமெங்கண்மேற்கிருபைகூர்ந்துன் ..... ✻
சித்தம்வைத்தருளவேண்டுந்திருவடிபோற்றிபோற்றி.... .... .... ✻

வசனம்

சரணஞ்சரணம்-ராஜபரமேஸ்வரி-உமக்கும்-மகாராஜனுக்கும் முன்னடந்த-விர்த்தாந்தங்களை-யெல்லாம்-நாங்களறியாமல்-புல்லறிவினாலே-அவமரியாதைபண்ணினோம்-அடியேங்கள்செய்த பிழைகளைப்பொறுத்தெங்களைப்பாதுகாக்கவேண்டுமம்மாதாயே.

பொது-விருத்தம்

இம்-கலியாணி

இன்னவைநிகழுங்காலையெழுநிலவேந்தர்சூழ .... ... ... .... ✻
மன்னியமறையோர்வாழ்த்தப்பாவலர்புகழ்ந்துபோற்ற... ....... ✻
துன்னுபல்லியமுழங்கத்துஷ்டியந்தராஜனின்ற .... .... ..... ✻
மன்னியபரதனுக்குமணிமுடிசூட்டினானே ..... .... .... .. .... ✻

வாழி-விருத்தம்

இம்-தோடி

தேவர்கள்வாழிவாழிதிகழஸ்தினபுரந்தான்வாழி .... .... ..... .... ✻
மூவர்கள்வாழிவாழிமுடிதுஷ்டியந்தன்வாழி .... ..... ... ... ✻
காவலர்வாழிவாழிசகுந்தலைமின்வாழி ....... ...... ...... ✻
பாவலர்வாழிவாழிபரதனும்வாழிவாழி.... ........... ....... ........ ✻

சகுந்தலைவிலாசம்.

